

ஸ்ரீ:

ஸ்ரீஸூக்திமாலா　　　　　　　　　　　　　　　　　　　　மலர்-20

பெரியவாச்சான்பிள்ளையும்,
அழகியமணவாளப்பெருமாள்நாயனாரும் அருளிய

# பெரியதிருமடல் வ்யாக்யானங்கள்

[திவ்யப்ரபந்தஸார வ்யாக்யானத்துடன்]

[ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு]

[ மூன்றாம் பதிப்பு ]

—[*]—



பதிப்பாசிரியர் & கிடைக்குமிடம்:—

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி,
ஆசிரியர்:— ''ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்''
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளிவருகிறது.



விலை ரூ.40-00　　　1995　　　தபால் தனி

LIBRA OFFSET PRINTERS, THANJAVUR Ph. 22767

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முகவுரை

திருமங்கையாழ்வார் அருளிய திருமடல் பிரபந்தங்கள் இரண்டு. சிறியதிருமடல் க்ருஷ்ணன் விஷயமாகவும், பெரியதிருமடல் அர்ச்சாமூர்த்தியான திருநறையூர் நம்பி விஷயமாகவும் அருளிச்செய்யப் பெற்றவை. நாயகன் அல்லது நாயகி எதிர்த்தலையைப் பெருத ரோஷத்தாலே, அவ்வெதிர்த்தலையை உலகெங்கும் தூற்றத் துணியும் துணிவை வெளிப்படுத்துவது 'மடலூர்தல்' என்று வழங்கப்படும். நாயகீ பாவத்தை அடைந்த திருமங்கை யாழ்வார் இவ்விரு மடல்களிலும் இத்துணிவை வெளிப் படுத்துகிறார். ப்ரேமம் விஞ்சிச் செல்லும்போது ஸ்வ ரூபத்தை மறக்கையாலே ஏற்படும் அதிப்ரவ்ருத்திகளில் இது ஒரு வகையாகும். மடலூர்தல், நோன்புநோற்றல், மங்களாசாஸநம் செய்தல் முதலானவை ஞானம் கனிந்த நலமான பக்தியின் மிகுதியினால் உண்டாகும் அஜ்ஞானத் தாலே ஏற்படுமவையாகையாலே அடிக்கழஞ்சுபெறும் (சிறந்தவையாம்) என்று ஆசார்யர்கள் அருளிச்செய்வர்.

**"கடலன்ன காமத்த ராயினும் மாதர்**
**மடலூரார் மற்றையார் மேல்"**

**"கடலன்ன காம முழந்தும் மடலேறாப்**
**பெண்ணிற் பெருந்தக்க தில்"** [திருக்குறள் 1137]

என்று தமிழ் நூல்களில் பெண்கள் தம் அடக்கத்தை விட்டு மடலூர்தல் தகாது என்று சொல்லியிருப்பதைத் தாம் ஏற்கவில்லை என்பதையும், இவ்விஷயத்தில் "ஆணை யினும், பெண்ணையினும் ஆசை பெருகப் பெற்றார் அதி ப்ரவ்ருத்திகளில் இழியலாம்" என்னும் வடமொழி நூல் நெறியையே தாம் பின்பற்றுவதாகவும் இவ்வாழ்வார் இம் மடலில் (38, 39, 40 கண்ணிகளில்) பாடியிருப்பது காணத் தக்கது. ஆசை கரைகட்டாக் காவேரிபோல் பெருகி வரும்போது அது நூல் வரம்புகளைத் தகர்த்தெறிந்துவிடும் என்னும் கருத்தின் நயம் சுவைமிக்கது.

சிறியதிருமடலிலே இவ்வாழ்வார் கண்ணன் விஷய மாக மடலூரத் துணிந்தார். அவன் காலாந்தரத்தில் இருந்தவனாய், தானும் ஒக்க மடலெடுக்கக்கூடிய சுனை

கேடன்கையாலே அது பலிக்கவில்லை என்று கொண்டு, நீர்மையின் எல்லை நிலமாகத் தம் காலத்திலேயே விளங்கிய அர்ச்சாவதார விஷயமாகப் பெரியதிருமடலிலே மடலெடுக்கத் துணிகிறார். "மடலூர்தும்" [திருவாய் 5-3-9] என்ற நம்மாழ்வாரைப்போலே இவரும் எம்பெருமானை வரவழைப்பதற்காக மடலூர்வதாக இம்மடல்களில் பயமுறுத்துகிறாரேயொழிய உண்மையில் மடலூரவில்லையாகையால் இறுதியில் பாரதந்த்ரிய ஸ்வரூபத்திற்கும் அழிவில்லை என்பது காணத்தக்கது.

சிறியதிருமடல் இவ்வருஷம் கார்த்திகையில் கார்த்திகை நன்னாளிலே இரண்டாம் பதிப்பாக நம்மால் வெளியிடப்பெற்றது. பெரியதிருமடலின் இரண்டாம் பதிப்பான இது பெரியவாச்சான்பிள்ளையின் அவதாரஸ்தலமான சங்கநல்லூரில், அவரது அவதார ஸ்தலத்தில் ஸந்நிதி ஜீர்ணோத்தாரணமாகி மஹா ஸம்ப்ரோக்ஷணம் நடைபெறும் தையில் அனுஷத்தன்று (26—1—76) வெளியிடப்படுகிறது. இப்பதிப்பில் பெரியவாச்சான்பிள்ளையின் ஸங்க்ரஹமான வ்யாக்யானமும், அதற்கு விவரணமாக அமைந்திருக்கும் எளியநடையிலான நமது விவரணமும், (முதல் பதிப்பிலில்லாத) அழகியமணவாளப்பெருமாள் நாயனார் வ்யாக்யானமும் சேர்த்து வெளியிடப்படுகின்றன. நாயனார் வ்யாக்யானமாகத் தெலுங்கு லிபியில் க்ரந்த முத்ராபக ஸபைப்பதிப்பில் வெளியிடப்பட்டிருக்கும் வ்யாக்யானம் ஓர் பழைய பதிப்பில் நம்பிள்ளை வ்யாக்யானமாக அச்சிடப்பட்டுள்ளது. இவ்யாக்யானத்தில் "பட்டர் அருளிச்செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்" என்று சில இடங்களில் வருகையால், இது நம்பிள்ளை வ்யாக்யானமாயிருக்கத் தகுதியில்லை என விளங்கும். வாக்யசைலியைக்கொண்டு பார்க்கும்போது திருப்பாவை ஆறாயிரப்படியை ஒத்திருக்கையாலே நாயனார் வ்யாக்யானமே இது என்று அறுதியிடத் தட்டில்லை. இவ்வண்ணமே மற்ற வ்யாக்யானங்களும் வெளிவரப் பெரியவாச்சான்பிள்ளை பேரருள் புரிவாராக.

ராக்ஷஸ-ஸு
தையில் அனுஷம்

தாஸன்,
ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
'ஸுதர்சனம்' ஆசிரியர்.

ஸ்ரீ:

திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமடல்

பக்கம் **தனியன்**

1 பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிசெய்யும்
நன்னுதலீர் நம்பி நறையூரர்—மன்னுலகில்
என்னிலைமை கண்டு மிரங்காரே யாமாகில்
மன்னு மடலூர்வன் வந்து.

---

21 மன்னிய பல்பொறிசே ராயிரவாய் வாளரவின்
26 சென்னி மணிக்குடுமித் தெய்வச் சுடர்நடுவுள் 1
28 மன்னிய நாகத் தணைமேலோர் மாமலைபோல்
மின்னு மணிமகர குண்டலங்கள் வில்வீசத் 2
30 துன்னிய தாரகையின் பேரொளிசே ராகாசம்
என்னும் விதானத்தின் கீழால்—இருசுடரை 3
மன்னும் விளக்காக வேற்றி மறிகடலும்
34 பன்னு திரைக்கவரி வீச நிலமங்கை 4
தன்னை முனநா ளளவிட்ட தாமரைபோல்
மன்னிய சேவடியை வானியங்கு தாரகைமீன் 5
36 என்னும் மலர்ப்பிணைய லேய்ந்த மழைக்கூந்தல்
38 தென்ன னுயர்பொருப்புந் தெய்வ வடமலையும் 6
என்னு மிவையே முலையா வடிவமைந்த
42 அன்ன நடைய வணங்கே(ய்) அடியிணையைத் 7
44 தன்னுடைய வங்கைகளால் தான்தடவத் தான்
கிடந்தோர்
உன்னிய யோகத் துறக்கந் தலைக்கொண்ட 8
46 பின்னைத் தன்னாபி வலயத்துப் பேரொளிசேர்
மன்னிய தாமரை மாமலர்பூத் தம்மலர்மேல் 9
48 முன்னந் திசைமுகனைத் தான்படைக்க—மற்றவனும்
50 முன்னம் படைத்தனன் நான்மறைகள் அம்மறைதான் 10
52 மன்னு மறம்பொரு ளின்பம்வீ டென்றுலகில்
நன்னெறி மேம்பட்டன நான்கன்றே நான்கினிலும் 11
பின்னைய து பின்னைப் பெயர்தரு மென்பதோர்
54 தொன்னெறியை வேண்டுவார் வீழ்கனியு மூழிலையும் 12
56 என்னு மிவையே நுகர்ந்துடலம் தாம்வருந்தித்
58 துன்னு மிலைக்குரம்பைத் துஞ்சியும் வெஞ்சுடரோன் 13
மன்னு மழல்நுகர்ந்தும் வண்தடத்தி னுட்கிடந்தும்
60 இன்னதோர் தன்மையரா யீங்குடலம் விட்டெழுந்து 14
தொன்னெறிக்கட் சென்றா ரெனப்படுஞ் சொல்லல்லால்
இன்னதோர் காலத் தினையா ரிதுபெற்றார் 15
என்னவுங் கேட்டறிவ தில்லை உளதென்னில்

62 மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள் 16
அன்னதோ ரில்லியி னூடுபோய் வீடென்னும்
தொன்னெறிக்கட் சென்றாரைச் சொல்லுமின்கள்
சொல்லாதே 17
64 அன்னதே பேசு மறிவில் சிறுமனத்து ஆங்கு
அன்னவரைக் கற்பிப்போம் யாமே அதுநிற்க 18
66 முன்னநான் சொன்ன அறத்தின் வழிமுயன்ற
38 அன்னவர்தாங் கண்டீர்க ளாயிரக்கண் வானவர்கோன் 19
70 பொன்னகரம் புக்கமரர் போற்றிசெப்பப்
பொங்கொளிசேர்
கொன்னவிலுங் கோளரிமாத் தான் சுமந்த கோலஞ்சேர்20
72 மன்னிய சிங்கா சனத்தின்மேல் வாணெடுங்கண்
கன்னியரா லிட்ட கவரிப் பொதியவிழ்ந்தாங்கு 21
இன்னிளம்பூந் தென்ற லியங்க மருங்கிருந்த
74 மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார் வெண்முறுவல்22
முன்னம் முகிழ்த்த முகிழ்நிலா வந்தரும்ப
அன்னவர்தம் மானோக்க முண்டாங் கணிமலர்சேர் 23
76 பொன்னியல் கற்பகத்தின் காடுடுத்த மாடெல்லாம்
மன்னிய மந்தாரம் பூத்த மதுத்திவலை 24
இன்னிசை வண்டமருஞ் சோலைவாய் மாலைசேர்
மன்னிய மாமயில்போல் கூந்தல் மழைத்தடங்கண் 25
மின்னிடை யாரோடும் விளையாடி வேண்டிடத்து
78 மன்னு மணித்தலத்து மாணிக்க மஞ்சரியின் 26
மின்னி னொளிசேர் பளிங்கு விளிம்படுத்த
மன்னும் பவளக்கால் செம்பொன்செய் மண்டபத்துள் 27
அன்ன நடைய வரம்பையர்தங் கைவளர்த்த
இன்னிசையாழ் பாடல்கேட் டின்புற் றிருவிசும்பில் 28
80 மன்னு மழைதவழும் வாணிலா நீண்மதிதோய்
மின்னி னொளிசேர் விசும்பூரும் மாளிகைமேல் 29
மன்னு மணிவிளக்கை மாட்டி மழைக்கண்ணார்
82 பன்னு விசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல் 30
துன்னிய சாலேகஞ் சூழ்கதவுந் தாள்திறப்ப
அன்ன முழக்க நெரிந்துக்க வாணீலச் 31
சின்ன நறுந்தாது சூடியோர் மந்தாரம்
துன்னு நறுமலரால் தோள்கொட்டிக் கற்பகத்தின் 32
84 மன்னு மலர்வாய் மணிவண்டு பின்தொடர
இன்னிளம் பூந்தென்றல் புகுந்தீங் கிளமுலைமேல் 33
நன்னறுஞ் சந்தனச்சே றுள்புலர்த்தத் தாங்கருஞ்சீர்
மின்னிடைமேல் கைவைத் திருந்தேந் திளமுலைமேல் 34
86 பொன்னரும் பாரம் புலம்ப வகங்குழைந்தாங்கு
இன்ன வுருவி லிமையாத் தடங்கண்ணார் 35

அன்னவர்தம் மாஞேக்க முண்டாங் கணிமுறுவல்
இன்னமுதம் மாந்தி யிருப்பர் இதுவன்றே 36
அன்ன வறத்தின் புயனுவ தொண்பொருளும்
அன்ன திறத்ததே யாதலால் காமத்தின் 37
மன்னும் வழிமுறையே நிற்றுநாம் மாஞேக்கின்
அன்ன நடையா ரலரேச ஆடவர்மேல் 38
மன்னு மட லூரா ரென்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவ துண்டதனை
யாங்தெளியோம் 39
மன்னும் வடநெறியே வேண்டிஞேம் வேண்டாதார்
தென்னன் பொதியில் செழுஞ்சந்த னக்குழம்பின் 40
அன்னதோர் தன்மை யறியாதார் ஆயன்வேய்
இன்னிசை யோசைக் கிரங்காதார் மால்விடையின் 41
மன்னு மணிபுலம்ப வாடாதார் பெண்ணைமேல்
பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு 42
உன்னி யுடலுருகி நையாதார் உம்பர்வாய்த்
துன்னு மதியுகுத்த தூநிலா நீணெருப்பில் 43
தம்முடலம் வேவத் தளராதார் காமவேள்
மன்னுஞ் சிலைவாய் மலர்வாளி கோத்தெய்யப் 44
பொன்னெடு வீதி புகாதார் தம்பூவணைமேல்
சின்ன மலர்க்குழலு மல்குலு மென்முலையும் 45
இன்னிள வாடை தடவத்தாங் கண்டுயிலும்
பொன்னனையார் பின்னுந் திருவுறுக—போர்வேந்தன் 46
தன்னுடைய தாதை பணியா லரசொழிந்து
பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு 47
மன்னும் வளநாடு கைவிட்டு மாதிரங்கள்
மின்னுருவில் வெ(வி)ண்டோர் திரிந்து வெளிப்பட்டுக் 48
கன்னிரைந்து தீய்ந்து கழையுடைந்து கால்சுழன்று
பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக் 49
கொன்னவிலும் வெங்கானத் தூடு கொடுங்கதிரோன்
துன்னு வெயில்வறுத்த வெம்பரல்மேல் பஞ்சடியால் 50
மன்ன னிராமன்பின் வைதேவி யென்றுரைக்கும்
அன்ன நடைய வணங்கு நடந்திலளே 51
பின்னுங் கருநெடுங்கண் செவ்வாய்ப் பிணைநோக்கின்
மின்னனைய நுண்மருங்குல் வேகவதி யென்றுரைக்கும் 52
கன்னிதன் இன்னுயிராங் காதலனைக் காணுது
தன்னுடைய முன்தோன்றல் கொண்டேகத்
தான்சென்றங்கு 53
அன்னவனை நோக்கா தழித்துரப்பி வானமருள்
கன்னவில்தோள் காளையைக் கைப்பிடித்து
மீண்டும்போய்ப் 54

116 பொன்னவிலு மாகம் புணர்ந்திலளே—பூங்கங்கை
முன்னம் புனல்பரக்கும் நன்னாடன் மின்னாடும் 55
118 கொன்னவிலும் நீள்வேல் குருக்கள் குலமதலை
தன்னிகரொன் றில்லாத வென்றித் தனஞ்சயனைப் 56
பன்னாக ராயன் மடப்பாவை பாவை தன்
மன்னிய நாணச்சம் மடமென் றிவையகலத் 57
120 தன்னுடைய கொங்கை முகநெறியத் தானவன்றன்
பொன்வரை யாகந் தழீஇக்கொண்டு போய்த்தனது 58
நன்னகரம் புக்கு நயந்தினிது வாழ்ந்ததுவும்
முன்னுரையிற் கேட்டறிவதில்லையே—சூழ்கடலுள் 59
பொன்னகரஞ் செற்ற புரந்தரனோ டொக்கும்
122 மன்னவன் வாண னவுணர்க்கு வாள்வேந்தன் 60
தன்னுடைய பாவை யுலகத்துத் தன்னொக்குங்
கன்னியரை யில்லாத காட்சியாள் தன்னுடைய 61
இன்னுயிர்த் தோழியா லெம்பெருமா னீன்றுழாய்
மன்னு மணிவரைத்தோள் மாயவன் பாவியேன் 32
124 என்னை யிதுவிளைத்த ஈரிரண்டு மால்வரைத்தோள்
மன்னவன்றன் காதலனை மாயத்தாற் கொண்டுபோய் 63
கன்னிதன் பால்வைக்க மற்றவனோ டெத்தனையோர்
மன்னிய பேரின்ப மெய்தினாள்—மற்றிவைதான் 64
126 என்னாலே கேட்டீரே ஏழைகா ளென்னுரைக்கேன்
மன்னு மலையரையன் பொற்பாவை வாணிலா 65
மின்னு மணிமுறுவல் செவ்வா யுமையென்னும்
128 அன்ன நடைய வணங்கு நுடங்கிடைசேர் 66
பொன்னுடம்பு வாடப் புலனைந்தும் நொந்தகலத்
130 தன்னுடைய கூழைச் சடாபாரந் தான்தரித்தாங்கு 67
அன்ன வருந்தவத்தி னூடுபோய் ஆயிரந்தோள்
132 மன்னு கரதலங்கள் மட்டித்து மாதிரங்கள் 68
மின்னி யெரிவீச மேலெடுத்த சூழ்கழற்கால்
பொன்னுலக மேழுங் கடந்தும்பர் மேற்சிலும்ப 69
மன்னு குலவரையும் மாருதமுந் தாரகையும்
தன்னி னுடனே சுழலச் சுழன்றாடும் 70
134 கொன்னவிலும் மூவிலைவேற் கூத்தன் பொடியாடி
அன்னவன்றன் பொன்னகலஞ் சென்றாங்கணைந்திலளே 71
136 பன்னி யுரைக்குங்காற் பாரதமாம்—பாவியேற்கு
என்னுறுநோய் யானுரைப்பக் கேண்மின்—இரும்
பொழில் சூழ் 72
138 மன்னு மறையோர் திருநறையூர் மாமலைபோல்
பொன்னியலு மாடக் கவாடம் கடந்துபுக்கு 73
140 என்னுடைய கண்களிப்ப நோக்கினேன் நோக்குதலும்
மன்னன் திருமார்பும் வாயு மடியிணையும் 74

142 பன்னு கரதலமும் கண்களும் பங்கயத்தின்
பொன்னியல் காடோர் மணிவரைமேல் பூத்ததுபோல் 75
144 மின்னி யொளிபடைப்ப வீணும் தோள்வளையும்
மன்னிய குண்டலமு மாரமும் நீண்முடியும் 76
துன்னு வெயில் விரித்த சூளா மணியிமைப்ப
146 மன்னு மரகதக் குன்றின் மருங்கேயோர் 77
இன்னிள வஞ்சிக் கொடியொன்று நின்றதுதான்
அன்னமாய் மானா யணிமயிலா யாங்கிடையே 78
148 மின்னா யிளவே யிரண்டா யிணைச்செப்பாய்
முன்னாய தொண்டையாய்க் கெண்டைக் குலமிரண்டாய் 79
அன்ன திருவுருவ நின்ற தறியாதே
150 என்னுடைய நெஞ்சு மறிவு மினவளையும் 80
பொன்னியலும் மேகலையு மாங்கொழியப் போந்தேற்கு
மன்னு மறிகடலு மார்க்கும் மதியுகுத்த 81
இன்னிலா வின்கதிரு மென்றனக்கே வெய்தாகும்
152 தன்னுடைய தன்மை தவிரத்தா னென்கொலோ 82
தென்னன் பொதியில் செழுஞ்சந்தின் தாதளைந்து
மன்னிவ் வுலகை மணங்கமழ்ப்ப வந்தியங்கும் 83
இன்னிளம்பூந் தென்றலும் வீசு மெரியெனக்கே
154 முன்னிய பெண்ணைமேல் முள்முளரிக் கூட்டகத்து 84
பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலும்
என்னுடைய நெஞ்சுக்கோ ரீர்வாளா மென்செய்கேன் 85
கன்னவில்தோள் காமன் கருப்புச் சிலைவளையக்
156 கொன்னவிலும் பூங்கணைகள் கோத்துப் பொதவணைந்து 86
தன்னுடைய தோள்கழிய வாங்கித் தமியேன்மேல்
என்னுடைய நெஞ்சே யிலக்காக வெய்கின்றான் 87
பின்னிதனைக் காப்பீர்தா னில்லையே பேதையேன்
158 கன்னவிலும் காட்டகத்தோர் வல்லிக் கடிமலரின் 88
நன்னறு வாசமற் றாரானு மெய்தாமே
மன்னும் வறுநிலத்து வாளாங் குகுத்ததுபோல் 89
என்னுடைய பெண்மையு மென்னலனு மென்முலையும்
160 மன்னு மலர்மங்கை மைந்தன் கணபுரத்துப் 90
பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம்

தோயாவேல்

என்னிவைதான் வாளா வெனக்கே பொறையாகி 91
162 முன்னிருந்து மூக்கின்று மூவாமைக் காப்பதோர்
மன்னு மருந்தறிவீ ரில்லையே—மால்விடையின் 92
164 துன்னு பிடரெருத்துத் தூக்குண்டு வன்தொடரால்
கன்னியர் கண்மிளிரக் கட்டுண்டு மாலைவாய்த் 93
தன்னுடைய நாவொழியா தாடும் தனிமணியின்
166 இன்னிசை யோசையும் வந்தென் செவிதனக்கே 94

166 கொன்னவிலு மெஃகில் கொடிதாய் நெடிதாகும்
என்னிதனைக் காக்குமா சொல்லீர்—இதுவிளைத்த 95
168 மன்னன் நறுந்துழாய் வாழ்மார்பன் மாமதிகோள்
முன்னம் விடுத்த முகில்வண்ணன் காயாவின் 96
சின்ன நறும்பூந் திகழ்வண்ணன் வண்ணம்போல்
170 அன்ன கடலை மலையிட் டணைகட்டி 97
மன்ன னிராவணனை மாமண்டு வெஞ்சமத்துப்
172 பொன்முடிகள் பத்தும் புரளச் சரந்துரந்து 98
தென்னுலக மேற்றுவித்த சேவகனை ஆயிரக்கண்
மன்னவன் வானமும் வானவர்தம் பொன்னுலகும் 99
தன்னுடைய தோள்வலியால் கைக்கொண்ட தானவனைப்
174 பின்னோ ரரியுருவ மாகி யெரிவிழித்துக் 100
கொன்னவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே வல்லாளன்
மன்னு மணிக்குஞ்சி பற்றி வரவீர்த்துத் 101
176 தன்னுடைய தாள்மேல் கிடாத்தி அவனுடைய
பொன்னகலம் வள்ளுகிரால் போழ்ந்து புகழ்படைத்த 102
மின்னிலங்கு மாழிப் படைத்தடக்கை வீரனை
178 மன்னிவ் வகலிடத்தை மாமுதுநீர் தான்விழுங்கப் 103
பின்னுமோ ரேனமாய்ப் புக்கு வளைமருப்பின்
கொன்னவிலும் கூர்நுதிமேல் வைத்தெடுத்த கூத்தனை 104
180 மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால்
மின்னு மிருசுடரும் விண்ணும் பிறங்கொளியும் 105
தன்னி னுடனே சுழல மலைத்திரித்தாங்கு
இன்னமுதம் வானவரை யூட்டி அவருடைய 106
மன்னும் துயர்கடிந்த வள்ளலை—மற்றன்றியும்
182 தன்னுருவ மாரு மறியாமல் தானங்கோர் 107
மன்னும் குறளுருவின் மாணியாய் மாவலிதன்
பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து போர்வேந்தர் 108
184 மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி
என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் 109
186 மன்னா தருகென்று வாய்திறப்ப மற்றவனும்
என்னால் தரப்பட்ட தென்றலுமே அத்துணைக்கண் 110
மின்னார் மணிமுடிபோய் விண்தடவ மேலெடுத்த
பொன்னார் கனைகழற்கா லேழுலகும் போய்க்கடந்தங்கு 111
188 ஒன்னா வசுரர் துளங்கச் செலநீட்டி
மன்னிவ் வகலிடத்தை மாவலியை வஞ்சித்துத் 112
தன்னுலக மாக்குவித்த தாளானை—தாமரைமேல்
190 மின்னிடையாள் நாயகனை விண்ணகருள்
பொன்மலையைப் 113
பொன்னி மணிகொழிக்கும் பூங்குடந்தைப்
போர்விடையைத்

190 தென்னன் குறுங்குடியுள் செம்பவளக் குன்றினை 114
மன்னிய தண்சேறை வள்ளலை மாமலர்மேல்
192 அன்னம் துயிலு மணிநீர் வயலாலி 115
என்னுடைய வின்னமுதை யெவ்வுள் பெருமலையைக்
கன்னி மதில்சூழ் கணமங்கைக் கற்பகத்தை 116
மின்னை யிருசுடரை வெள்ளறையுள் கல்லறைமேல்
194 பொன்னை மரதகத்தைப் புட்குழியெம் போரேற்றை 117
மன்னு மரங்கத்தெம் மாமணியை வல்லவாழ்
196 பின்னை மணாளனைப் பேரில் பிறப்பிலியைத் 118
தொன்னீர்க் கடல்கிடந்த தோளா மணிச்சுடரை
என்மனத்து மாலை யிடவெந்தை யீசனை 119
198 மன்னும் கடன்மல்லை மாயவனை வானவர்தம்
சென்னி மணிச்சுடரைத் தண்கால் திறல்வலியைத் 120
தன்னைப் பிறரறியாத் தத்துவத்தை முத்தினை
அன்னத்தை மீனை யரியை யருமறையை 121
200 முன்னிவ் வுலகுண்ட மூர்த்தியைக் கோவலூர்
மன்னு மிடைகழியெம் மாயவனைப் பேயலறப் 122
பின்னும் முலையுண்ட பிள்ளையை அள்ளல்வாய்
அன்ன மிரைதே ரழுந்தூ ரெழுஞ்சுடரைத் 123
202 தென்தில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை
மின்னி மழைதவழும் வேங்கடத்தெம் வித்தகனை 124
மன்னனை மாலிருஞ் சோலை மணாளனைக்
கொன்னவிலு மாழிப் படையானைக் கோட்டியூர் 125
204 அன்ன வுருவி லரியைத் திருமெய்யத்து
இன்னமுத வெள்ளத்தை யிந்தளூ ரந்தணனை 126
மன்னு மதிட்கச்சி வேளுக்கை யாளரியை
மன்னிய பாடகத்தெம் மைந்தனை—வெஃகாவில் 127
206 உன்னிய யோகத் துறக்கத்தை ஊரகத்துள்
அன்னவனை யட்ட புயகரத்தெம் மானேற்றை 128
என்னை மனங்கவர்ந்த வீசனை வானவர்தம்
முன்னவனை மூழிக் களத்து விளக்கினை 129
208 அன்னவனை யாதனூ ராண்டளக்கு மையனை
நென்னலை யின்றினை நாளையை நீர்மலைமேல் 130
மன்னு மறைநான்கு மானானைப் புல்லாணித்
தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில் 131
210 மன்னு மணிமாடக் கோயில் மணாளனை
நன்னீர்த் தலைச்சங்க நாண்மதியை நான்வணங்கும் 132
கண்ணனைக் கண்ண புரத்தானைத் தென்னறையூர்
மன்னு மணிமாடக் கோயில் மணாளனைக் 133
212 கன்னவில்தோள் காளையைக் கண்டாங்குக் கைதொழுது
என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான் 134

214 தன்னருளு மாகமும் தாரானேல் தன்னைநான்
216 மின்னிடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்விடத்தும்135
தன்னடியார் முன்பும் தரணி முழுதாளும்
கொன்னவிலும் வேல்வேந்தர் கூட்டகத்தும்
நாட்டகத்தும் 136
218 தன்னிலை யெல்லா மறிவிப்பன் தான்முனநாள்
மின்னிடை யாய்ச்சியர்தம் சேரிக் களவின்கண் 137
220 துன்னு படல் திறந்து புக்குத் தயிர்வெண்ணெய்
தன்வயிறார விழுங்கக் கொழுங்கயற்கண் 138
மன்னு மடவோர்கள் பற்றியோர் வான்கயிற்றால்
222 பின்னு முரலோடு கட்டுண்ட பெற்றிமையும் 139
அன்னதோர் பூதமா யாயர் விழவின்கண்
துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை 140
முன்னிருந்து முற்றத்தான் துற்றிய தெற்றெனவும்
224 மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதனாய் 141
தன்னை யிகழ்ந்துரைப்பத் தான்முனநாள் சென்றதுவும்
மன்னு பறைகறங்க மங்கையர்தம் கண்களிப்ப 142
226 கொன்னவிலும் கூத்தனாய்ப் பேர்த்தும் குடமாடி
என்னிவ னென்னப் படுகின்ற வீடறவும் 143
தென்னிலங்கை யாட்டி யரக்கர் குலப்பாவை
மன்ன னிராவணன்றன் நல்தங்கை வாளெயிற்றுத் 144
துன்னு சுடுசினத்துச் சூர்ப்பணகாச் சோர்வெய்திப்
228 பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால் 145
தன்னை நயந்தாளைத் தான்முனிந்து மூக்கரிந்து
மன்னிய திண்ணெனவும் வாய்த்த மலைபோலும் 146
தன்னிகரொன் றில்லாத தாடகையை மாமுனிக்காத்
230 தென்னுலக மேற்றுவித்த திண்டிறலும் மற்றிவைதான் 147
உன்னி யுலவா வுலகறிய வூர்வன்நான்
முன்னி முளைத்தெழுந் தோங்கி யொளிபரந்த 148
மன்னியபூம் பெண்ணை மடல்.

## கம்பர் பாடல்

232 என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான்
தன்னருளு மாகமும் தாரானேல்—பின்னைப்போய்
ஒண்டுறைநீர் வேலையுலகறிய யூர்வன்நான்
வண்டறை பூம் பெண்ணை மடல்.

233 மண்ணில் பொடிப்பூசி வண்டிரைக்கும் பூச்சூடி
பெண்ணை மடல்பிடித்துப் பின்னே—அண்ணல்
திருநறையூர் நின்றபிரான் தேர்போகும் வீதி
பொருமறையாச் செல்வம் பொலிந்து.

—❋—

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# பிள்ளை திருநறையூரரையர் அருளிச்செய்த
# பெரியதிருமடல் தனியன்

**பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிசெயும்**
**நன்னுதலீர் நம்பி நறையூரர்—மன்னுலகில்**
**என்னிலைமை கண்டு மிரங்காரே யாமாகில்**
**மன்னு மடலூர்வன் வந்து.**

**பதவுரை:—** **நல் நுதலீர்**-அழகிய நெற்றியை உடையவர்களே! **பொன் உலகில்**-பரமபதத்தில், **வானவரும்**-நித்ய ஸூரிகளும், **பூமகளும்**-பெரியபிராட்டியாரும், **போற்றி செய்யும்**-திருப்பல்லாண்டு பாடும், **நம்பி நறையூரர்**-பரிபூர்ணரான திருநறையூர் நம்பி, **மன்னு உலகில்**-நித்யமான பூலோகத்தில், **என் நிலைமை கண்டும்**-என்னுடைய தௌர்ப்பல்யத்தைக் கண்டபின்பும், **இரங்காரே ஆமாகில்**-கருணைபுரியவில்லையாகில், **வந்து**-அவர் இருக்குமிடம் வந்து, **மன்னும் மடல் ஊர்வன்**-நிலையாக மடலூரக்கடவேன்.

## பிள்ளைலோகம் ஜீயர் அருளிச்செய்த
## தனியன் வ்யாக்யானம்
### அவதாரிகை

(பொன்னுலகில் வானவரும்) இத்தனியன் ஆழ்வார் அபிப்ராயமாயிருக்கிறது. ஸர்வைஸ்ஸத்யஸனை பரிபூர்ணன், இவ்விபூதியில் தன் க்ருஷிபலமான பரப்க்த்யாதி

---

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திவ்யப்ரபந்தஸாரம்
# பெரியதிருமடல் தனியன் வ்யாக்யானம்

**அவதாரிகை:— (பொன்னுலகில் வானவரும்) இத்திருமடலிலே ஆழ்வாருக்கு ஓடுகிற கருத்தையே பிள்ளை திருநறையூரரையர் இத்தனியனிலே அருளிச்செய்கிறார். அனைவராலும் துதிக்கப்படும் நிறைவாளன், இந்த லீலாவிபூதியில் பத்தியுழவனான தான் என்னி**

வைபவங்களைக்கண்டு த்யைபண்ணுதிருப்பனுகில், அநந் யோபாய(த்வ?)ம் குலையும்படியான அதிப்ராவண்யத்தை ஆவிஷ்கரிப்பன். என்கிறது.

வ்யா:-(என்னிலைமை இத்யாதி) நல்நுதலீர்! நறையூரர் நம்பி என் நிலைமை கண்டு இரங்காரேயராமாகில் மன்னுமடலூர்வன் வந்து. (நல்நுதலீர்) நல்ல நுதலையுடைய வர்களே! "வாண்முகத்தீர்" என்னுமாபோலே ஸகோத்ரி களை ஸம்போதிக்கிறது. (பொன்னுலகில் வானவரும்) பரமபதவாஸிகளான நித்யஸூரிகளும். (பூமகளும்) பெரியபிராட்டியாரும்.. (போற்றி செயும்) மங்களாஶாஸ நம் பண்ணும். "பரதனும் தம்பி சத்துருக்கனனுமிலக்கு மனேடு மைதிலியும் இரவு நன் பகலும் துதிசெய்யநின்ற" என்னுமாபோலே இவர்கள் போற்றிசெய்யும் நறையூர் நம்பி என்னுதல்; அன்றிக்கே-பொன்னுலகில் வானவராய்

---

டத்தில் புவிர்செய்த பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளாகிற பெருமைகளைக் கண்டும் கருணைபுரியவில்லையாகில், அவனையே உபாயமாகக் கொண்டிருக்கும் நிலைகுலையும்படியான பேரன்பை வெளியிடுவேன் என்கிறது.

வ்யா :—(என் நிலைமை...) "நல்நுதலீர்! நறையூரர் நம்பி என் நிலைமை கண்டும் இரங்காரேயாமாகில் மன்னு மடலூர்வன் வந்து" என்று அந்வயம். (நல்நுதலீர்) நல்ல நெற்றியை உடையவர்களே! "வாண்முகத்தீர்" [ஒளி பொருந்திய முகத்தையுடையவர்களே!] என்பதுபோலே பகவத்பக்தியாலே ஒளிவீசும் மற்றையாழ்வார் களைக் கூப்பிடுகிறபடி. (பொன்னுலகில் வானவரும்) "ஹிரண்மயே பரே லோகே" [முண்டக 2-2-10] [பொன்மயமான மேலான உலகில்] என்கிற பொன்னுலகில் வாழும் ஸூரிகளென்றும், ஸாத்யர்களென் றும் புகழப்படும் நித்யஸூரிகளும். (பூமகளும்) கமலவாஸினியான பெரியபிராட்டியாரும், பூவிலிருக்கும் பரிமளமனைத்தும் ஒரு வடி வெடுத்ததோ என்னும்படியிருக்கும் ஸ்ரீதேவியும். (போற்றி செயும்) பல்லாண்டு பாடும். "பரதனும் தம்பி சத்துருக்கனனும் இலக்கு மனேடு மைதிலியும் இரவு நன் பகலும் துதிசெய்ய நின்ற இராவணாந்தகனை" [பெரியதிரு 2-3-7] என்றாற்போலே நித்ய ஸூரிகளும், பிராட்டியும் பல்லாண்டுபாடும் நறையூர் நம்பி என்று

ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களும். "பூமகனும்" என்று பாடமானபோது, புஷ்பஜனன ப்ரஹ்மாவும் போற்றி செயும் என்றுமாம். போற்றிசெய்கைக்காகவிறே *முன்னம் திசைமுகனைத் தான் படைத்தது. (நம்பி நறையூரர்) நறையூரரான நம்பி, திருநறையூர் நம்பி, இங்குவந்து எல்லா குணங்களும் புஷ்கலமாக உடையவர். (மன்னுலகிலென் நிலைமை கண்டும்) தான் படைத்தபடியே என் படியைக் கண்டும்; "மண்மேல் பெருந்தவத்தள்" என்னும்படியிறே இவள்படி. நித்யமாய்ப் போருகிற பூமியிலே என் தயநீய தசையைக் கண்டும். "தாதாடு வனமாலை தாராளோ என்றென்றே தளர்ந்தாள்" என்றிறே இவள் நிலைமையிருப்பது. (இரங்காரேயாமாகில்) இத்தசையிலும்

பொருள். அன்றிக்கே, "பூமகனும்" என்று பாடமானபோது, "சுவர்க்கலோகத்திலுள்ள இந்திராதி தேவர்களும் உந்தித்தாமரையில் பிறந்த பிரமனும் துதிக்கும்" என்று பொருளாகிறது. துதிக்கைக்காகவன்றோ * முன்னம் திசைமுகனைத் தான் படைத்தது. (நம்பி நறையூரர்) நறையூரிலுள்ள நம்பி; திருநறையூர் நம்பி என்னும் திருநாமத்தையுடையவர். திருநறையூர்க்கு வந்த பின்பு ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்கள் நிறையப்பெற்றவர். (என் நிலைமை கண்டும்) பத்தியுழவனை தான் மிக முயன்று பயிர்செய்த பரபக்தி முதலானவற்றாலே பரிபூர்ணையாயிருக்கும் என் பெருமையைக் கண்டும். "பேராளன் பேரோதும் பெண்ணை மண் மேல் பெருந்தவத்தள் என்றல்லால் பேசலாமே" [திருநெடு-20] என்னும் படியன்றோ இவள் பெருமை. "என் நிலைமை" என்றது என் பெருமை என்றபடி. அன்றிக்கே, இரங்கத்தக்க என் தசை என்று பொருளாகவுமாம். (மன்னுலகில் என் நிலைமை கண்டும்) நிலையாயிருக்கும் இவ்வுலகில் என் வருந்தத்தக்க நிலையைக் கண்டும். (மன்னுலகில்) இவ்வுலகம் விரைவில் தொலைந்து போவதாயிருந்தாலாவது அதோடு என் துன்பத்திற்கும் ஓர் முடிவுண்டாகும். அப்படியும் இல்லையே. இது நிலையானதாயன்றோ இருக்கிறது. (என் நிலைமை கண்டும்) "தாதாடு வனமாலை தாராளோ என்றென்றே தளர்ந்தாள்" [பெரியதிரு 5-5-6] என்பதன்றோ இவள் நிலை. (இரங்காரேயாமாகில்) இந்நிலையிலும் "வண்டு திவளும் தண்ணந்

* பெரியதிருமடல் 10

* வண்டு திவளும் தண்ணந்துழாய் கொடாதே இரக்கமெழா திருப்பராகில். (மன்னு மடலூர்வன் வந்து) தாமிருக்கு மளவும் மடலும் கையுமாய் வந்து தம் கு₃ணபூர்த்தியை அழிப்பன்.

இத்தால், அவன் ஆமுகவாக அங்கீ₃கரிக்கும்படி அதிப்ராவண்யத்தை ஆவிஷ்கரிப்பனென்றதாயிற்று. இத் தலையால் வருமது சைதந்ய கார்யம்; அத்தலையால் வருமது ஸாத₄நம்.

பெரியதிருமடல் தனியன் வ்யாக்₂யானம் முற்றிற்று.

பிள்ளைலோகம் ஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

துழாய் கொடீர்'' [திருவாய் 2-4-5] ''இரக்கமெழீர்'' [திருவாய் 2-4-3] என்னும்படி இருந்தாராகில். (மன்னு மடலூர்வன் வந்து) தாம் இருக்கும் வரையில் என் மடலும் நித்யமாய்ச் செல்லாதிற்கும். (மடலூர்வன்) மடலும் கையுமாய் வந்து தாம் கொண்டாடியிருக்கும் கு₃ணப்பெருமைகள் அனைத்தையும் அழிப்பேன்.

இப்பாகரத்தால், அவன் விரைவில் என்னை ஏற்றுக்கொள்ளும் படியாக என் பேரன்பை மடலூருவதன் மூலம் வெளிப்படுத்துவேன் என்று சொன்னதாய் முடிந்தது. இவளுடைய இம்முயற்சி ஸாத₄ னத்தில் அந்வயிக்குமோ? எனில்: அந்வயிக்காது. அவனையே உபாய மாகக்கொண்ட இவளுடைய இதுபோன்ற முயற்சிகளெல்லாம் அவ் விஷயவைலக்ஷண்யத்தை அறிந்ததாலுண்டாகும் ஆற்றாமையினால் ஏற்படுமவை. இவளைப்பெற அவன் செய்யும் முயற்சிகளே ஸாத₄ னத்தில் சேரும்.

தி₃வ்யப்ரப₃ந்த₄ஸாரம்

பெரியதிருமடல் தனியன் வ்யாக்₂யானம் முற்றிற்று.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



### பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# பெரியதிருமடல் வ்யாக்யானம்

**அவதாரிகை**

பெரியதிருமடலாவது-கண்ணுஞ்சுழலையிட்ட ப்ரப3ந்த4ம் இன்னமொன்று; போர்சுட்டுப் பொரிகொறிக்கை. இரண்டு தலையிலுள்ளாரும் கைவிட்டால் அன்று ஒருவழியே போகலாமென்று தாத்பர்யம்.

---

### அழகியமணவாளப்பெருமாள் நாயனாருளிச்செய்த

# பெரியதிருமடல் வ்யாக்யானம்

**அவதாரிகை**

**"भार्या पुत्रश्च दासश्च त्रय एवाधनाः स्मृताः । यत्ते समधिगच्छन्ति यस्यैते तस्य तद्धनम् ॥"** *(பா1ர்யா புத்ரஶ்ச தா3ஸஶ்ச த்ரய ஏவாத4நா: ஸ்ம்ருதா: । யத்தே ஸமதி4க3ச்ச2ந்தி யஸ்யைதே தஸ்ய தத்3த4நம் ॥)* ஶீலவயோவ்ருத்தாதி3கள் துல்யமாயிருப்பன இரண்டும் தம்மில் விஷயமாய், இருவர்க்கும் யாத்3ருச்சி2கமாக ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாம்படியே, விஶ்லேஷமும் யாத்3ருச்சி2கமாகக்கொண்டு ப்ரவ்ருத்தமாய், அநந்தரம் இரண்டுதலைக்கும் அபி4நிவேஶம் கரைபுரண்டு பொறுகைக

---

### திவ்யப்ரபந்தஸாரம்

# பெரியதிருமடல் வ்யாக்யானம்

**அவதாரிகை**

பெரியதிருமடலாவது–சிறியதிருமடலைப்போலே, அன்பின் மிகுதியாலே தன் ஸ்வரூபத்தையும், பரஸ்வரூபத்தையும் அறியவொட்டாமல் கண்சுழன்று கிறுகிறுக்கவைத்த மற்றொரு பிரப3ந்த4மாகும். ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டு மடலெடுத்துப் பரமபுருஷனைப் பெற முயலும் இம்முயற்சி, நெல்லை அடையமுடியாத ஒருவன், நெற்கதிர்ப்போரை வழியல்லாவழியில் கொளுத்தி, அதில் வெந்த நெற்பொரிகளைக்கொறிப்பதற்கு (தின்பதற்கு) ஒப்பாகும். நாயகி

---

* நம்பிள்ளை வ்யாக்2யானமென்று சில ப்ரதிகளில் உள்ளது.

* வாடினேன் வாடிதொடங்கி இவ்வளவும்வர ப₄க₃வத்₃ கு₃ணங்களை ஶ்ரீலநம்பண்ணிப் போருகையாலே அபி₄நிவேஶம் மிக்கு, வழியல்லா வழியேயாகிலும் காணவேணு மென்று கண்ணுஞ்சுழலையிட்டபடி.

இப்ரப₃ந்த₄ம், எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டி, தன் ஆற்றாமையாலே மடலூர்ந்தாகிலும் காண வேணுமென்னும் த₃ஶை தமக்குப் பிறந்து பேசுகிறார்.

---

அரிதாயிருக்க, பிறரறிய வந்த கலவியல்லாமையாலே கடலேறி வடிந்தாற்போலேயிருக்கிற வடிவிலேயுள்ள வேறுபாட்டைக் கண்டு ப₃ந்து₄க்களானவர்கள், ப்ரவ்ருத்தமான ப்ரகாரங்களை அறிந்து, இங்ஙனே பிறக்கலாகாதென்று நிரோதி₄(த₄)த்தாலும், அபி₄மதவிஶ்லேஷத்தாலும் ஆற்றாமை அறக் கைவிஞ்சினால் ப₃ந்து₄க்கள் நசையற்று, இத்தலையில் ஸ்த்ரீத்வாதி₃கு₃ணங்களை யும் விட்டு எதிர்த்தலைக்கு கு₃ணஹாநியையும் விளைப்பித்து

---

**யினுடைய அதிப்ரவ்ருத்தியைக்கண்டு அவளைச் சேர்ந்தவர்களும், நாயகனுடைய குணஹாநியை நாயகியின் வாய்மூலமாகவே கேட்டு அவனைச் சேர்ந்தவர்களும் இருவரையும் கைவிட்டால், அப்போது வேறு போக்கற்று இருவரும் கூடி ஒரு வழியே போகலாம் என்று மடலெடுக்கும் நாயகிக்குக் கருத்து.**

**''வாடினேன் வாடி'' [பெரியதிரு 1-1-1] என்று தொடங்கி சிறியதிருமடலீறாக ப₄க₃வத்₃கு₃ணங்[illegible]டு பழகிப்போருகையாலே ஆற்றாமை மிகுந்து தவறான வழி[illegible] சென்றுவது காணவேண்டு மென்று கண்சுழன்று மயக்கமுற்றபடியாகும் இப்பிர ப₃ந்த₄ம். சிறியதிருமடலும் அவனுடைய கு₃ணங்களை நினைவுறுத்தி ஆற்றாமையை அதி₄கரிக்கச் செய்துவிட்டது; அவன் வந்தபாடில்லை. ஆகையால், சிறுபோரிலே தோற்றார் பெரும்படை திரட்டிப் பெரும் போர் புரிவதுபோலே பெரியதிருமடலாகிற இந்நூலைத் தொடங்கு கிறார்.**

**எம்பெருமானோடு கலந்து பிரிந்த ஒரு பிராட்டி அவனைப் பெறுமல் த₄ரிக்கமாட்டாமையாலே 'மடலூர்ந்தாகிலும் காணவேணும்' என்று கூறும் த₃ஶை தமக்கு பிறந்து அதைப் பேசுகிறார் இப்பிர ப₃ந்த₄த்திலே.**

மடலாகிறது - இரண்டு தலைக்கும் அவத்யத்தை விளைக்குமதன்றோவென்ன; அதுதானன்றோ தேட்டம் என்கிறது. "रामस्य दयिता भार्या नित्यं प्राणसमा हिता" (ராமஸ்ய த₃யிதா ப₄ார்யா நித்யம் ப்ராணஸமா ஹிதா) என்றும், "ममैव दुष्कृतं किञ्चिन्महदस्ति न संशयः। समर्थावपि तौ यन्मां नावेक्षेते परन्तपौ॥" (மமைவ து₃ஷ்க்ருதம் கிஞ்சிந் மஹத₃ஸ்தி ந ஸம்ஶய:। ஸமர்த்த₂ாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ॥) என்றும், "स्वस्त्यस्तु रामाय सलक्ष्मणाय तथा पितुर्मे जनकस्य राज्ञः" (ஸ்வஸ்த்யஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய தத₂ா பிதுர்மே ஜநகஸ்ய ராஜ்ஞ:) என்றும், "न मन्थरायाः न च मातुरस्या दोषो न राज्ञो न च राघवस्य" (ந மந்த₂ராயா ந ச மாதுரஸ்யா தோ₃ஷோ ந ராஜ்ஞோ ந ச ராக₄வஸ்ய) என்றும், "यदि प्रीतिर्महाराज यद्यनुग्राह्यता मयि। जहि मां निर्विशङ्कस्त्वं प्रति-

---

இப்படி ஜக₃து₃பஸம்ஹாரம் பண்ணியாகிலும் முகத்தே விழித்தல்லது மீளுவதில்லை என்னும்படியான ஆற்றாமை கைவிஞ்சினால் பண்ணுவதொரு ஸாஹஸப்ரவ்ருத்தி விஶேஷமாயிருக்கும் மடலாவது.

இதுதானிருக்கும்படியென்னென்னில், அபி₄மத விஷயத்தை ஒரு படத்திலே எழுதி, வைத்த கண் வாங்காதே அத்தைப்பார்த்துக்கொண்டு தன்னைப்பேணாதே ஊணுறக்கமு

---

மடலென்பது நாயகனுக்கும் நாயகிக்கும் தோ₃ஷத்தை விளைப்பதன்றோ என்னில்: கு₃ணத்தைப் பேணியிருந்து ப₂லனைப்பெறாதபோது, தோ₃ஷத்தை விளைத்துக்கொண்டாவது ப₂லனைப் பெறுவதே வேண்டியது என்கிறது இப்பிரப₃ந்த₄த்தில். "ராமனுக்கு இனிய மனைவி; எப்போதும் உயிரைப்போல் நன்மை பயப்பவள்" [ரா-பா 1-26] என்றும், "எதிரிகளை அழிப்பவர்களும் எதையும் செய்யவல்லவர்களுமான ராமலக்ஷ்மணர்கள் என்னைக் கணிசியாமலிருப்பதிலிருந்து, நான் செய்த பெரியதோர் குற்றம் உள்ளதென்பதில் ஐயமில்லை" [ரா-ஸு 38-47] என்றும் "இளையவனோடு கூடிய ராமபிரானுக்கும் என் தந்தையான ஜனகமஹாராஜாவுக்கும் மங்க₃ளமுண்டாகட்டும்" [ரா-ஸு 32-9] என்றும், "மந்த₂ரை, என் தாயான கைகேயி, அரசரான த₃ஶரத₂ர், ராமபிரான் ஆகியவர்களுடைய பாபத்தினால் ராக₄வன் வனம் போகவில்லை; அதற்கு என் பாவமே காரணம்"

**ஜாமனுபாலய** ||" (யதி$_3$ ப்ரீதிர் மஹாராஜ யத்$_3$யநுக்$_3$ராஹ்யதா மயி | ஜஹி மாம் நிர்விஶங்கஸ்த்வம் ப்ரதிஜ்ஞாமநுபாலய ||) என்றும், " வளவேழுலகிற்படியாலும், " மிக்கசீர்த் தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே " என்றும் அத்தலைக்கு ஸம்ருத்$_3$தி$_4$யைப் பாரிக்க, " உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து நாடினேன்" என்றும் பேசுகிற இவருடைய பேரளவுக்குப் போருமோவென்னில்; ஜ்ஞாநாபராத$_4$மன்று; ப$_4$க$_3$வத் ஸௌந்த$_3$ர்யாபராத$_4$மாகையாலே. "**बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते**" (ப$_3$ஹவோ ந்ருப கல்யாணகு$_3$ணா: புத்ரஸ்ய

---

மற்றுத் திரியாநின்ற இத்$_3$த$_4$ர்மஹாநியைக்கண்டு ராஜாக்கள் கூட்டுதல், தைவம் கூட்டுதல், இரண்டுமில்லையாகில் முடிந்து பிழைத்துப்போதல் செய்யுமித்தனையாதல்.

இதுக்கு அபி$_4$ப்ராயம் இதுவாகில், வளவேழுலகிற்படியே ஸ்வவிநாஶத்தை அங்கீ$_3$கரித்து அத்தலைக்கு அவத்$_3$யம் வாராதபடி பரிஹரிக்க ப்ராப்தமாயிருக்க, அத்தலைக்கு அவத்$_3$யத்தை விளைத்து நினைத்தது தலைக்கட்டிக்கொள்ளநினைக்கிற இது சேருமோ ? என்னில், நிரூபித்தால், அங்ஙன் நினைக்கிற அதுவும் அத்தலைக்கு அவத்$_3$ய பரிஹாரம் பண்ணித் தலைக் கட்டுமதுவே.

---

[ரா-?] என்றும் ''பிரானே ! என்னிடம் அன்புளதாகில், நான் அருளத்தக்கவனாகில், ஐயமின்றியே என்னை கைவிடுவீர். ப்ரதிஜ்ஞை யைக் காப்பாற்றிக்கொள்வீர்'' [ரா-டு 06-4] என்றும், ''வள வேழுலகில்'' [திருவாய் 1-5] என்ற திருவாய்மொழியிலும், ''மிக்க சீர்த்தொண்டரிட்ட பூந்துளவின் வாசமே வண்டு கொண்டு வந்தூது மாகிலே, கெண்டையொண்கணும் துயிலும், என் நிறம் பண்டு பண்டுபோலொக்கும்'' [பெரியதிரு 11-1-9] என்றும்—பிராட்டி, ப$_4$ர தாழ்வான், இளையபெருமான், நம்மாழ்வார் ஆகிய பேரறிவாளர் களும், இவ்வாழ்வார்தாமும் ப$_4$க$_3$வத்ஸம்ருத்$_3$தி$_4$யைப் பாரிப்பவரா யிருக்க, ''உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து நாடினேன்'' [பெரிய திரு 1-1-1] என்றும் பேசுகிற இவருடைய பேரறிவுக்குத் தகுமோ இவருடைய இச்செயல்? எனில்: இவர் அறிவின்மேல் குற்றமில்லை; பரமபுருஷனின் அழகினால் விளைந்த குற்றமேயிது. அழகு மாத்திர மல்ல; அவன் கு$_3$ணங்களுக்கும் இதில் பங்குண்டு. ''அரசனே!

ஸந்தி தே) "धातूनामिव शैलेन्द्रो गुणानामाकरो महान्" (த₄ாதூநாமிவ ஶைலேந்த்₃ரோ கு₃ணாநாமாகரோ மஹாந்) என்றும் உண்டாகையாலும் இதுவே சேரும்.

"तुल्यशीलवयोवृत्तां" (துல்ய ஶீல வயோ வ்ருத்தாம்) என்கிறபடியை உடையராயிருப்பாரிருவர் தை₃வயோக₃த்தாலே கூடி, தை₃வயோக₃த்தாலே பிரிந்து, நெடுங்காலம் வரவுபார்த்திருந்து வ க்காணுமையாலும், த்₃ருஷ்டோபாயமும் அத்₃ருஷ்டோபாயமும் கைவாராமையாலும், ஆற்ற

ஆனால் இவை கூடினபடி எங்ஙனேயென்னில், * வளவேழுலகில் தம் ஸ்வரூபஜ்ஞாநத்தாலே இறாய்க்கப் பார்த்தாராய், இங்கு ஈச்வர ஸ்வரூபஜ்ஞாநத்தாலே மேல் விழப் பார்க்கிறார். அவனுக்கு கு₃ணஹாநியைப் பண்ணவொண்ணாதென்று தம்மைக்கொண்டு இறாய்த்தார்; அவனுக்கு ஸ்வரூபஹாநியை விளைக்கவொண்ணாதென்று மேல்விழப் பார்க்கிறார். "அவன் ரக்ஷகன்" என்கிற ஜ்ஞாநமாத்ரமேயாய், "பெற்றபோது பெறுகிறோம்" என்றிருக்கில் அவனுடைய வைலக்ஷண்ய ஜ்ஞாநம் பிறந்ததில்லையாமே. அப்படி வளவே

உன் பிள்ளைக்குப் பல நற்குணங்கள் உள்ளன'' [ரா-அ 2-26] ''மலையரசன் த₄ாதுக்களுக்கு இருப்பிடமாவதுபோல் ராமபிரான் கு₃ணங்களுக்குப் பெரியதோர் இருப்பிடம்'' [ரா-கி 15-21] என்று சொல்லப்படும் கு₃ணங்கள் ஸாமாந்யரையும் ஈடுபடுத்தும்போது, பேரன்புடைய இவரை ஈடுபடுத்தி வழியல்லாவழியில் செலுத்துமென்பது பொருத்தமுடையதேயாம்.

''ஒத்த கு₃ணம் வயது ஒழுக்கம் ஆகியவற்றையும், ஒத்த குலத்தையும் அழகையும் உடையவளான சீதைக்கு ராமபிரானே தகுந்தவர்; அவருக்கும் கருங்கண்ணியான இவளே தகுந்தவள்'' [ரா-கி 16-5] என்று எல்லாவித₄த்திலும் பொருத்தமுடையராயிருப்பவர்களான நாயக நாயகியரிருவர் தங்கள் புண்ணியவசத்தாலே கூடி, அத்தாலேயே பிரிந்து, ஒருவர் மற்றொருவருடைய வரவை நெடுங்காலம் எதிர்பார்த்திருந்து வரக்காணாமையாலும், த்₃ருஷ்டோபாயங்களும், அத்₃ருஷ்டோபாயங்களும் கூட்டிவைக்காமையாலும்,

வொண்ணாத அபி₄நிவேஶம் மிக்கு, மடலூர்ந்தாகிலும் காணவேணுமென்கை யோக்₃யம். கூடுவதும் பிரிவதும் இரண்டும் புண்யப₂லமென்றது ; கூடுகை புண்யப₂லம்; பிரிகை புண்யப₂லமானபடி எங்ஙனேயென்னில்; **"वातातप क्लान्तमिव प्रणष्टं वर्षेण बीजं प्रतिसञ्जहर्ष" (வாதாதப க்லாந்தமிவ ப்ரணஷ்டம் வர்ஷேண பீ₃ஜம் ப்ரதிஸஞ்ஜஹர்ஷ)** என்னுமா போலே ஸ்நேஹவர்த்த₄கமாகையாலே. த்₃ருஷ்டோபாய மென்கிறது - தெ₃ளத்யாதி₃களை; அத்₃ருஷ்டோபாயமென் கிறது - தையொருதிங்களிற்படியை.

---

மூலகில் அகன்றவரிறே மாசறு சோதியிலே மடலெடுக்க ஒருப்பட்டார். "மயர்வற மதிநலமருளினன்" என்று ப₄க்திரூபாபந்ந ஜ்ஞாநமிறே இவர் பெற்றது. அவ்விரண்டி னுடைய கார்யமும் பிறந்தல்லது நில்லாதே. ருஷிகளிற் காட்டில் ப₄க₃வத்ப்ரஸாத₃லப்₃த₄மான ஜ்ஞாநாங்க₃ங்களை யுடைய ஆழ்வார்கள் வாசியிருக்கும்படியிறே இது. அங்குத் தான் **"चापमानय"** *(சாபமாநய)* என்று வில்லைக் காட்டிப் பகட்டினாற்போலே மடலைக்காட்டிப் பகட்டி முகத்திலே விழிக்கப்பார்க்கிறவித்தனையிறே. அல்லது, செய்து தலைக் கட்டக்கடவதாகச் சொல்லுகிறதன்றே. மடலெடுக்கை யாகிறது — எதிர்த்தலைக்கு கு₃ணஹாநியை விளைக்கையிறே. கு₃ணஹாநியை விளைக்கவே, கு₃ணாதி₃கவிஷயமாகையாலே

---

**தாங்கவொண்ணாத் பேரன்பு மிகுந்து, மடலூர்ந்தாவது காணவேணு மென்று முயற்சிப்பது தகுந்ததே. நாயகநாயகியர் கூடுவதும், பிரிவதும் புண்ணியப₂லம் என்றது; கூடுவது புண்ணியப₂லம் என்றது பொருந்தும்; பிரிந்தது புண்ணியப₂லம் என்றது எப்படிப் பொருந் தும்? எனில்: "காற்றாலும், வெயிலாலும் வாடி வதங்கிய விதை மழையினால் (முன்னிலும் அழகியதாய் முளைவிடுவது) போல் முன்னி லும் பொலிவுபெற்றாள் சீதாபிராட்டி" [ரா-ஸு 29-6] என்னுமா போலே, பிரிவு அன்பை வளர்ப்பதாகையாலே பிரிந்ததும் புண்ணிய ப₂லமேயாம். த்₃ருஷ்டோபாயங்கள் என்றது தூதுவிடுதல் முதலான ப்ரத்யக்ஷஸித்₃த₄மான உபாயங்களை, அத்₃ருஷ்டோபாயங்களென் றது—"தையொரு திங்கள்" [நாச் திரு-1] திருமொழியிலே நாச்சி யார் காமனை ஆஶ்ரயித்தது போன்று ஶாஸ்த்ர ஸித்₃த₄மான உபாயங்களை,**

"स्त्रियो वृद्धास्तरुण्यश्च सायं प्रातस्समाहिताः। सर्वान् देवान्नमस्यन्ति रामस्यार्थे यशस्विनः॥" (ஸ்த்ரியோ வ்ருத்3த4ாஸ் தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ் ஸமாஹிதா:। ஸர்வாந் தே3வாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே2 யஶஸ்விந:॥) என்கிறபடியே இராதே மடலூருகிற இது சேருமோவென்னில்; சேரும். மடலூருகைதான் உண்ணுதே குளியாதே உகந்த விஷயத்தை ஒரு படத்திலே லிகி2த்து அத்தைக்கொண்டு திரிகையும், அறவினை[illegible]ால் அதின் காற்கடையிலே விழுகை

---

கு3ணத்தையொழிய ஜீவிக்கமாட்டானிறே. கு3ணமே த4ாரகமாக நினைத்திருப்பார்க்கு கு3ணத்தை அழிக்கையாகிறது—கு3ணியை அழிக்கக்கடவதிறே. தனக்கு கு3ணஹானியை விளைக்கையாவது—தன்னை அழிக்கை. ஆகையாலே தன்னை அழிக்கமாட்டாமே இவள் மடலூர ஒருப்பட்டபோதே, அவன் இவள் ஸந்நிதி4யிலே வந்து மேல்விழுமே; அவனுக்கு ஸ்வரூபஹானி வாராமே தன்னபி4மதமும் பெற்றுத் தலைக்கட்டலாமாகில் இதுக்கு மேற்பட்ட வாய்ப்பில்லையிறே. இனி மடலெடாதொழிந்தபோது அத்தலைக்கு அவத்3யத்தைப் பண்ணிற்றுமித்தனையிறே.

ஸர்வேஶ்வரன் ஸ்ருஷ்ட்யுந்முகனாய்க்கொண்டு கண் வளர்ந்தருள, ஸ்ருஷ்டிகாமமானவாறே திருநாபி4யிலே ஒரு தாமரை பூத்தது; அதிலே சதுர்முகன்வந்து தோன்றினுன்,

---

" ஸ்த்ரியோ வ்ருத்3த4:" [ரா-அ 1-52] என்று தொடங்கும் ஸ்ரீ ராமாயண ஶ்லோகத்தில், [(தாடகாஸுபா3ஹுமாரீசாதி3களை வென்று) புகழ்படைத்த ராமனுக்காக (அயோத்தியிலுள்ள) ஸ்திரீகளும், கிழவர்களும், குமரிகளும், மாலையிலும். காலையிலும் எல்லா தே3வதைகளையும் குறிக்கொண்டு வணங்குகிருர்கள்] என்று சொன்னபடியே, அவனுக்காக வழியல்லா வழியில் பரியவேண்டியிருக்க, முறையற்ற வழியில் அவனைத்தூற்றி மடலூருவது பொருந்துமோ? என்னில்: பொருந்தும்; மடலூர்வதாவது.— உண்ணுமல், குளிக்காமல் தான் காதலிக்குமவனை (அல்லது அவனை) ஒருபடத்திலே எழுதி, அதையெடுத்துக்கொண்டு திரிவதும், காதல்நோய் முற்றினுல் அந்தச் சித்திரத்தின் காலிலே விழுவதும், விழுந்தால் அப்படியே கரையானரிக்கும்படி கிடப்பதும், அப்படியே உயிர் விடுவதுமாகும். இவையெல்லாம் காதலால் வருவதாகையா

யும், விழுந்தால் அங்ஙனே செல்லரிக்கக் கிடக்கையும், அங்ஙனே முடிகையும். இத்தால் ப்ரயோஜநமென்னென்னில், அவன் கேட்குமென்கையும், இல்லையாகில் இது தானே ப்ரயோஜநமாகை.

**"कामिनो वर्णयन् कामान् लोभं लुब्धस्य वर्णयन्। नरः किं फलमाप्नोति कूपेऽन्धमिव पातयन् ॥"** (காமிநோ வர்ணயந் காமாந் லோப₄ம் லுப்₃த₄ஸ்ய வர்ணயந்। நர: கிம் ப₂லமாப்நோதி கூபேऽந்த₄

---

அவனைக்கொண்டு இவ்வருகுண்டான கார்ய வர்க்க₃த்தை உண்டாக்கச்சொல்லி, அவனுக்குக் கைவிளக்காக நாலு வகைப்பட்ட வேத₃ங்களையும் ஓதுவித்தானாய்; அந்த வேத₃ங்கள் தன்னிலே புருஷார்த்த₂மாகச் சொல்லப்படுகிற த₄ர்மார்த்த₂ காமமோக்ஷமென்று சொல்லப்படுகிறது நாலு; த₄ர்மமும் காமஶேஷம், அப்படியே அர்த்த₂மும் காமஶேஷம்; காமபுருஷார்த்த₂மே ப்ரத₄ாநம். இனி, "ப₄க₃வத் புருஷார்த்த₂மென்று ஒன்றுண்டு" என்று சொல்லுவர்கள்; அது பெறுகை து₃ர்லப₄ம்; பெற்றறிவாரில்லை. ஆகையால், இட்டெண்ணப்படுவதொன்றன்று. புருஷார்த்த₂ங்களில் காமமேயிறே புருஷார்த்த₂ம். அல்லாதவை இதுக்கு அங்க₃மிறே.

**"कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन"** (*கர்மண்யேவாதி₄காரஸ்தே மா ப₂லேஷு கதா₃சந*) காம்யரூபமான தர்மங்

---

ளும், காதலை வெளிப்படுத்தி வளர்ப்பதாகையாலும் இச்செயல்கள் காதலர் தன்மைக்குப் பொருந்தியதே. மூட₄னுங்கூடப் பயனற்ற செயலில் ஈடுபடமாட்டானாகையால், இச்செயல்களின் பயன் என்ன? எனில்; இவ்வதிப்ரவ்ருத்தியை அறிந்து அவன் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து முகங்காட்டுவதே பயன்; அப்படிக் காட்டாவிடினும், அவனிடத்தில் காதலை வெளியிடுவதும், வளர்ப்பதுமாகிற இச்செயலே ஸ்வயம்ப்ரயோஜனமாகிறது. ஆகையால் பயனுள்ள செயலே இது.

"காமுகனின் காமங்களை வருணிப்பதாலும், உலோபியின் கருமித்தனத்தை விவரிப்பதாலும், கிணற்றில் குருடனைத் தள்ளுவது போலே, மனிதன் ஒரு நற்பயனையும் அடைவதில்லை" [ ]

மிவ பாதயந்!!) என்று சொல்லாநிற்கச்செய்தே விடப்ர வ்ருத்தியாய் அஶாஸ்த்ரீயமாய் ஸத்துக்களும் கைவிடுவ தொன்றாகையால் இது ப்ராப்தமன்றேயென்ன; அது ஶப்₃த₃ாதி₃ விஷயங்களைக் காமமாகக் கொள்ளும்போதே குற்றமுள்ளது. இது வேத₃ாந்தத்திற் சொல்லுகிற ப₄க₃வத்₃ ப₄க்தியைக் காமமென்கையாலே குற்றமில்லை. **"व्यवसायादृते ब्रह्मन् नासादयति तत्परम्"** (வ்யவஸாயாத்₃ருதே ப்₃ரஹ்மந் நாஸாத₃யதி தத்பரம்) **"परमात्मनि यो रक्तो विरक्तोऽपरमात्मनि। सर्वैषणाविनिर्मुक्तः स भैक्षं भोक्तुमर्हति ॥"** (பரமாத்மநி யோ ரக்தோ

---

களிலே உனக்கு அதி₄காரம், இதில் தலையடியில் சொல்லுகிற ப₂லங்களிலே உண்டான அபி₄ஸந்தி₄யைப் பண்ணுதொழி என்றவாறு,— **"मा कर्मफलहेतुर्भूः"** *(மா கர்மப₂லஹேதுர்பூ₄:)* கர்மம் ப₂லஹேதுவாகாமேகொள்; அதாகிறது — ஸகர்த்ருக மாக அநுஷ்டி₂யாதே. **"मा ते सङ्गोऽस्त्वकर्मणि"** *(மா தே ஸங்கோ₃ऽஸ்த்வகர்மணி)* ப₂லத்யாக₃த்தைப் பண்ணுகின்ற தாகில், அகர்த்ருகமாக அநுஷ்டி₂க்கவேணுமாகில், 'இதுதான் நமக்கு என்செய்ய?' என்றுகொண்டு அநநுஷ்ட₂ாநம் வாராத படி பரிஹரி—என்றுகொண்டு இங்ஙனே காம்யரூபகர்மந் தன்னையே ப₄க₃வத் ப்ராப்திக்கு ஸாத₄நமாக அருளிச்செய்தா

---

என்று காதலை வருணிப்பது தாழ்ந்த செயலாகச் சொல்லப்பட்டி ருக்கிறது; விடபுருஷர்களின் செயலென்று நல்லோர்களும் இதை இகழ்கின்றனர்: ஶாஸ்த்ர நிஷித்₃த₄மாகவுமிருக்கிறது; நல்லோர்கள் இதை விலக்கியுமிருக்கின்றனர்; இக்காரணங்களால் இது தகாத செயலாயிற்றே என்னில்: ஶப்₃த₃ம், ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், க₃ந்த₄ம் என்னும் ப்ராக்ருதவிஷயங்களை விரும்பும்போதே அக்குற்றம் உண்டா கிறது. அப்ராக்ருதமாய், "உபாஸீத" "த்₄யாயீத" என்று வேத₃ாந் தங்களில் விதி₄க்கப்படும் ப₄க₃வத்₃ ப₄க்தியையே இங்கு காமமாகச் சொல்லுகிறதாகையாலே அக்குற்றமில்லை. "அந்தணரே! (ப₄க்தி யாகிற) மனவுறுதியில்லாவிடில் அந்தப் பரவஸ்துவை அடைய மாட் டான்" [பா₄ர.ஶாந்தி 334.47] என்றும். "பரமபுருஷனிடம் எவன் காதல்பூண்டு, இதரவிஷயங்களை வெறுத்திருக்கிறானோ, அவன் பொன்னாசை முதலான ஆசைகள் அனைத்தினின்றும் நீங்கி ஸந்யா ஸத்தை ஏற்றுக்கொள்ளக் கடவன்" [பா₃ர்ஹஸ்பத்ய ஸ்ம்ருதி] "எந்

விரக்தோऽபரமாத்மநி। ஸர்வேஷணாவிநிர்முக்தஸ் ஸ பைக்ஷம் போ₄க்துமர்ஹதி ॥) "यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति" (யதி₃ச்ச₂ந்தோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி) என்கிற ப₄க₃வத்₃ய த்₄யவஸாயத்தைக் காமமென்கிறது. ஸங்யாஸத₄ர்மத்தை "மடல்" என்று ஆளவந்தாரருளிச்செய்தார். ஆனால் த₄ர்மார்த்த₂ மோக்ஷங்களை இகழ்வானென்னென்னில், ஜாபா₃லி ப₄க₃வான் பெருமாள் திருமுன்பே லோகாயதிக ஸித்₃தா₄ந்தத்தின்படியே சில அத₄ர்மத்தை விண்ணப்பஞ்செய்ய, "जाबालिर्ब्राह्मणोत्तमः" (ஜாபா₃லிர் ப்₃ராஹ்மணோத்தம:) என்று அவனைக்கொண்டாடுகையாலே இதிலும் குற்றமில்லை. த₄ர்மார்த்த₂ மோக்ஷங்களை இகழ்கையன்று உத்₃தே₃ஶ்யம். தம்முடைய புருஷார்த்த₂த்திலுள்ள தாத்பர்யம்.

---

ணிறே. இப்படியே இந்தக் காமமும்; பா₄ஹ்ய விஷயங்களைப் பற்றி இருக்குமன்றிறே இது த்₃யாஜ்யமாவது. வகுத்த விஷயத்தைப் பற்றி வருமன்று உத்தே₃ஶ்யமாகக் கடவது. அப்ராப்த விஷயங்களில் காமத்தை நிஷேதி₄த்து, வகுத்த விஷயத்தில் காமத்தை விதி₄த்தது. "निदिध्यासितव्यः" (நிதி₃

---

தப் பரவஸ்துவை விரும்புமவர்கள் ஸ்திரீஸங்க₃மின்மையை அனுஷ்டிக்கின்றனரோ" [கட. 2-15] என்கிற ப₄க₃வத்₃ பக்தியாகிற துணிவையே இங்கு காமமென்கிறது. உற்ருற்றவினர் அனைவரையும் உதறித்தள்ளித் தொழில்படும் ஒற்றுமையைக் கொண்டு ஸந்யாஸத₄ர்மத்தை ஆளவந்தார் மடலென்று அருளிச்செய்தார். இத்திருமடலின் தொடக்கத்தில் அறம, பொருள், வீடு என்னும் மற்றைப் புருஷார்த்த₂ங்கள் மூன்றையும் இகழ்வதற்குக் காரணமென்னவெனில்: ஜாபா₃லிமஹர்ஷி ஸ்ரீராமபிரானுக்கு முன்னலே, அவரை அயோத்திக்குத் திருப்பிக் கொண்டுபோகவேண்டுமென்னும் ஆசையாலே லோகாயத ஸித்₃தா₄ந்தத்தின்படி சில நாஸ்திகவாத₃ங்களைப்பேச, "அந்தணர் தலைவரான ஜாபா₃லி" [ரா-அ 108-1] என்று. ராமனிடத்தில் அவருக்குள்ள அன்பின் மிகுதியைக்கண்டு வால்மீகி ப₄க₃வான் அவரைக் கொண்டாடுகையாலே; இதுவும் அதுபோலே கொண்டாடத்தக்கதேயாகும். இவருடைய குறிக்கோள் அறம் பொருள் வீடுகளை இகழ்வதன்று; தம்முடைய புருஷார்த்த₂மான காமத்தைப் புகழ்வதிலேயே இவருக்கு நோக்கு.

"கடலன்ன. காமத்தராகிலும் மாதர் மடலூரார் மற்றையார்மேல்" என்று சொல்லாநின்றதேயென்னில்; அது விதி4 நிஷேத4 வசநோக்தியன்று; ராக3ப்ராப்தமாகையாலே தோற்ருர் மடலூருமத்தனை; விதி4நிஷேத4மாகில் ராஜாஜ்ஞைக்கு நிற்கவேணும் காமம்.

இப்படி மடலூர்ந்தாராரென்னில் **"सदेवगन्धर्वमनुष्यपन्नगं जगत्सशैलं परिवर्तयाम्यहम्"** (ஸதே3வக3ந்த4ர்வமநுஷ்யபந்நக3ம் ஜக3த் ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம்) என்றும், **"अशोक शोकापनुद शोकोपहतचेतसं। त्वन्नामानं कुरु क्षिप्रं प्रियासन्दर्शनेन मां॥"**

***

*த்4யாஸிதவ்ய:)* என்று கொண்டு விதி4ரூபமாய் வருகிற காமமாயிற்று அது, இங்குக் காமமாகச் சொல்லுகிறதுதான் ப4க3வத்3 ப4க்தியை.

இந்த ப4க்திதான் உபாஸநப4க்தியாய் வருமதல்ல; ப4க3வத்ப்ரஸாத3மடியாக கைங்கர்யத்துக்குப் பூர்வகாலீநமாய்க் கொண்டு வரும் ப4க்தியாயிற்று. கர்மஜ்ஞாநஸஹக்ருதமாய் வரக்கடவ ப4க்தியாயிற்று வேதா3ந்தங்களிலே சொல்லுகிற ஸாத4நப4க்தியாவது; இதுக்கு அந்தக் கர்மஜ்ஞாநங்களி

***

"கடலன்ன காமத்தராகிலும் மாதர் மடலூரார் மற்றையார் மேல்" என்று தமிழ் நூல்களிலே 'புருஷர்கள் மடலூரலாமேயொழிய மாதர் மடலூரக்கூடாது' என்று ஓர்வரம்பு கட்டியிருக்கிறதேயெனில்: ராஜாஜ்ஞை போலே அதை விதி4நிஷேத4 வசனமாகக் கொள்ளக் கூடாது. காமமென்பது அவரவர் விருப்பத்துக்கே கட்டுப்படுமாகையாலே, தானுகந்த விஷயத்திலே மிகவும் ஈடுபட்டவர்கள் மடலூருவதில் தவறில்லை. விதி4நிஷேத4 வசனமாகில் அரசனுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டே காமம் தொழிற்படவேண்டும்; அப்படி நாம் காணவில்லையே.

இப்படி மடலூர்ந்தார் யார் யார்? என்னில்: "தே3வர், க3ந்த4ர்வர், மனிதர், பாம்புகள் முதலியவற்ருேடு கூடியதான உலகை மலைகளோடுகூட நான் தலைகீழாக்குவேன்" [ரா-ஆர 64-75] 'ஶோகத்தைப் போக்கும் அஶோகமரமே! என் காதலியைக் காட்டுவதன்மூலம், துன்புற்ற மனத்தையுடைய என்னை விரைவில் உன்

(அஶோக ஶோகாபநுத3 ஶோகோபஹதசேதஸம் | த்வந் நாமாநம் குரு க்ஷிப்ரம் ப்ரியாஸந்த3ர்ஶநேந மாம் ||) என்றும், "न मे स्नानं बहुमतं वस्त्राण्याभरणानि च। तं विना कैकयीपुत्रं भरतं धर्मचारिणम् ||" (ந மே ஸ்நாநம் ப3ஹுமதம் வஸ்த்ராண்யா ப4ரணாநி ச| தம் விநா கைகயீபுத்ரம் ப4ரதம் த4ர்மசாரிணம் ||) என்றும், "या न शक्या पुरा द्रष्टुं भूतैराकाशगैरपि। तामद्य सीतां पश्यन्ति राजमार्गगता जनाः ||" (யா ந ஶக்யா புரா த்3ரஷ்டும் பூ4தைராகாஶகை3ரபி| தாமத்3ய ஸீதாம் பஶ்யந்தி ராஜ மார்க்க3க3தா ஜநா: ||) என்றும் "மன்னனிராமன்பின் வைதேவி என்றுரைக்கும் அன்னநடைய அணங்கு நடந்தி லளே" என்றும் இப்படிகளாலே தோற்றார் ஊருமத்தனே. வாஸவத3த்தாதி3கள் பக்கலிலும் கண்டோம். இவள் ராஜ

னுடைய ஸ்த2ாநங்களிலே ப4க3வத்ப்ரஸாத3மாய், அதடியாக பரப4க்தி பரஜ்ஞாந பரமப4க்தியாயிருக்கும். பேற்றுக்குக் கைம்முதலாக "மயர்வற மதிநலமருளினன்" என்று சொல்லி, அவ்வருளடியாக, சூழ்விசும்பணிமுகிலுக்கு இவ்வருகெல்லாம் பரப4க்தி பிறந்தபடியாய், சூழ்விசும்பணிமுகில்தன்னிலே பரஜ்ஞாநம் பிறந்தபடியாய், முனியே நான்முகனிலே பரம ப4க்தி பிறந்தபடியாய் அநந்தரம் பெற்றுத் தலைக்கட்டினராய் அருளிச்செய்தாரிறே.

---

பெயரையுடையவனுக-அஶோகனுக (ஶோகமற்றவனுக) — செய்வா யாக" [ரா-ஆர 60-17] "அறவழிநடக்கும் கைகேயிபுத்திரனுன ப4ரதனை நீங்கி எனக்கு நீராட்டமும், உடுப்புக்களும், அணிகளும் வேண்டியிருக்கவில்லை" [ரா-யு 124-7] என்றும், "எந்த தே3வி யானவள் ஆகாஶத்தில் ஸஞ்சரிக்கும் ஜீவராசிகளாலும் காணமுடி யாதவளாயிருந்தாளோ, அந்த சீதையை இன்று ராஜவீதியிலுள்ள எல்லா ஜனங்களும் காண்கிருர்கள்" [ரா-அ 33-7] என்றும், "மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்கும் அன்னநடைய அணங்கு நடந்திலளே" [பெரியதிருமடல் 10] என்றும் இவ்வழி களாலே அன்புக்குத் தோற்ருர் ஊருவதுண்டு; வாஸவத3த்தை முதலானரிடமும் கண்டோம். "ராஜகுலத்தில் பிறந்தவர்களே மட லூருவதை இவ்வுதா3ஹரணங்களில் காண்கிருேம்; இப்பரகாலநாயகி ராஜபுத்திரியானவளோ?" எனில்:

புத்ரியானபடி எங்ஙனேயென்னில்; **"स श्लाघ्यः स गुणी धन्यः स कुलीनः स बुद्धिमान्"** (ஸ ஶ்லாக்₄யஸ் ஸ கு₃ணீ த₄ந்யஸ் ஸ குலீநஸ் ஸ பு₃த்₃தி₄மாந்) என்றும் " தேசுந்திறலும் திருவு முருவமும் மாசில் குடிப்பிறப்பும்" என்றும், "குலந்தரும் செல்வம் தந்திடும்" என்றும் ப₄க₃வத்கடாக்ஷத்தாலே ஏ... புத்ரிகளுக்குண்டான வேண்டப்பாடு இவளுக்கு உ...

---

உபாஸகனுக்கு, தன்னுடைய ப₄க்தி ஸாத₄னத்துக்கு உடலாயிருக்கும்; ப்ரபந்நனுக்கு கைங்கர்யத்துக்குப் பூர்வக்ஷண வர்த்தியாய் ப்ராப்யாந்தர்க₃தமாயிருக்கும். இத்தால் ப்ராப்ய ருசியைச் சொன்னபடியிறே. ஏவம்வித₄மான து காம புருஷார்த்த₂ம். அங்ஙனன்றியே, இதுக்கு தூ₃ஷணம் சொல்லு வர்கள் அவஸ்துக்கள். அவர்களை நாம் சிலராக ஆத₃ரியோம்.

---

"ஸ ஶ்லாக்₄ய: ஸ கு₃ணீ த₄ந்யஸ் ஸ குலீநஸ் ஸ பு₃த்₃தி₄மாந் ।
ஸ ஶூர: ஸ ச விக்ராந்தோ யம் த்வம் தே₃வி நிரீக்ஷஸே ॥"
[வி-பு 1-9-11]

[எவனை ஸ்ரீதே₃வியாகிற தேவரீர் கடாக்ஷிக்கிறீரோ, அவனே சிறந் தவன்; அவனே கு₃ணவான்; அவனே பா₄க்₃யஶாலி, அவனே நற்குடிப்பிறந்தவன்; அவனே அறிவாளி; அவனே ஶூரன்; அவனே வீரன்] என்றும்,

"தேசும் திறலும் திருவும் உருவமும்
மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில்
வலம்புரிந்த வான்சங்கம் கொண்டான் பேரோத
நலம்புரிந்து நன்கடையும் வந்து"
[மு-திருவ 10] என்றும்,

"குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயராயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினும் ஆயினசெய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும் நாமம்" [பெரியதிரு 1-1-9]

கையால், இப்பிராட்டி—ப₄க₃வத்₃ விரஹத்தாலே, "துளம் படு முறுவல் தோழியர்க்கருளாள்" என்று சொல்லுகிற படியே ஒரு வாடல் மாலைபோலேயிருக்கிற இவளுக்கு அபி₄நிவேஶம் மிக்கு மடலூரத்துணிய, அத்துணிவாலே காட்டுத்தீ தாவினார் முகம் போலேயிராதே நீராடியுண்டார் முகம்போலே குளிர்ந்து எழிலும் அறமிக்கது. "**निर्गुण: परमात्माऽसौ देहं ते व्याप्य तिष्ठति**" (**நிர்க்கு₃ண: பரமாத்மாऽஸௌ தே₃ஹம் தே வ்யாப்ய திஷ்ட₂தி**) என்று பெருமாள் கையும்

---

இதிலும் பழையதாய்ப் போருகிற வழியிலே நின்றோம் நாம். அப்படி செய்தோம் நாமேயல்லோம். விவக்ஷிதராய், அறிவுடையராயிருப்பார் பலரும் இத்தையே ஆத₃ரித்தார்கள் என்னுமிடத்துக்கு ப்ரமாணமும் காட்டி இப்புருஷார்த்த₂த்தையே ஆத₃ரித்து, இத்தையொழிந்தவற்றையடையக் காற்கடைக்கொண்டு, இக்காமந்தனக்கு விஷயமாக நினைக்கிறது கு₃ணதி₃வ்ய விஷயத்தையாயிற்று. பரவ்யூஹவிப₄வங்களன்

---

**என்றும் சொல்லுகிறபடியே. ஸ்ரீமந்நாராயணனுடைய திருக்கண்ணோக்கினாலே ராஜபுத்திரிகளுக்குள்ள பெருமை இவளுக்கும் உண்டாகையாலே இவள் மடலூரக் குறையில்லை.**

**"துளம்படு முறுவல் தோழியர்க்கருளாள் துணைமுலை சாந்து கொண்டணியாள்**
**குளம்படு குவளைக் கண்ணிணை யெழுதாள் கோலநன்மலர் குழற்கணியாள்**
**வளம்படு முந்நீர் வையமுன்னளந்த மாலென்னும் மாலின மொழியாள்"** [பெரியதிரு 2-7-2]

**என்று சொல்லுகிறபடியே, ப₄க₃வானைப் பிரிந்து ஒரு வாடல்மாலை போலேயிருக்கிற இவளுக்குக் காதல் மிகுந்து மடலூரத்துணிய, அத்துணிவாலே காட்டுத்தீதூவினார் முகம்போலே கோபங்கொண்டு கொடியதாய்க் காட்சியளிக்காமல், குளித்து விருந்துண்டார் முகம் போலே குளிர்ந்து அழகும் மிகமிகுந்தது.**

**"நிர்க்கு₃ண: பரமாத்மாऽஸௌ தே₃ஹம் தே வ்யாப்ய திஷ்ட₂தி।**
**தமஹம் ஜ்ஞாந விஜ்ஞேயம் நாவமந்யே ந லங்க₄யே ॥"**
[பா₄ர-ஆர 149.8]

வில்லும் உள்ளே நிழலிடாநின்றதீ! என்று திருவடியை பீ₄மஸேநன் சொன்னாற்போலே இவளுடம்பிலே மடல் நிழலிடுகிறபடியைக் கண்ட தோழி "ஓர்ப்பாலிவ்வொண்ணுதல் உற்ற நன்னோயிது தேறினோம்" என்னுமாபோலே இவள் மடலூரப் புகுகிறபடியை அறிந்து, **"तया स राजर्षिसुतोऽभिरामया समेयिवानुत्तमराजकन्यया। अतीव रामः शुशुभेऽतिकामया विभुः श्रिया विष्णुरिवामरेश्वरः॥"** (தயா ஸ ராஜர்ஷிஸு₂தோऽபி₄ராமயா ஸமேயிவாநுத்தமராஜகந்யயா। அதீவ ராம: ஶுஶுபே₄ऽதிகாமயா விபு₄: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்

---

றிக்கே, கு₃ணாதி₄க்யமுள்ளது உகந்தருளின நிலங்களிலேயாகையால், இங்கு நிற்கிற நிலைக்கடியான கு₃ணங்களின் ஏற்றத்தையுடைய அழித்தல், பெறுதல், செய்தாலல்லது மீளுவதில்லையென்று ஒருப்பட்ட த்வரையின் ஊற்றத்தைச் சொல்லி, அதுக்காக மடலெடுப்பதாக அத்₄யவஸித்த ஊற்றத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது,

---

[*நாணேறிடாத வில்லையுடைய பரமபுருஷனை இந்த ராமபிரான் உன் திருமேனியை வியாபித்து விளங்குகிறார்; அறிவினால் அறியத் தக்க அவரை நான் அவமதிக்கவும் மாட்டேன்; தாண்டவும் மாட்டேன்.] என்று அனுமானிடம் பீ₄மஸேனன் "ஸ்ரீராமபிரானுடைய கையும் வில்லுமான திருமேனி உன்னுடம்பிலே காட்சியளிக்கிறது" என்று சொன்னாற்போலே இவள் மேனியிலே மடலெடுக்கவேணுமென்னும் உறுதி வெளிப்படுவதைக்கண்டதோழி, "ஓர்ப்பால் இவ் வொண்ணுதல் உற்ற நல்நோயிது தேறினோம்" [திருவாய் 4-6-1] என்று இவள் மடலூரப் போகிறபடியை அறிந்து. "ராஜரிஷியான த₃ஶரத₂னின் புத்திரனான அவ்விராமபிரான், அழகியவளும் சிறந்த ராஜகன்யையுமான சீதையோடு கூடி. மிக விரும்பப்படும் ஸ்ரீதே₃வியோடு தே₃வதே₃வனான விஷ்ணுப₄க₃வான் விளங்குவதுபோலே மிக

---

"அர்ஶ ஆதி₃ப்₄யோ அச்" என்னும் வியாகரணவிதி₄யை உபயோகி₃த்து, "நிர்க்கு₃ணம் அஸ்யாஸ்தீதி நிர்க்கு₃ண:" என்னும் வ்யுத்பத்தியாலே "நாணேறிடாத வில்லையுடைய பெருமாள்" என்று பொருள் கொண்டார் அரும்பத₃வுரைகாரர். "பெருமாள் கையும் வில்லும்" என்ற ஸ்ரீஸூக்திக்கு இது பொருந்துகிறது. ஹேய கு₃ணமற்றவரான பெருமாள் என்பாருமுண்டு.

வர: ||) என்று சொல்லுகிறபடியே, "உன்னுடைய ஆபி₄ ஜாத்யாதி₃ மர்யாதை₃களுக்கும் அவனுடைய ஆபி₄ஜாத்யாதி₃ மர்யாதை₃களுக்கும் போராது இத்துணிவு. நாட்டாரும் பழியிடுவர்; மாதாபிதாக்களும் ப₃ந்து₄க்களும் கைவிடுவதும் செய்வர்கள்" என்று நிஷேதி₄க்க "என் செய்யுமூரவர் கவ்வை தோழி இனி நம்மை" என்றும், "அன்னையென் செய்யிலென் ஊரென் சொல்லிலென்" என்றும், "யாம் மடலூர்ந்தும்" என்றும் மடலூருவது போக்கிப் புருஷார்த்த₂மில்லையென்று உபபாதி₃க்கிருள்.

சடக்கென மடலூராதே தோழிக்கு நின்று உத்தரஞ் சொல்லுவானென்னென்னில்; "चापमानय सौमित्रे" (சாபமாநய ஸௌமித்ரே) என்றும், "இரைக்கும் கருங்கடல்

---

சிறியதிருமடலில் க்ருஷ்ணுவதாரத்திலே மடலெடுத்துப் பெற நினைத்தார். அவ்வவதாரம் பரத்வத்தோடொக்கச் சொல்லலாம்படியாயிற்று. நீர்மைக்கு எல்லைநிலமுமாய், அதுபோலே காலாந்தரப₄ாவியாகாதே நினைத்தபோதே மடலெடுத்து

---

வும் விளக்கமுற்ருன்' [ரா-பா 77-32] என்று சொல்லுகிறபடியே, உன்னுடைய நற்குடிப்பிறப்பு, அழகு, கு₃ணம் முதலான பெருமைகளுக்கும், அவனுடைய அப்பெருமைகளுக்கும் தகாது இத்துணிவு; நாட்டிலுள்ளாரும் உன்னைப் பழிசொல்லுவர்; உன் தாய்தந்தையரும் கைவிடுவார்கள்'' என்று இவளை மடலெடுக்கக்கூடாதென்று தடுக்க, ''என்செய்யும் ஊரவர் கவ்வை தோழி இனி நம்மை'' [திருவாய் 5-3-2] என்றும், ''அன்னையென் செய்யிலென் ஊரென் சொல்லிலென்'' [திருவாய் 5-3-6] என்றும், ''யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமலர் தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம்'' [திருவாய் 5-3-10] என்றும் மடலூருவதைத்தவிர வேறு சிறந்த பிறவிப்பயன் இல்லை இப்போது என்று நிரூபிக்கிருன் இங்கு.

விரைவாக மடலூரத்தொடங்காமல், தோழிக்கு பதிலுரைப்பதிலே பொழுதுபோக்குவானென்? என்னில்: ''லக்ஷ்மணு! வில்லைக் கொண்டுவா'' [ரா-யு 21-22] என்று ராமபிரான் உரைத்தவுடன் அக்கடல் ஓடிவந்தது போலவும், ''மடலூர்துமே'' [திருவாய் 5-3-9] என்று ஆழ்வார் உரைத்தவுடன், ''இரைக்கும் கருங்கடல்வண்ணன்''

ஸ்ரீ:

திருமங்கை மன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரியதிருமடல்

—✻—

## மன்னிய பல்பொறிசே ராயிரவாய் வாளரவின்

*பதவுரை :—* *மன்னிய*—வாழ்ந்திடுக; *பல் பொறி சேர் ஆயிரம் வாய் வாள் அரவின்*—பல புள்ளிகளையும் ஆயிரம் வாய்களையும் ஒளியையும் உடையனான திருவனந்தாழ்வானுடைய,

---

வண்ணன்" என்றும் சொல்லுகிறபடியே "மடல்" என்ன அக்கடல் பட்டது பட்டு அவன்வந்து தோன்றுமென்று பலகைப்புறத்தே பகட்டுகிறாள். தோழியும் இவள் சொல்லக் கேட்டுப் போதுபோக்குமளவில் அவன் வரும் என்னுமத் தாலே "சொல்லிக்காண்" என்கிறாள்.

வ்யா:—(மன்னிய) "**भद्रं**" (ப₄த்₃ரம்) "வாழியரோ" "**यामोषधिमिवायुष्मन्नन्वेषसि महावने**" (யாமோஷதி₄மிவாயுஷ்மந்

---

அழிக்கலாம்படி ஸங்நிஹிதமுமாயிருக்கிறதாயிற்று உகந் தருளின நிலங்களிலே மடலெடுத்துப் பெறநினைக்கிற இது. க்ருஷ்ணனுகிறான் நிர்லஜ்ஜனுகையாலே தானும் ஒக்க மட லெடுக்கும்; மடலுக்கு இருய்ப்பாளொருவனல்லன். கு₃ணபி₄ மானம் பண்ணியிருக்குமிடத்தே கு₃ணங்களை அழிக்கையாகிறது கடுகப் பெறுகைக்கு உறுப்பாயிருக்கும்.

*வ்யா:*—(மன்னிய) மடலெடுத்து அவனை அழிப்பதாக ஒருப்பட்ட தன் துணிவின் ஊற்றத்தை அநுஸந்தி₄த்து, என்

---

[திருவாய் 5.3-11] என்று அவன் ஓடிவந்ததுபோலவும். நாம் மட லென்றவுடன் அக்கடல் கலங்கினாற்போலே கலங்கி ஓடிவருவான் என்னும் கருத்தாலே பலகைக்குப்பின்னால் (மறைவிடத்திலே) நின்று மிரட்டுவாரைப்போலே ப₄யமுறுத்துகிறாள். தோழியும் இவள் பதில் சொல்லுவதைக் கேட்டுப் போதுபோக்கிக்கொண்டிருந்தால் அவன் வரக்கூடும் என்னும் நினைவாலே "பதில் சொல்லுவாய்" என்கிறாள்.

வ்யா:-(மன்னிய) மங்க₃ளமுண்டாகக்கடவது; பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியைக்கண்டவுடன் "ப₄த்₃ரம் தே" [ரா-பா₃ 73-28] [உனக்கு மங்க₃ளமுண்டாக] என்ற ஜனகனைப்போலவும். "வாழி

மென்கிறது ஸாத்₄யரூபத்தாலும் ஸாத₄ந ரூபத்தாலுமாக்க கொண்டு நிற்பதொரு நிலையுண்டிறே. பொருளென்கிறது- அர்த்த₂ புருஷார்த்த₂த்தை. இன்பமென்கிறது தாம் ஆத₃ரித்திருக்கிற காமபுருஷார்த்த₂த்தை. வீடென்கிறது- நாலாவதாகச் சொல்லுகிற மோக்ஷபுருஷார்த்த₂த்தை.

(நான்கினிலும்) இவை நாலிலும். (பின்னையது பின்னை) பின்னையதுண்டு-பிறபடச் சொல்லுகிற மோக்ஷம்; அது பின்னையது; (பின்னை) அது பின்னை பின்னை என்றே போமித்

---

மென்றதாகவுமாம். அன்றிக்கே, இம்மன்னுகைதானும் மற்று முள்ளவற்றிலேயும் ஏற்றிச்சொல்லவுமாம். அது இவருடைய அபி₄ப்ராயத்தாலல்ல; வாதி₃ப்ரதிவாதி₃களுடைய பு₃த்₃தி₄, பே₄த₃த்தாலே. ஏவம்வித₄மான த₄ர்மமும் காமஶேஷம்; மற்றைய அர்த்த₂மும் காமஶேஷம்; காமமே புருஷார்த்த₂ம். இனி ப₄க₃வத்புருஷார்த்த₂ம் ஒன்று உண்டென்று சொல்லு வர்கள். (நன்னெறி மேம்பட்டன நான்கன்றே) என்று இங்ஙனே லோகத்திலே நன்றான வழியாலே பொருந்தப்பட்ட புருஷார்த்த₂ங்கள் நாலன்றோ.

(நான்கினிலும்) அந்நாலிலும். (பின்னையது பின்னை) அது பின்னையுமாயிருக்கும். "அப்போது இப்போது" என்று சொல்லிப் போருமித்தனையல்லது பெற்றறிவாரில்லை. பின்னை

---

த₄ர்மம் என்று பொருளாகிறது; 'மன்னுமறம்' என்பதென்? என்னில்; தான் அர்த்த₂த்தால் ஸாத்₄யமாகவும், காமத்துக்கும், மோக்ஷத்துக்கும் ஸாத₄னமாகவும் ஆக இரண்டு ரூபத்தோடு நிலைபெற்றிருக்கையைச் சொல்லுகிறது. 'பொருள்' என்கிறது அர்த்த₂மென்னும் புருஷார்த்த₂த்தை. 'இன்பம்' என்கிறது தாம் ஆத₃ரித்திருக்கும் காமபுருஷார்த்த₂த்தை. 'வீடு' என்கிறது நாலாவதாகப் பிறர் சொல்லுகிற மோக்ஷ புருஷார்த்த₂த்தை.

(நான்கினிலும்) இவை நாலிலும். (பின்னையது பின்னை) பின்னையது-கடைசியில் சொல்லுகிற மோக்ஷ புருஷார்த்த₂ம் பின்னையது; (பின்னை) அது பிறகு பிறகு என்றே போகக்கூடியது. இந்த

## தொல்நெறியை வேண்டுவார் வீழ்கனியு மூழிலையும் 12

ஓர் தொல் **நெறியை** — விலக்ஷணமாயும் அநாதி₃யாயுமுள்ள அந்தப் பரமபத₃த்தை (அல்லது அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தை) வேண்டுவார் **தாம்**—அடையவிரும்புமவர்கள், ***வீழ் கனியும் ஊழ் இலையும் என்னும்***—தானே பழுத்து விழுந்த பழங்களும் சருகான இலைகளுமேயாகிற,

---

தன்ன. இச்சரீரத்துடனே பெற்றறிவாரில்லை. அத்தைச் காற்கடைக் கொள்ளுகையாலும் சொல்லுகிற வார்த்தை யிறே. ஆசைப்பட்ட இச்சரீரத்தைவிட்டு வேறொரு ஶரீரத தைப் பரிக்₃ரஹித்து ஒரு தே₃ஶவிஶேஷத்திலே போய்க் காலாந்தரே அநுப₄விக்குமது ஒரு அநுப₄வமாயற்றதோ? அதொன்றல்லவிறே. அதுதான் அவ்வசநங்கள் சொல் லக்கேட்குமித்தனை; கண்டு வந்தாரொருவருமில்லை. (பெயர் தருமென்பது) பெற்றியைத் தரும்; இஶ்ஶரீரத்தைவிட்டு வேறொரு ***ஶரீரத்தைப்பெற்று*** அநுப₄விக்கவேண்டியதா யிருக்கும். இஶ்ஶரீரத்தைவிட்டு வேறொரு ஶரீரத்தைப்

---

யும் அது நாநாவித₄மாகச் சொல்லப்பட்ட புருஷார்த்த₂ம். (பெயர்தரும்) பேற்றிலே தருமென்பர்கள். இந்த ப்ரக்ருதி ஸமநந்தரம் காணப்பெறுவது என்பர்கள். அத₂வா—(பின்னை யது பின்னை) பின்னையது—கடைவழி சொன்ன மோக்ஷ

---

**ஶரீரத்தோடே பெற்றறிவார் ஒருவருமில்லை.** ஶாஸ்த்ரஸித்₃த₄மான **பரமபுருஷார்த்த₂மான இதை இகழலாமோ?** எனில். இவ்வுடம் **போட்ட இங்கே பெறவேணும் என்னும் ஆசையாலே அதைத் தாழ்த் திச் சொல்லுகிறாராகையாலே** நஹிநிந்தா₃ ந்யாயத்தை நினைக்க **வேணும். ஆசைப்பட்ட இந்த ஶரீரத்தை விட்டு** வேறொரு ஶரீரத்தை **எடுத்து, நெடுந்தூரமுள்ள ஒரு தே₃ஶத்திலே போய் எப்போதோ ஒரு காலத்தில் அநுப₄விக்கும் அது ஓரநுப₄வமாகுமோ? ஆகாது.** அவ்வநு **ப₄வமும் சில வேத₃ வைதி₄க வசனங்கள் சொல்லக் கேட்குமித்தனையே: கண்டு வந்து சொன்னவர் ஒருவருமில்லை. (பெயர் தரும் என்பது)** ஶரீராந்தரத்தைத் **தரும் எனப்படுவது. இந்த ஶரீரத்தைவிட்டு வேறொரு** ஶரீரத்தைப் பெற்று **அநுப₄விக்கவேண்டியதாயிருக்கும்: இந்த** ஶரீரத்தை **விட்டு வேறொரு உடம்பைப்பெற்று அநுப₄விப்பதாவது—**

பெற்று அநுப₄விக்கையாவது-ஒருவன் தபஸ்ஸு பண்ணி, அந்த தப:ப₂லம் வேறொருவன் பு₄ஜிக்கும்மாத்ரமன்றோ? அன்றியே, பின்னைப் பெயர் தரும் என்றாய் - அதுக்கும் பொருள் அதுவே.

(ஓர் தொல்நெறியை வேண்டுவார) ஸம்ஸாரத்தை யொழித்து நிரதிஶயஸுக₂மான /(மோக்ஷத்தை வேண்டு வார். இப்படி சொல்லப்படாநின்றுள்ள பழையதான) மோக்ஷத்தைப் பெறவேண்டியிருப்பார். அத்தே₃ஶம் ப்ராப்யமானால் அங்குத்தைக்குப் போம் வழியும் ப்ராப்யாந் தர்க₃தமாகக் கடவதிறே. (வேண்டுவார்) அத்தையும்

---

மானது, பின்னை—காலாந்தரே, தே₃ஹாந்தரே, தே₃ஶாந்தரே, பெயர்தரும்—பேற்றைத்தரும், என்பது—என்று சொல்லு கிறார்கள், என்னவுமாம்.

(ஓர் தொன்னெறியை வேண்டுவார்) இப்படிச் சொல்லப் படுகிறனவாய், அத்₃விதீயமாய், பழையதாயிருக்கிற ப்ராப் யத்தை வேண்டுவோர், அர்சிராதி₃மார்க₃த்தை வேண்டுவார் என்னவுமாம். ஜ்ஞாநம் பிறந்தவநந்தரம், க₃திசிந்தையோடு

---

ஒருவன் தவம்புரிந்து, அத்தவத்தின் பலனை மற்றொருவன் அநுப₄ விப்பதுபோன்றது. அல்லது, 'பின்னைப் பெயர்தரும்' என்று கூட்டி பின்னர், பின்னர் என்னும் பெருமையையே தரும் என்று முதலிற் சொன்ன பொருளேயாகவுமாம்.

(ஓர் தொன்னெறியை வேண்டுவார்) ஸம்ஸாரத்தை ஒழித்து ஒப்பற்ற இன்பமாயிருக்கும் மோக்ஷத்தை விரும்புவார். ஓர்—ஒப் பற்ற. (ஓர் தொல் நெறியை வேண்டுவார்) இப்படி ஒப்பற்றதாகச் சொல்லப்படுவதாய், பழையதான மோக்ஷத்தைப் பெற விரும்பி யிருப்பார்; நெறியென்று வழியைச் சொல்லும் ஶப்₃த₃ம் அத்நெறி யால் அடையப்படும் இடத்தையும் குறிக்கிறது. அல்லது வழியையே குறிப்பதாகக் கொண்டாலும் குற்றமில்லை. அவ்விடம் விரும்பப்படுவ தாகில், அங்குபோகும் அவ்வழியும் விரும்பப்படுவதேயன்றோ. (வேண்டுவார்) அதையும் ஒரு பொருளாக நினைத்து விரும்புவார்

---

குண்ட₂லிதம் சில ப்ரதிகளிலேயே உள்ளது.

**என்னு மிவையே நுகர்ந்துடலம் தாம்வருந்தித்**

***இவையே நுகர்ந்து*** — இவ்விரண்டையே தின்று, ***உடலம் வருந்தி***—உடம்பு நொந்து,

---

ஒன்ருக நினைத்து அபேக்ஷிப்பார் என்று தமக்கு அதிலுண்டான அநாதரத்தைச் சொல்லுகிருர்.

இனி இப்புருஷார்த்தத்தை அநுஷ்டிக்கும் ஸாதநத்தினுடைய பொல்லாங்கை உபபாதிக்கிருர் மேல்—(வீழ் கனியும்) தானே விழுந்து பசையற்ற கனியும். (ஊழிலையும்) முளையிலே விழுந்த இலையும், முற்றிப்பழுத்துச் சருகான இலையும். (என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தி)

---

வழியில் போக்கோடு தேசவிசேஷ ப்ராப்தியோடு வாசியற ஜ்ஞாநபலமாய் வருகிறதாகையாலே ப்ராப்யாந்தர்கதமாகக் கடவது. இத்தையும் ஒரு புருஷார்த்தமாக நினைத்துப் பெற வேண்டியிருப்பார்க்கும். இத்தால்—ஸ்வாபிமதமன்று என்னுமிடம் தோற்றுகிறது.

இப்பேறு பெறவேணுமென்றிருப்பார் பண்ணும் ஸாதநாநுஷ்டாநத்தினுடைய அருமையிருக்கும்படியைச் சொல்லுகிறது மேல். (வீழ்கனியும் ஊழிலையும் என்னுமிவையே) இனிய வஸ்துவை பூஜிக்கைக்கு இட்டுப் பிறந்த இவன்

---

உண்டாவதே! கையில் கனியிருக்க, துரட்டிப் பழத்துக்கு அண்ணாந்து பார்ப்பதே! என்று தமக்கு அப்புருஷார்த்தத்தில் உண்டான ஆதரமின்மையைச் சொல்லுகிருர்.

இனி, இந்த மோக்ஷபுருஷார்த்தத்தைப் பெறவிரும்புவார் அநுஷ்டிக்கும் ஸாதநத்தினுடைய ***தீமையை*** விவரிக்கிருர் மேலே.—(வீழ் கனியும்) தானே வீழ்ந்த கனியும்; தானே வீழ்கையாலே பசையற்றதாயிருக்கை. (ஊழிலையும்) ஊழ் என்று உதிர்தலுக்கும், பழமைக்கும் பெயர். முளையிலே உதிர்ந்து சருகான இலையையும், முற்றிப்பழுத்து விழுந்து சருகான பழமையான இலையையும் சொல்லுகிறது. இதிலும் பசையில்லையென்று கருத்து. (என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தி) சருகிலை தின்றும், பசையற்ற காய்

அதாவது-சருகிலை தின்றும் காயுங்கிழங்கும் தின்றுமிறே தபஸ்ஸு அநுஷ்டி2ப்பது. அவதா4ரணத்தாலே, ஒரு வ்ரத ஸமாப்தி பிறந்து பின்னையொரு வ்ரதாரம்ப4த்தின் முன்னே யாகிலும் ஏகவாரம் அந்நம் பு4ஜித்ததுமில்லையென்று தோற்றுகிறது. இத்தால், அநவரதகாயக்லேஶம் சொல்லு கிறது. (நுகர்ந்து) அந்த ஸாத4நத்தில் பண்ணின ஆத3 ரம் தோற்ற போ4க்3யதையுண்டானதுபோலேயிருக்க பு4ஜிக்கை. (உடலம் தாம் வருந்தி) அபி4மத விஷயத் தைக்கண்டு இங்கே அனுப4விக்கலாயிருக்கிற ஶரீரத்தை க்லேஶிப்பித்து. (தாம் வருந்தி) இவனுடைய கர்மங்

பு4ஜிக்கிற த்3ரவ்யங்களுடைய அஸாரத்தை நினைத்து இவற் றைத் தாம் வாய்விட்டுச் சொல்லமாட்டாமே இப்புடை யிலே 'என்னுமிவையே' என்கிறார். (நுகர்ந்து) இவற்றை பு4ஜிக்கும்போது அம்ருதபாநம் பண்ணுவாரைப்போலே போ4க்3யபு3த்3தி4கொண்டு பு4ஜிக்கவேணும். இதினுடைய ஹேயதை நெஞ்சிலே படில் புருஷார்த்த2ஸித்3தி4யில்லை. (உடலம் தாம் வருந்தி) "स्थूलोऽहं कृशोऽहम्" (*ஸ்தூ2லோऽஹம் க்ருஶோऽஹம்*) என்கிறபடியே "நான் பருத்தேன், நான் இளைத் தேன்" என்னலாம்படி தானாக அபி4மானித்த ஶரீரத்தை ஒறுத்து. (அபி4மதவிஷயத்தை அநுப4விக்கைக்குப் பரிகர மான ஶரீரத்தை ஒறுத்து.) அபி4மதவிஷயத்தை அநுப4விக்

கனிகிழங்குகளைத் தின்றுமன்றோ தவத்தைத அனுஷ்டி2ப்பது. 'இவையே' என்றவிடத்தில் ஏகாரத்தாலே, ஒரு விரதம் முடிந்து மற்றொரு விரதம் ஆரம்பிக்குமுன்பாவது ஒரு தடவை உணவு உட் கொண்டதுமில்லை என்று விளங்குகிறது. இதனால், இடைவிடாமல் உடம்பை வருத்தவேண்டும் என்பதைச் சொல்லுகிறது. (நுகர்ந்து) ரஸித்து பு4ஜித்து. ஸாத்4யத்தில் உண்டான ஆசையாலே, ஸாத4 னத்திலும் பேரன்புபூண்டு. அதற்கு அங்க3மாகச் சருகிலை தின்னும் போதும் மிகவினிய உணவை உண்பதுபோலே சுவைத்து உண்கிற படி. (உடலம் தாம் வருந்தி) இனிய பொருளை (அர்ச்சைத் திருமேனியைக்) கண்டு இங்கே அநுப4விக்கக்கூடிய உடம்பைத் துன்புறுத்தி. (தாம் வருந்தி) உலகிலே, கர்மத்தால் தாழ்ந்த விடங்

**துன்னு மிலைக்குரம்பைத் துஞ்சியும் வெஞ்சுடரோன் 13**
**மன்னு மழல்நுகர்ந்தும் வண்தடத்தி னுட்கிடந்தும்**

***துன்னும் இலைக்குரம்பைத் துஞ்சியும்*** — நெருக்கமான பர்ண ஶாலைகளிற்கிடந்தும், ***வெம்சுடரோன்*** — கொடிய கிரணங்களை யுடைய சூரியனுடைய, ***மன்னும் அழல் நுகர்ந்தும்*** — நிலை நின்ற வெய்யிலைப் புசித்தும், ***வண் தடத்தினுட்கிடந்தும்*** — வண்மை மிக்க தடாகங்களிலே மூழ்கிக் கிடந்தும்,

---

கொண்டுபோய் க்லேஶிப்பித்தல், தைவம் கொண்டு போய் க்லேஶிப்பித்தல் செய்யுமதொழியத் தாமே க்லேஶிப் பித்து. (துன்னுமிலைக் குரம்பைத் துஞ்சியும்) இலையாலே நெருங்கச் செய்த பர்ணஶாலைகளிலே கிடந்தும். அதில் நின்றும் உதிர்ந்த புழுதியானது கண்ணிலே புக்கு நோவு படும்படியாகத் துஞ்சியும். நித்ரை மரணத்தோடு பர்யாய மாகையாலே துஞ்சியுமென்கிறது.

---

கைக்குப் பரிகரமான ஶரீரத்தையாயிற்று ஒறுப்பது. (தாம் வருந்தி) தாம் பண்ணின கர்மமாதல், கர்மபலமாதல், ஈஶ்வரனாதலன்றியே தாமே வருந்தி. "விடாக்கும்" இத்யாதி. (துன்னும் இலைக்குரம்பைத் துஞ்சியும்) நெருங்கத்தொடுத்த பர்ணஶாலைகளிலே நித்ரைபண்ணியும். நித்ரைக்கும் விநாஶத் துக்கும் ஸாதாரண ஶப்தமான துஞ்சுதலைச் சொல்லுகிறது— நித்ரை மரணகல்பமாகையாலே.

---

களுக்குச் சென்று வருந்துவதும், யமன் முதலான தெய்வங்கள் இவனைத் தங்கள் உலகுக்குக் கொண்டுபோய் வருத்துவதும் உண்டு; இது அப்படிப் பிறிதொன்றால் வந்த துன்பமன்று. தானே வர வழைத்துக்கொண்ட துன்பம் என்று காட்டுகிறார். (துன்னுமிலைக் குரம்பைத் துஞ்சியும்) நெருங்கிய இலைகளால் வேயப்பெற்ற பர்ண ஶாலைகளிலே கிடந்து தூங்கியும். குரம்பை-வீடு; இலைக்குரம்பை-பர்ண ஶாலை. இப்பர்ணஶாலைகளில் கிடக்கும்போது அதிலிருந்து உதிர்ந்த புழுதிகள் கண்ணிலே புகுந்து பெருந்துன்பம் விளைவிக்கும்படி துஞ்சியும். 'துஞ்சுதல்' என்னும் சொல் மரணம், தூக்கம் ஆகிய இரண்டையும் காட்டுவது. இங்கு இவன் தூங்கும் தூக்கமும் மரணத்தையொத்த துன்பத்தைத் தருவதாகையாலே துஞ்சியும் என்கிறார்.

(வெஞ்சுடரோன் மன்னுமழல் நுகர்ந்தும்) உஷ்ண கிரணனுன ஆதித்யனுடைய வெய்யிலே பக்ஷித்தும். மன்னுமழல் நுகர்ந்தென்கிறது-உள்ளுப்புக்காலும் அழல் மாருதேயிருக்கையும், இதுவே தண்ணீருமாக நுகருகை யும். காற்றை பக்ஷித்தும் வெய்யிலே பக்ஷித்துமிறே ஶரீரத்தை ரக்ஷிப்பது. (வண் தடத்தினுட்கிடந்தும்) அழ கியதாக ஜலக்ரீடை பண்ணிப் போதுபோக்கலான தடா

---

(வெஞ்சுடரோன் மன்னுமழல் நுகர்ந்தும்) ஸர்வபதார்த் தங்களையும் தபிப்பிக்கும் உஷ்ணகிரணனுன ஆதித்யனுடைய பொருந்தின உஷ்ணத்தை புஜித்தும், பதார்த்தங்கள் உள்ள விடமெங்கும் புக்கு வ்யாபிக்கக் கடவதாய்ப் புறப்பட்ட போதோடு உள்ளேபோய்ப் புக்கபோதோடு வாசியற சுடக் கடவதாயிருக்கிற அழலை நுகர்ந்தும். ஸந்த்யாகாலத்தில் ஆதித்ய கிரணங்களை யாயிற்று புஜிப்பது. தாஹகமான கிரணங்களை போக்ய ஆதமாயிருப்பதொரு பலம்போலே புஜித்து.

(வண்தடத்தினுள் கிடந்தும்) அபிமதைகளான ஸ்த்ரீ களுக்கும் நினைத்தபடி ஜலக்ரீடாதிகள் பண்ணி அநுபவிக் கைக்கு யோக்யமான அழகிய தடாகத்திலே அகமர்ஷணம் பண்ணியும். (உட்கிடந்தும்) மேலே கிளம்புதல், உள்ளே வர்த்திக்கிற ஜலசர ஸத்வங்களில் கண்வைத்தல் செய்ய வொண்ணுது. (கிடந்தும்) அநேகமாயிரம் வத்ஸரம் கிடக்கு

---

(வெஞ்சுடரோன் மன்னும் அழல் நுகர்ந்து) உஷ்ணகிரணனுன சூரியனுடைய வெய்யிலேப் புசித்தும். 'மன்னும் அழல்' [நிலை நின்ற உஷ்ணம்] என்றது இவன் உடம்பினுள் புகுந்து அவ்வுஷ் ணம் நிலையாய் நிற்பதைக் காட்டுகிறது. உண்ணும்சோற்றின் ஸ்தானத்திலே மாத்திரமல்லாமல் பருகுநீரின் ஸ்தானத்திலும் இவனுக்கு இதுவேயாயிருப்பதையும் காட்டுகிறது. காற்றையும் வெயிலேயும் புசித்து, நீரும் அருந்தாமலன்றே இவன் உடம்பைக் காப்பாற்றுவது. (வண்தடத்தினுட் கிடந்தும்) குளத்திற்குள்ள வண் மையை அநுபவிக்கக் கொடுத்துவைக்காதவனுகிவிட்டானே! வண்தடம்-வண்மைமிக்க தடாகம்; இன்பத்தை விரும்புமவர்களே 'வாருங்கள் வாருங்கள்' என்று அழைக்கும் குளம். கோடைகாலத்

**இன்னதோர் தன்மையரா யீங்குடலம் விட்டெழுந்து 14**
**தொன்னெறிக்கட் சென்ருரெனப்படுஞ் சொல்லல்லால்**
**இன்னதோர் காலத் தினையா ரிதுபெற்ருர் 15**
**என்னவுங் கேட்டறிவ தில்லை உளதென்னில்**

***இன்னது ஓர் தன்மையர் ஆய்*** — ஆக இப்படிப்பட்ட ஸ்வபாவங்களையுடையராய்க்கொண்டு, ***ஈங்கு உடலம் விட்டு எழுந்து*** — இவ்வுலகில் ஶரீரத்தை விட்டொழித்து மேலே கிளம்பி, ***தொல் நெறிக்கண் சென்ருர் எனப்படும் சொல் அல்லால்***—பழையதான ஒரு ஸ்தானத்திலே போய்ச் சேர்ந்தார்கள் என்று சொல்வதைத் தவிர, ***இன்னது ஓர் காலத்து இனையார் இது பெற்ருர்***—இன்ன தினத்தில் இன்ன மநுஷ்யன் இந்த மோக்ஷத்தில் போய்ச் சேர்ந்தான், ***என்னவும் கேட்டு அறிவது இல்லை***—என்று சொல்லக் கேட்டதேயில்லை;

---

கங்களிலே ஶீதகாலத்திலே புக்கு நீர்க்காக்கைபோலே முழுகிப் பாசியேறக்கிடந்தும். (இன்னதோர் தன்மையராய்) தப:பலம்பெற்று அதிலே வ்யுத்பத்திபண்ணிணுலும் அதுக்கு ஆளாகாதபடி து:க்கமே ஸ்வபாவமானபடி. (ஈங்குடலம் விட்டெழுந்து) நினைத்தபடி அநுபவிக்கலான இங்கே தாஞக அபிமாநித்து நெடுநாள் முகம் பழகின ஶரீரத்தைவிட்டு எழுந்துபோய்.

---

மாயிற்று. (இன்னதோர் தன்மையராய்) ஏவம்விதஸ்வபாவத்தையுடையராய். (ஈங்கு) இங்கிருக்கும் நாள். (உடலம் விட்டெழுந்து) அநந்தரம் தாஞக அபிமாநித்த ஶரீரத்

---

**தில் ஸ்த்ரீகளோடு அழகாகக் குடைந்தாடி இன்பமாகப் போதுபோக்கத்தக்க குளங்களிலே குளிர்காலத்திலே புகுந்து நீர்க்காக்கைபோலே முழுகியிருந்து, பாசிபடியும்படியாகக் கிடந்து தவம் செய்தும். (இன்னதோர் தன்மையராய்) துன்பத்தோடு பழகிப்பழகி இதுவே இயற்கையாகிவிடுகின்ற இவனுக்கு, தவத்தின் பலமான பேரின்பத்தைப் பெற்ருலும் அது எப்படி ரஸிக்கும்? (ஈங்குடலம் விட்டெழுந்து) நினைத்தபடி அநுபவிக்கத்தக்க இவ்வுலகில், தாஞகவே இவஞல் அபிமானிக்கப்பெற்றதாய், நெடுநாளாக உடனிருந்து பழகியதாகையாலே 'உடலம்' எனப்படுவதான இவ்வுடம்பை விட்டுப்போய்.**

(தொல்நெறிக்கட்சென்றாரெனப்படும் சொல்லல்லால்) மோக்ஷத்தேறப் போனார்களென்கிற உக்தியல்லது. (இன்னதோர் காலத்து) ஏதேனுமொரு காலத்திலே. (இனையார் இது பெற்றாரென்னவும் கேட்டறிவதில்லை) ஆரேனுமொருவர் இப்புருஷார்த்தத்தைப் பெற்றாரென்று கேட்டறிவதில்லை; ப்ரமாணங்கள் சொல்லக்கேட்குமத்தனை. "ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த:" (ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த:) என்று வசநங்களைப் படிக்குமத்தனையல்லது கண்டு போந்தார் உண்டாகச் சொல்லுவாரில்லை. இன்னார் பெற்றாரென்று சொல்லக் கேட்டறிவதில்லை. ஶுகவாமதேவாதிகள் முக்தரென்று சொல்லா நின்றதே, கேட்டறியத் தட்

---

தைப் பொகட்டு தேஶாந்தரே கைகழியப்போய். (தொன்னெறிக்கண் சென்றாரெனப்படும் சொல்லல்லால்) பழையதான மோக்ஷத்தேறப் போனார்களென்று சொல்லப்படுகிற சொல்லே உள்ளது. (சொல்லல்லால்) உக்திமாத்ரமேயொழியக் கண்டறிவாரில்லை. (இன்னதோர் காலத்து இனையார் இது பெற்றார் என்னவும் கேட்டறிவதில்லை) இன்னதோர் காலத்திலே ஏவம்விதஸ்வபாவராயிருப்பார் இப்பேறு பெற்றார்களென்று சொல்லக் கேட்டறிவதில்லை. மோக்ஷத்தேறப் போனார்களென்று ஶாஸ்த்ரங்களிலே "ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த:" *(ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த:)* என்று சொல்லக் கேட்டிருக்குமத்தனை. வசநம் படித்துப்போருமித்தனை.

---

(தொன்னெறிக்கண் சென்றார் எனப்படும் சொல்லல்லால்) பழையதான மோக்ஷத்துக்குச் சென்றார்கள் என்கிற சொல்லைக் கேட்கிறோமே யொழிய. (இன்னதோர் காலத்து) ஏதாவது ஒரு காலத்திலே. (இனையார் இதுபெற்றார் என்னவும் கேட்டறிவதில்லை) ஆரேனுமொருவர் இப்பயனைப் பெற்றதாக அவர் வாயிலிருந்து நாம் கேட்டறிந்ததில்லை. ஶப்தப்ரமாணங்கள் சொல்லக் கேட்பதொழிய ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தைக் கேட்டதில்லை. "ஶுகர் முக்தியடைந்தார்; வாமதேவர் முக்தியடைந்தார்" என்று வசநங்களைப் படிப்பதொழிய. மோக்ஷத்தைக் கண்டு அங்கு முக்தரை அநுபவித்து வந்தேன் என்று சொல்லுவாரில்லை. ஶுகர் வாமதேவர் முதலானோர் முக்தியடைந்ததாக ரிஷிகள் சொல்லுகிறார்களே, அதைக்கேட்டறியலாமே?

**மன்னுங் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள் 16**
**அன்னதோ ரில்லியி னூடுபோய் வீடென்னும்**
**தொன்னெறிக்கட் சென்றாரைச் சொல்லுமின்கள்**
**சொல்லாதே 17**

***உளது என்னில்***—(அடியோடு இல்லையென்று நான் சொல்லுகிற அந்த மோக்ஷம்) உண்டு என்கிற பக்ஷத்தில், ***மன்னும் கடும் கதிரோன் நல் நடுவுள்***—நித்யமாயும் தீக்ஷ்ணமாயுமுள்ள கிரணங்களையுடையனான ஸூர்யனுடைய மண்டலத்தின் நட்டநடுவே, ***அன்னது ஓர் இல்லியின் ஊடு போய்***—வாய்கொண்டு சொல்ல முடியாத அப்படிப்பட்ட ஸூக்ஷ்மமான த்வாரத்தின் வழியே சென்று, ***வீடு என்னும் தொல் நெறிக்கண் சென்றாரை சொல்லுமின்கள்*** — மோக்ஷமென்று நீங்கள் சொல்லுகிற ஒரு ஸ்தானத்திற்குப்போய்த் திரும்பிவந்தவர்களைக் காட்டுங்கள்; ***சொல்லாதே***—அப்படிப்பட்டவர்களைக் காட்டமாட்டாமல்,

---

டென்னென்னில்: "நான் போனேன், இன்னபடி அநுபவித்தேன்" என்று அங்குத்தையவர் படியைக் கண்டு வந்தார் சொல்லக் கேட்டறிவதில்லை.

(உளதென்னில்) முதலிலே அங்ஙனிருப்பதொரு புருஷார்த்தமில்லை; **"अग्निना सिञ्चेत्"** (அக்நிநா ஸிஞ்சேத்)

---

"நான் கண்டேன், நான் போனேன்" என்பாரில்லை. ஆஸ்திக்யத்தாலே சில சொல்லுமத்தனை.

( உளதென்னில் ) உண்டென்று சொல்லில். அதுக்குப் போம் வழியின் அருமையைக் கேட்கலாகாதோ? (மன்னு

---

**எனில்: "நான் மோக்ஷஸ்தானத்திற்குச் சென்றேன்; அங்கு இப்படி இப்படியிருந்தது" என்று அங்குள்ளவர்களுடைய நிலையைப் பார்த்துவந்து சொன்னவர் ஒருவருமில்லையன்றோ.**

**(உளதென்னில்) முதன்முதலில் அப்படி மோக்ஷமென்றொரு புருஷார்த்தம் இல்லை. "அக்நியாலே நனைக்கக்கடவன்" என்பது போலே விருத்தமான பேச்சாகும் மோக்ஷமுண்டென்பது. அப்படி**

போலே. அது உண்டாகவேணுமாகில் அது இருக்கிற்படி கேட்கலாகாதோ? (மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின் நல்நடுவுள்) நித்யமாய் அணையவொண்ணாதபடி கொடிதான கிரணங்களையுடைய ஸௌர்யமண்ட2லத்துள்ளிட்டுப் போகவேணுமாம். அவன் நூறாயிரம் யோஜனைக்கவ்வருகே ஸஞ்சரிக்க, இங்கே அவன் வெய்யில் பொறுக்கமாட்டாத இவன், அவனை அணையப்போகையுமன்றியே அவனுடைய உள்ளேபோகவேணுமாம்.

(அன்னதோரில்லியினூடுபோய்) அவன்தான் அப்படிப் போமிடத்து ஒருபெருவழி பண்ணிப் போகையுமன்றியே அப்படிப்பட்டதோர் இல்லியினுள்ளிட்டாம் போவது. (வீடென்னும் தொன்னெறிக்கட் சென்றாரைச் சொல்லுமின்கள்) இவன்தான் ராஜகுலம் தோற்றப் போகக்கடவனாம்;

---

மித்யாதி3) நிலைநின்ற கொடிய கிரணங்களையுடைய ஆதி3த்ய மண்ட2லத்தின் நடுவிட்டுப் போகவேணும் இங்கே நின்று ஆதி3த்யனைக் காணவொண்ணாதே வெறியோடும்படி கொடிதான ஆதி3த்யனுடைய அப்படிப்பட்ட அதிஸூக்ஷ்மமான

---

அது உண்டென்று பிடிவாதம் பிடித்தாலும், அந்த மோக்ஷத்தின் லக்ஷணத்தைக் கேளுங்கள் என்கிறார்,—(மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்) நித்யமானவனாய், அணுகவொண்ணாத படி கொடிய வெப்பத்தையுடைய சூரியனின் வட்டத்தின் நடுவில் போகவேண்டுமாம். அவன் நூறாயிரம் யோஜனைகளுக்கு அப்பாலிருக்கும்போதே இங்கே அவனுடைய வெய்யில் பொறுக்கமுடியாத இவன், அவனை ஒட்டிப்போவதோடன்றியில், அவனுடைய உள்ளே போகவேண்டுமாம்.

(அன்னதோரில்லியினூடு போய்) அந்த முக்தன் அப்படிப் போம் போது விசாலமானதொரு வழியில் செல்லாமல், குறுகியதான அவ்வழியிலே போகவேண்டுமாம். (அன்னதோர் இல்லி) 'அன்னது' என்று சொல்லுவதொழிய. விவரிக்கமுடியாத நுண்மையையுடைய துவாரம். (வீடென்னும் தொன்னெறிக்கண் சென்றாரைச்சொல்லுமின்கள்)முக்தன் ப4க3வத் ஸம்ப3ந்த4மாகிற ராஜகுலப் பெருமைதோற்ற அனைவராலும் எதிர்கொண்டு உபசரிக்கப்பட்டுப் போகிறானாம். அவன் இவனுடைய

**அன்னதே பேசு மறிவில் சிறுமனத்துஆங்கு**
**அன்னவரைக் கற்பிப்போம் யாமே அதுநிற்க 18**

***அன்னதே பேசும்*** — (மோக்ஷமுண்டென்று ஶாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறதென்று) பழம்பாட்டையே பாடிக்கொண்டிருக்கிற, ***அறிவு இல் சிறு மனத்து அன்னவரை***—விவேகமற்றவர்களும் குறுகிய மனமுடையவர்களுமான அவர்களுக்கு, ***கற்பிப்போம் யாமே***—உபதே₃ஶிப்பது நாமோ? ***அது நிற்க***— அந்த மோக்ஷவார்த்தை அப்படி கிடக்கட்டும்;

---

அவன் இவனுடைய ஶரீர விஶ்லேஷத்தளவும் அவஸரம் பார்த்து நின்று முகம் காட்டக்கடவனும்; **"हार्दानुगृहीतः"** **(ஹார்த்₃தா₃நுக்₃ருஹீத:)** என்கிறபடியே; ஆதிவாஹிகர் கையிலே காட்டிக்கொடுக்குமாம். தான் முன்னே கை விளக்குப் பிடித்துக்கொண்டு போமாம். "இப்படி அந்த மோக்ஷமாகிற பழையதாயிருக்கிற தே₃ஶத்திலே நான் போனேன், இன்னது கண்டேன், இன்னது அநுப₄வித்தேன்" என்று வந்தாரொருவரைக் காட்டிச் சொல்லிக் காணுங்கோள். இப்படி அங்குப் போய்வந்தானொருவன்

---

வழியே போய், மோக்ஷமென்று சொல்லப்படும் பழையதான ப்ராப்யத்தை லபி₄த்தவர்களை இன்னாரென்று சொல்லுங்கோள் என்று கேட்டால், சொல்லாதே இதுக்கு உத்தரமாக முன்பு சொன்னதையே சொல்லாநிற்பர்கள். அதுக்கு அடி—

---

**உடம்பு பிரியும் வரையில் பார்த்திருந்து, பிறகு முகம் காட்டுவானும். ''இருதயத்திலிருக்கும் பரமாத்மாவால் அநுக்₃ரஹிக்கப் பட்டவனாய் வழியறிந்து செல்லுகிறான் முக்த ஜீவன்'' [ப்₃ரஹ்ம ஸூத்ரம் 4-2 16] என்கிறபடியே. ஆதிவாஹிகர் என்னும் அழைத்துச்செல்லும் தே₃வர்களிடம் இவனை ஒப்பிப்பானும் ஸர்வேஶ்வரன். தானே முன்னின்று இவர்களுக்கு விளக்குப் பிடித்துக்கொண்டு வழி காட்டிப்போவானும் ஸர்வஸ்மாத்பரன். 'இப்படிச் சொல்லும் மோக்ஷமாகிற பழையதான தே₃ஶத்திலே நான் போனேன்: இன்னது பார்த்தேன்: இன்னது அநுப₄வித்தேன்' என்று கண்டு வந்தவரொருவரைக் காட்டிச் சொல்லுங்கள் பார்க்கலாம். இப்படி அங்குப்போய் வந்தவனொருவன் சொன்னால், அதையும் ஒரு பொரு**

சொல்லுமாகில், அதுவும் ஒன்ருகக்கடவது. (சொல்லாதே) இப்படி தான் • ப்ரமாணஶ்ரேஷ்டமான ப்ரத்யக்ஷாநுமாநாதிகளாலே இத்தை ஸாதிக்க இதுக்கொரு உபபத்தியை இட்டு ஏத்தமாட்டாதே. (அன்னதே பேசும்) பின்னையும் இதுக்கு உத்தரமாக மேன்மேலென **"ஶுகோ முக்தோ வாமதேவோ முக்த:"** (ஶுகோ முக்த: வாமதேவோ முக்த:) என்று வசநம் படிக்கிற இத்தால் என்ன லாபமுண்டு?

(அறிவில்) அவர்களாகிருர், தந்தாமுக்கென்ன ஒரு விவேகமில்லாத அறிவுகேடர். (அறிவில் சிறு மனத்து) இப்போது அறிவில்லையேயாகிலும் மேல் அறிவு உண்டாகைக்கீடான நெஞ்சில் அகலமும் இல்லை. (ஆங்கு அன்னவரைக் கற்பிப்போம் யாமே) அவ்வவஸ்த்தாபந்நரானவர் அறிவு கேடராகை. (சிறுமனத்து) மேல் அறிவு உண்டாக்கிக் கொள்ளவுமொண்ணுதபடி அல்பமநாக்கள். (ஆங்கு) அவ்விடத்தில். (அன்னவரை) அப்படிப்பட்டுள்ளாரை. (கற்பிப்போம் யாமே) அறிவிப்போம் நாமே. உகந்த விஷயத்தில் மடலெடுத்துப் பெறலான காலத்திலே பிறர்க்கு அறிவிக்கை

ளாகக்கொள்ளலாம். அதற்கும் வழியில்லையே. (சொல்லாதே) இவ்வாறு சிறந்த ப்ரமாணங்களான ப்ரத்யக்ஷத்தாலும், அநுமானத்தாலும் இதை நிரூபிக்கத்தக்க ஹேதுக்களைக் காட்டி இதைத் துதிக்கமாட்டாமல். (அன்னதே பேசும்) பூர்வபக்ஷி எதைக்கேட்டாலும், அதற்கு பதிலாக மேலும் மேலும் "ஶுகர் முக்தியடைந்தார்; வாமதேவர் முக்தியடைந்தார்" என்று வசனம் படிக்கிற இதனால் என்ன லாபமுண்டு?

(அறிவில்......) அப்படிச் சொல்லுபவர்கள் தமக்கிருக்கவேண்டிய பகுத்தறிவில்லாத முட்டாள்கள். பிறர்சொல்லைப் பின்செல்லும் அறிவற்றவர்கள். (அறிவில் சிறுமனத்து) இப்போதுதான் அறிவு இல்லையென்ருல், பிறிதொரு காலத்தில் அறிவுண்டாகும்படி விசால மனப்பான்மையுடையவர்களாகவாவது இருக்கிருர்களா என்று பார்த்தால்; அதுவுமில்லை; குறுகிய மனமுடையவர்களாயிருக்கிருர்கள். (ஆங்கு அன்னவரைக் கற்பிப்போம் யாமே) அப்படிப்பட்ட வருந்

## முன்னநான் சொன்ன அறத்தின் வழிமுயன்ற

*முன்னம் நான் சொன்ன அறத்தின் வழி முயன்ற அன்னவர் தாம்*—நான் சொன்ன தருமத்தின் வழியிலே அநுஷ்டானம் செய்தவர்கள்,

---

களைக் கற்பிக்கை நமக்கு பரமாவதே! கையிலே மடலை எடுத்துக்கொண்டு இரண்டருகுள்ளாரும் மலைக்கப் பெரிய திருநாளில்போலே உலாவித் திரியலாயிருக்க, அவ்வறிவு கேடரை அறிவிக்கை நமக்கு பரமாவதே! (அது நிற்க) இப்போது அத்தை விடுக.

(முன்னம் நான் சொன்ன இத்யாதி) முன்பு நான் இந்த நாலு புருஷார்த்தத்தையும் சொல்லுகிறவிடத்திலே, தர்மத்திலே வந்தவாறே, ஸாத்யரூபத்தாலும் ஸாதக ரூபத்தாலும் நிற்பதோராகாரத்தைக்கொண்டு "மன்னு

---

நமக்குப் பணியோ? கையும் மடலுமாய் நாடறியத் திரியா நின்றால் இதுவே புருஷார்த்தமென்று அறியும்படி நாட்டிலே உலாவாநிற்க, ஓரிடத்திலேயிருந்து உபதேசிக்கை நமக்குப் பணியோ?

---

**தத்தக்க நிலையிலிருப்பவர்களை உபதேசித்துத் திருத்துவது நமக்குக் கடமையாகிவிட்டதே! என்ன கஷ்டகாலம்! கையிலே மடலையெடுத்துக்கொண்டு, தெருவின் இரண்டு பக்கத்திலுள்ளவர்களும் மலைக்கும் படியாகத் திருவத்யயனோத்ஸவத்தில் (நம்பெருமாளைப்) போலே உலாவித்திரிய வேண்டியிருக்க, அவ்வறிவற்றவர்களுக்கு அறிவிப்பது நமக்குச் சுமையாவதே! (அதுநிற்க) இப்போது அச்செயலைச் செய்யாது விடுக.**

**(முன்னம் நான் சொன்ன அறத்தின் வழிமுயன்ற அன்னவர்) முதன் முதலிலே "மன்னுமறம் பொருள் இன்பம் வீடு" என்று இந்த நாலு புருஷார்த்தங்களையும் சொன்னவிடத்திலே, தர்ம மாகிற முதற் புருஷார்த்தத்தைச் சொல்லும்போது ஸாத்யமாகவும், பரலோக ஸாதனமாகவும் இருக்கும் தன்மைகளைக்கொண்டு, "மன்னும் அறம்" என்று அதை நிலைநிற்கும் புருஷார்த்தமாகச்**

மறம்'' என்றேன். இஹலோக போ₄க₃த்தை வ்யாவர்த்திக்கைக்காகச் சொன்னேனத்தனை! அதில் நான் நினைத்த அம்ஶமறியாதே குவாலுண்டாக நினைத்திருக்கக்கூடும் அறிவுகேடராயிருப்பாராயிற்று. "**स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णो र्नास्ति निर्वृतिः**" (ஸ்வர்க்கே₃ऽபி பாதபீ₄தஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:) அதுக்காக அவ்விடத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லாநின்றேன் கேளுங்கள்.

(முன்னம் நான் சொன்ன அறத்தின் வழி முயன்ற) முன்பு நான் சொன்ன அறத்தை ஶாஸ்த்ரோக்தமாக அநுஷ்ட்டி₂த்தவர்கள். அறத்தின்வழி என்கையாலே -

---

(அது நிற்க) அது கிடக்கிறார். அது ஒரு புருஷார்த்த₂மென்று நினைத்திருப்பார்க்கன்றோ அது வேண்டுவது என்று அத்தை உபேக்ஷிக்கிறார். (முன்னம் நான்சொன்ன அறத்தின்வழி

---

சொன்னேன். இவ்வுலகில் பெறும் பொருள் என்னும் புருஷார்த்த₂த்தைக் காட்டிலும் இது நிலைபெற்றிருக்கும்படியை அறிவித்தேனவ்வளவேயொழிய அதுவும் என்றும் நிலைநிற்பதில்லை. அதையறியாமல் அதுவும் நித்யபுருஷார்த்த₂ம் என்று சில அறிவிலிகள் நினைத்திருக்கக்கூடும். அது நிலைநில்லாததாயிருப்பதோடன்றியில் 'எப்போது கீழே விழுவோமோ?' என்னும் ப₄யங்கலந்திருக்கையால் அல்பமாயுமிருக்கும்.

''ந கேவலம் த்₃விஜஶ்ரேஷ்ட₂ நரகே து₃:க்க₂பத்₃த₄தி: |
ஸ்வர்க்கே₃ऽபி பாதபீ₄தஸ்ய க்ஷயிஷ்ணோர்நாஸ்தி நிர்வ்ருதி :||''
[வி-பு 6-5-50]

[அந்தணர் தலைவரே! நரகத்தில் மாத்திரம் துன்பவரிசைகள் உள்ளன என நினைக்கவேண்டாம். புண்ணியம் குறைந்துகொண்டே வரும் மனிதனுக்கு ஸ்வர்க்க₃த்திலிருக்கும்போதும் 'எப்போது கீழே விழுவோமோ?' என்னும் ப₄யமுள்ளதாகையாலே ஆநந்த₃மில்லை,] என்று சொல்லப்படுகிறதன்றோ. இவ்விஷயத்தை அறிவுறுத்துவதற்காக இனித் தெளிவாகச் சொல்லுகிறேன் கேளுங்கள் என்கிறான்.

(முன்னம் நான் சொன்ன அறத்தின் வழிமுயன்ற அன்னவர்) நான் சொன்ன த₄ர்மத்தை ஶாஸ்த்ரத்தில் கூறிய வழியில் அனுஷ்ட்டி₂த்தவர்கள். 'அறத்தின் வழி' என்கையாலே, அந்த ஜ்யோ

## அன்னவர்தாங் கண்டீர்க ளாயிரக்கண் வானவர்கோன் 19

***ஆயிரம் கண் வானவர்கோன் பொன் நகரம் புக்கு***—ஆயிரங் கண்ணுடைய இந்திரனுடைய அழகிய லோகத்திற்சென்று சேர்ந்து,

---

அந்த உபாயாநுஷ்ட்டாநத்தினுடைய மிறுக்குத்தோற்று கிறது. அது அநுஷ்ட்டிக்குமிடத்தில். கரணம்தப்பினல் மரணம், அதில் ஏதேனுமொரு ஸ்வரத்திலே அங்கத்திலே வைகல்யம் பிறக்கில் பின்னை ப்ரஹ்மரக்ஷஸ்ஸாய்ட்

---

முயன்ற அன்னவர்தாம் கண்டீர்கள்) **"व्यवसायात्मिका बुद्धिरेकेह"** *(வ்யவஸாயாத்மிகா புத்திரேகேஹ)* அத்யவஸாயாத்மிகை யான புத்தியையுடையவனுக்கு ஸாதநஸாத்யங்கள் ஒன்று யிருக்கும். **"बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम्।"** *(பஹுஶாகா ஹ்யநந்தாம்ச புத்தயோऽவ்யவஸாயிநாம்)* அவ்யவ ஸாயிகளுடைய புத்தி பஹுஶாகையாயிருக்கும். பல தலையாயிருக்கும். ஸாதநங்களும் அநேகமாய், ஸாத்யங்களும் அநேகமாயிருக்கும்.

அப்படியே காம்யரூபமான கர்மந்தன்னையே **"कर्मण्येवाधिकारस्ते"** *( கர்மண்யேவாதிகாரஸ்தே )* என்கிறபடியே அகர்த்ருகமாக பலாபிஸந்திரஹிதையான அநுஷ்ட்டாநத்தை அநுஷ்ட்டித்தால் மோக்ஷஸாதநமாகக் கடவது என்கிற ந்யாயத்தைப் பற்ற பகவத் புருஷார்த்தத்துக்கு ஸாதந மாகச் சொன்ன முகத்தாலே தூஷித்தது கீழ். அந்தக் கர்மந்தனக்கு ஸ்வர்க்கபோகத்தைப் புருஷார்த்தமாக ப்ரதி பத்திபண்ணி, அதுக்கு ஸாதநமாம்ஆகாரத்தாலே காம்யார்த்த ப்ரசுரமாயிருக்குமென்னுமிடத்தைக் காட்டுகிறது. கீழே

---

**திஷ்டோமாதி தர்மாநுஷ்டானத்தின் கடுமை தோற்றுகிறது. அதை அநுஷ்ட்டிக்கும்போது கரணம் தப்பினல் மரணமாயிருக்குமென்பதை யும் மந்திரஸ்வரத்திலேயாவது, உபாயத்தின் அங்கத்திலேயாவது ஏதாவது குறைவு நேர்ந்தால் பிறகு ப்ரஹ்மராக்ஷஸனாய்ப்**

பிறக்குமித்தனே. (அன்னவர் தாம் கண்டீர்கள்) அத்தை அருமைப்பட்டு அநுஷ்டித்த அப்படிப்பட்ட அவர்கள். (ஆயிரக்கண் வானவர்கோன்) இங்குநின்றும் போகிற வனுக்கு நிர்வாஹகனுயிருக்கிறவன் ஆயிரம் கண்கொண்டா

---

நான்சொன்ன த₄ர்மமார்க்க₃த்திலே உத்ஸாஹித்தவர்கள் கிடக்கிடிகோள். 'அன்னவர்' என்கிறது — நேருவதெல்லாம் நேர்ந்து படுவதெல்லாம் படச்செய்தே அல்பமேயாயிருக்கிற ஸ்வர்க்க₃ புருஷார்த்த₂த்தை ப₂லமாகக் கொள்ளுகிற ஹேயரை அநாத₃ரிக்கிருர்.

அவர்கள் ப₂லமிருக்கும்படியைச் சொல்லுகிறது மேல். (ஆயிரக்கண்) இப்படி நேருவதெல்லாம் நேர்ந்தவன், விஷய த₃ர்ஶநத்துக்கு ஆயிரம் கண்ணுடையவன். "விடத்தவாய் ஒராயிரம் இராயிரம் கண்" என்று அவனுக்குப் பல கண்ணுண்டிறே ப₄க₃வத₃நுப₄வத்துக்கு. **"पुण्डरीकमेचमक्षिणी"** *(புண்ட₃ரீக மேவமக்ஷிணீ)* என்றும், "தாமரைக் கண்ணனே விண்ணோர் பரவும் தலைமகனே" என்றும், அடைவுடையார் தோற்று அடைவுகெட நின்று ஏத்தும்படியான கண்ணழகையுடையவன் முகத்திலே போய் விழிக்கிறதன்றே; பீறினசீலைபோலே கண்டவிடமெங்கும் துளையாம்படியிருக்கிறவன் முகத்திலே யிறே விழிப்பது. என்றும் விஷயப்ரவணரில் நேத்ரபூ₄தனே இங்ஙனேயிறே இவர்கள் சொல்லுவது. (வானவர்கோன்) அயர்வறுமமரர்கள் அதிபதியோ என்பர்கள். மநுஷ்யனிற் காட்டில் நாலுநாள் எழ இருந்து சாம்; இவ்வளவைக்கொண்டு பேரப்பெரலியத் தங்களேயும் அவர்களாக அபி₄மானித்திருக்கும் ஆக்கரான அமரர்களுக்கு நிர்வாஹகனனவன் முகத்திலேயாயிற்று விழிப்பது.

---

**பிறக்கவேண்டியதே என்பதையும் உணர்த்துகிறது. (அன்னவர்தாம் கண்டீர்கள்) அந்த அறத்தை அவ்வளவு சிரமப்பட்டு இயற்றிய அவர்கள். (ஆயிரக்கண் வானவர்கோன்) இங்கிருந்து போகிற வனுக்குத் தலைவனுயிருக்கும் இந்திரன் ஆயிரம் கண்கொண்டு அநுப₄விக்க வேண்டும்படி அளவிற் பெரிதாயிருக்கிறது அந்த தே₃வலோக**

பிறக்குமித்தனை. (அன்னவர் தாம் கண்டீர்கள்) அத்தை அருமைப்பட்டு அநுஷ்டித்த அப்படிப்பட்ட அவர்கள். (ஆயிரக்கண் வானவர்கோன்) இங்குநின்றும் போகிற வனுக்கு நிர்வாஹகனாயிருக்கிறவன் ஆயிரம் கண்கொண்டா

---

நான்சொன்ன தர்மமார்க்கத்திலே உத்ஸாஹித்தவர்கள் கிடக்கிடிகோள். 'அன்னவர்' என்கிறது — நேருவதெல்லாம் நேர்ந்து படுவதெல்லாம் படச்செய்தே அல்பமேயாயிருக்கிற ஸ்வர்க்க புருஷார்த்தத்தை பலமாகக் கொள்ளுகிற ஹேயரை அநாதரிக்கிறார்.

அவர்கள் பலமிருக்கும்படியைச் சொல்லுகிறது மேல். (ஆயிரக்கண்) இப்படி நேருவதெல்லாம் நேர்ந்தவன், விஷய தர்சநத்துக்கு ஆயிரம் கண்ணுடையவன். "விடத்தவாய் ஓராயிரம் இராயிரம் கண்" என்று அவனுக்குப் பல கண்ணுண்டிறே பகவதநுபவத்துக்கு. "**पुण्डरीकमेवमक्षिणी**" (*புண்டரீக மேவமக்ஷிணீ*) என்றும், "தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்றும், அடைவுடையார் தோற்று அடைவுகெட நின்று ஏத்தும்படியான கண்ணழகையுடையவன் முகத்திலே போய் விழிக்கிறதன்றே; பீறினசீலைபோலே கண்டவிடமெங்கும் துளையாம்படியிருக்கிறவன் முகத்திலேயிறே விழிப்பது. என்றும் விஷயப்ரவணரில் நேத்ரபூதனை இங்ஙனேயிறே இவர்கள் சொல்லுவது. (வானவர்கோன்) அயர்வறுமமரர்கள் அதிபதியோ என்பர்கள். மநுஷ்யனிற் காட்டில் நாலுநாள் ஏழ இருந்து சாம்; இவ்வளவைக்கொண்டு போரப்பொலியத் தங்களையும் அவர்களாக அபிமானித்திருக்கும் ஆக்கரான அமரர்களுக்கு நிர்வாஹகனானவன் முகத்திலேயாயிற்று விழிப்பது.

---

**பிறக்கவேண்டியதே என்பதையும் உணர்த்துகிறது. (அன்னவர் தாம் கண்டீர்கள்) அந்த அறத்தை அவ்வளவு சிரமப்பட்டு இயற்றிய அவர்கள். (ஆயிரக்கண் வானவர்கோன்) இங்கிருந்து போகிறவனுக்குத் தலைவனாயிருக்கும் இந்திரன் ஆயிரம் கண்கொண்டு அநுபவிக்க வேண்டும்படி அளவிற் பெரிதாயிருக்கிறது அந்த தேவலோக**

**பொன்னகரம் புக்கமரர் போற்றிசெப்பப் பொங்கொளிசேர்**
**கொன்னவிலுங் கோளரிமாத் தான் சுமந்த கோலஞ்சேர் 20**

***அமரர் போற்றி செப்ப*** — தே₃வர்களால் வாழ்த்தப்பெற்று, ***பொங்கு ஒளி சேர்***—மேன்மேலும் வளர்கின்ற ஒளியையுடையதும், ***கொல் நவிலும் கோள் அரிமா தான் சுமந்த கோலம் சேர்***–கொல்லும் தொழிலைக் கோட்சொல்லுவதுபோன்ற வலிய சிங்கத்தால் பரிவுடன் சுமக்கப்பட்டதும், அழகியதும்,

---

யிற்று அவ்விஷயத்தை அநுப₄விப்பது. (பொன்னகரம்புக்கு) அதில் ஶ்லாக்₄யமான தே₃ஶவாஸமே அமையுமென்னும்படி இருக்கிறவிடத்தே போய்ப் புக்கு. (அமரர் போற்றி செப்ப) "முடியுடைவானவர் முறைமுறை எதிர்கொள்ள" என்னுமாபோலே அங்குள்ள தே₃வர்கள் "அர்த்த₂பரராய் ஸம்ஸாரத்திலேயிருந்து இக்காமபுருஷார்த்த₂த்தை ஆத₃ரித்து இதுக்கீடாகத் தன்னை ஒறுத்து ஸாத₄நாநுஷ்ட்டா₂நம்

---

(பொன்னகரம்) "திகழ்பொன்னுலகாள்வார்" என்கிற தே₃ஶத்திலேயோ? நரகாதி₃களில் வ்யாவ்ருத்தி. அல்பமான தே₃ஶத்திலேயன்றே புகுகிறது. (புக்கு) புகுகைதானே உத்₃தே₃ஶ்யமாய், அர்ச்சிராதி₃ மார்க்க₃த்தாலே வழியிலுள்ளார் ஸத்கரித்துக் கொண்டாடப் போகிறதோ? (அமரர் போற்றி செய்ய) "முடியுடை வானவர் முறை முறை எதிர்கொள்ளப் புகுகிறதோ?" "அமரராய்த் திரிகின்றார்கள்" என்று ஆக்கரான தே₃வதைகள், "ஸம்ஸார பூ₄மியிலேயிருந்து ஸ்வர்க்கா₃நு

---

**ஸாஃகம். (பொன்னகரம்புக்கு) அந்த தே₃வருலகில் சிறந்ததாய். 'இதில் வஸிப்பதே பேரின்பம்' என்னலாம்படியிருக்கிற அமராவதியென்னும் நகரை அடைந்து. (அமரர் போற்றி செப்ப) "முடியுடை வானவர் முறைமுறை எதிர்கொள்ள" [திருவாய் 10-9-8] என்று முக்தரை எதிர்கொண்டு துதிப்பதுபோலே அங்குள்ள தே₃வர்கள் "பொருளிலே ஈடுபட்டவராக பூ₄லோகத்திலிருக்கும்போதும், இக்காமபுருஷார்த்த₂த்தை விரும்பி, இதைப்பெறுவதற்காகத் தவம் பல**

பண்ணிவருவானொரு மஹாத்மா உண்டாவதே!" என்று கொண்டாட.

(பொங்கொளிசேர்) காலம் செல்லச்செல்ல ஒளி மழுங்குகையன்றிக்கே புண்யபூலமாகையாலே மிக்கு வாராநின்றுள்ள ஒளிசேர்ந்திருப்பதாய். (கொல் நவிலுங் கோளரிமா) "கொலையைச் செய்யாநிற்பதுமாய், எழுந் திருந்து பாயுமாபோலே" என்று சொல்லலாம்படியாய்ப் பெரிய மிடுக்கையுடைத்தாயிருந்துள்ள ஸிம்ஹங்களானவை. (தான் சுமந்த) ஹ்ருதயத்திலே பரிவோடே சுமந்தாற் போலேயாயிற்று தரிக்கும்படி. (கோலஞ்சேர்) நாநாவான

---

பவத்திலே ஶ்ரத்தை பிறந்து, இதுக்குறுப்பாக ஸாதநாநுஷ் டாநம்பண்ணி இவ்வளவு வருவானொருவனைக் கிடைக்குமே! இவனுமொருவனே!" என்று கொண்டாடாநிற்பர்கள்.

(பொங்கொளி சேர்) ஸிம்ஹாஸனத் தொழில்வகுப்பைக் கண்டுகொண்டிருக்கும்படி கிளர்ந்த ஒளிசேர்ந்திருப்பதாய்; "கோப்புடைய". (கொல் நவிலும்) கிட்டின அப்போதே முடிக்குமென்று கொலையை வ்யவஹரியாநிற்பதாய்; (கோளரி மாத் தான் சுமந்த) விநாஶத்தை தரிக்கைக்கு, மிடுக்கை யுடைத்தாயிருப்பதொரு ஸிம்ஹமானது தானே சுமந்து நிற் கிறதோ? என்று ஶங்கிக்கும்படி. (கோலம் சேர்) நாட்டி லுள்ள தொழிலெல்லாம் இதிலேயோ? என்னும்படி அழகு சேர்ந்திருப்பதாய்.

---

**புரிந்து தன்னுடம்பை வாட்டி உபாயாநுஷ்டாநம் செய்து வருபவ னொரு பெரியோன் உண்டாவதே!" என்று இவர்களைக் கொண்டாட.**

**(பொங்கொளி சேர்) இவ்வுலகில் பொருள்கள்போலே நாள் செல் லச் செல்ல ஒளிமழுங்காமல், புண்யபூலமாகையாலே நாள் செல்லச் செல்ல வளரும் ஒளியை உடையதாயிருக்கை. (கொல் நவிலும் கோளரிமா) "எதிர்வருவாரைக்கொலைசெய்வதற்காக எழுந்திருந்து பாயப்போகிறது போலும்!" என்று சொல்லலாம்படியாய், பெரிய பூலத்தையுடையதுமான (சிற்ப ரூபமான) ஸிம்ஹங்களானவை. (தான் சுமந்த) நெஞ்சில் பரிவோடு உயிருள்ள சிங்கம் சுமந்தாற் போலே தரித்துநிற்கிறபடி. (கோலம் சேர்) பலவிதமான அங்க**

**மன்னிய சிங்கா சனத்தின்மேல் வாணெடுங்கண்**
**கன்னியரா லிட்ட கவரிப் பொதியவிழ்ந்தாங்கு 21**
**இன்னிளம்பூந் தென்ற லியங்க மருங்கிருந்த**

***மன்னிய சிங்க ஆசனத்தின் மேல்*** — நிலையானதுமான சிங்கா சனத்தின் மேலே (இருந்து கொண்டு), ***வாள் நெடுங்கண்*** — வாள்போற் கூறிய நீண்ட கண்களையுடைய, ***கன்னியரால் இட்ட*** — தேவகன்னிகைகளாலே வீசப்பட்ட, ***கவரி பொதி அவிழ்ந்து***—சாமரத்திரள்கள் (அருகிலே) மலரப்பெற்று, ***இன் இள பூ தென்றல் இயங்க*** — இனிதாயும் மந்தமாயும் பரிமள முடையதாயுமிருக்கிற தென்றல் வந்து வீசப்பெற்று, ***மருங்கு இருந்த*** — அருகேயிருக்கிற,

---

வகுப்புக்கள் ஸஹஜமானாற்போலே பொருந்தியிருக்கு மாயிற்று. (மன்னிய சிங்காசனத்தின் மேல்) ஸாம்ஸாரிக மான போகங்களிற் காட்டில் நாலு நாள் எழ இருந்து எழுந்திருக்கலாம்படியான ஸிம்ஹாஸநத்தின்மேலே. (வாள் நெடுங்கண் கன்னியரால் இத்யாதி) ஓராளும் ஒருநோக்கும்

---

(மன்னிய சிங்காசனத்தின் மேல்) ஸாம்ஸாரிகமான போகத்திற்காட்டில் நாலுநாள் எழ இருந்து போகட்டுப் போகிறவர்களைப் போலன்றியே, வருவார்க்கெல்லாம் தானே யாம்படியிருக்கையாலே மன்னிய என்கிறது. அரிமா— ஸிம்ஹம். "பாய்மா, கைம்மா" என்னுமாபோலே. கோள்— மிடுக்கு. (தான் சுமந்த) சிலர் சுமத்தச் சுமக்கையன்றிக்கே ஆதரத்தோடே தானே சுமக்கை. (வாள் நெடுங்கண்) ஓராளும் ஒரு நோக்கும் நேராம்படியான கூர்மையையுடைத்

---

**ணங்கள் இயற்கையிலேயே அமைந்திருப்பதுபோலே பொருத்தமா யிருக்கிறபடி. (மன்னிய சிங்காசனத்தின் மேல்) இவ்வுலகத்து போகங்களைக்காட்டிலும் சிறிதுகாலம் அதிகமாக உட்கார்ந்திருந்து எழுந்திருக்கலாம்படியிருக்கையாலே, அவ்வளவு நிலைதிற்கும் சிங்கா சனத்தின் மேல். (வாள் நெடுங்கண்......) அங்குள்ள அப்ஸரஸ் ஸுக்களோடு அனுபவிக்கும் இன்பத்தைப் பேசுகிறது. (வாள்கண்) எதிர்ப்பட்டவர்களை வாள்வீச்சாலே வீழ்த்துவதுபோலே, ஒரு கண்**

நேரான கண்களை உடையராய், காலதத்வமுள்ளதனையும் பூ₄ஜியாநின்ருலும் அபூர்வைகளாயிருக்கும் ஸ்த்ரீகளாலே இடப்பட்ட கவரித்திரள் கட்டவிழ்ந்து, அவ்விடத்திலே இனியதாய் மந்த₃மாய் பரிமளத்தையுடைத்தான தென்றல் ஸஞ்சரிக்கக் கிண்ணகத்தை எதிரிடவொண்ணுதாற்

---

நாய் பூ₄ஜிக்கிறவனளவன்றிக்கே விஞ்சின போ₄க்₃யதையை யுடைத்தான கண்ணழகையுடைய. (கன்னியரால் இட்ட) ஒரு கல்பமெல்லாம் பூ₄ஜியாநின்ருலும் பின்னையும் புதுமை மாருதேயிருக்கிற ஸ்த்ரீகளால் இடப்பட்ட. (கவரிப்பொதி யவிழ்ந்து) அவர்கள் வீசினவாறே கட்டவிழ்ந்து எல்லாம் கூடத்தள்ளக்கடவது. அத்தைப் பிரித்து வாங்கினவாறே விடக்கடவது. அத்தைப் பொதிகையும் விழுகையுமாகச் சொல்லுகிறது.

(ஆங்கு) அவ்வவஸ்தை₂யில், (இன்னிளம் பூந்தென்ற லியங்க) ஆச்சாமரம் வீசுகையிஞலே இனிதாய், இளையதாய் நன்ருன தென்றல் வந்து ஸஞ்சரிக்க என்னுதல்; அன்றிக்கே, மந்த₃மாருதமாய் நாநாவித₄மான பூக்களிலே போய் ப்ரவேஶிக்கு மிடத்து, ஆவியெழுந்து வெக்கைதட்டியிருக்கிறபடி. பிசுகி வருகையன்றிக்கே, செவ்விப்பரிமளத்தைக் கொய்து கொடு வந்து; தென்றலானது இயங்கவென்று தோன்றல்தாஞகவு மாம். ஒரு சேதனன் புகுந்தாஞய், ஸம்போ₄க₃த்துக்குத் துணுக்குப் பிறக்கும்படியிருக்கையன்றிக்கே, ஸம்போ₄க₃ வர்த்த₄கமுமாய் ஸ்பர்ஶவேத்₃யமுமாயிருக்கை. கவரியான போது, தன்பக்கல் நின்றும் வேருென்றில் போகாதபடி நெஞ்சும் இனியதாய் உடம்பிலே பட்டவாறே துணுக்குப் பிறக்கும்படியிருக்கை.

---

ஞேக்காலே ஒவ்வொருவரை வீழ்த்தவல்ல கண்களையுடையவர்கள். (நெடுங்கண்) காலமுள்ளவரையிலும் அநுப₄வித்தாலும் புதிதாய்த் தோற்றும் கண்ணழகையுடையவர்கள், (கன்னியரால் இட்ட கவரிப் பொதி அவிழ்ந்து) அப்படிப்பட்ட ஸ்திரீகளாலே இடப்பட்ட சாம ரத்திரள் அவிழ்ந்து. (ஆங்கின்னிளம் பூந் தென்றல் இயங்க) அவ் விடத்தில் இனியதாய், மந்த₃மானதாய். பூக்களின் மணங்களைச்

**மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார் வெண்**
**முறுவல் 22**
**முன்னம் முகிழ்த்த முகிழ்நிலா வந்தரும்ப**
**அன்னவர்தம் மானோக்க முண்டாங் கணிமலர்சேர் 23**

***மின் அனைய நுண் மருங்குல் மெல் இயலார்*** — மின்னல்போல் ஸூக்ஷ்மமான இடையையுடைய மென்மைமிக்க மாதர்கள், ***முன்னம் முகிழ்த்த***—முதலிலேயே வெளிப்படுத்திய, ***வெண் முறுவல்***—(தங்களுடைய) வெளுத்த பற்களாகிற, ***முகிழ் நிலா வந்து அரும்ப***–இளநிலா வந்து பரவ, ***அன்னவர் தம்***—அப்படிப் பட்ட மாதர்களுடைய, ***மான் நோக்கம் உண்டு***—மானின் நோக்குப்போன்ற நோக்கை அநுப₄வித்து, ***ஆங்கு***—அவ்வள விலே, ***அணி மலர் சேர்*** — அழகிய பூக்கள் நிறைந்துள்ள,

---

போலே பே₄ாக்₃யதையின் மிகுதியாலே நெருக்கவொண் ணுதே அருகேயிருக்கவேண்டியவராய், "விழேல்" என்னப் பண்ணும் மின்னைப் போலியென்னப்படும் நுண்ணிய மருங்கையுடையருமாய், ம்ருது₃ ஸ்வப₄ாவைகளுமாய் இருக்

---

(மருங்கிருந்த) பே₄ாக்₃யைகளான ஸ்த்ரீகளையொழிய த₄ரிக்கமாட்டாமையாலே கூடவைத்துக்கொண்டிருப்பர்கள். அதின் முன்னேயிருக்கிற கிண்ணகப்பெருக்குப்போலே எதிர்ச் செறிக்கவொண்ணுதபடி ஆழங்காலாய், அருகே வைத்துக் கொண்டிருப்பர்கள். (மின்னனைய இத்யாதி₃) பே₄ாக்தாவான வனுக்கும், "இவள் இவ்விடையைக்கொண்டு எங்ஙனேதான் த₄ரிக்கும்படி!" என்று கண்டபோதெல்லாம் துணுக்கென்ன வேண்டும்படி, மின்னொத்த நுண்ணிய இடையையுடைய

---

**சுமந்துவரும் தென்றல் வீச. (மருங்கிருந்த) மற்றும் சில தே₃வ ஸ்திரீகள் இவர்களுக்கு அருகிலிருக்கிறார்கள். நீர்ப்பெருக்கை எதி ரிடமுடியாததுபோலே இனிமையின் மிகுதியையுடைய இவர்களையும் நெருங்க முடியாமல் அருகிலேயே இருத்தி அநுப₄விக்கவேண்டி யிருக்கிறது. (மின்னனைய நுண்மருங்குல்) 'மின்னல்' தன்னைக் காண்பாரை 'விழுந்து விடாதே' என்று சொல்லும்படி செய்யும், அதுவும் இதற்குப் போலி என்னும்படி அதிலும் நுண்ணியதாயிருக்**

கிறவர்களுடைய ஹ்ருதயத்திற்கிடக்கிற பூக்கொய்கை யாகிற கார்யத்தைக் காட்டுகிற வெளுத்த முறுவலாகிற இளநிலா வந்தரும்ப. அப்படிப்பட்டவர்கள் மான்போல் நோக்கை பு₄ஜித்து.

புண்யப₂லத்தாலே நினைத்தபோதே முன்புதோன்றுகிற சோலையிலே, முறுவலால் தோற்றுவித்த பூக்கொய்கை

---

ரா்கையாலே கலக்கவும் பொறுதே கைவாங்கியிருக்கவும் பொருத மார்த₃வத்தையுடையரான ஸ்த்ரீகளுடைய, வெண் முறுவலுண்டு-த₃ந்தபங்க்தி, அதினுடைய. (முன்னம் முகிழ்த்த முகிழ்நிலா வந்தரும்ப) முன்னமென்கிறது-அபி₄ப்ராயம்; அந்த அபி₄ப்ராயமானது போய் பக்வமாய் ஆரம்பி₄த்தாற்போலே இருக்கிற இருநிலாவானது வந்தரும்ப.

(அன்னவர்தம் மான் நோக்கம்) இன்னவிடத்தேபோய் விளையாடக்கடவோமென்கிற நினைவை நோக்காலே ஸ்மரிப் பிப்பாளாயிற்று. (உண்டு) அப்படிப்பட்ட ம்ருது₃வான நோக்கையுடைய அவர்கள் நோக்கைப் பருகி; இதுகாணும் அவர்களுக்கு உஜ்ஜீவநம். இவன் ஒன்றுக ஸ்மரித்து அத்தை யுண்டறுக்கமாட்டாதே கிடந்தலையாகிற்க, அதுக்கு மேலே குளிரநோக்குவர்கள். (ஆங்கு) அவ்வளவிலே.

---

கும் இடையை உடையவர்கள். (மெல்லியலார்) மென்மையை இயற்கையாகக் கொண்டவர்கள், (முன்னம் முகிழ்த்த வெண்முறு வல் முகிழ்நிலா வந்தரும்ப) தங்கள் கருத்தை முதலிலேயே காட்டுகிற வெளுத்த முறுவலாகிற இளநிலா வந்து பரவ. (முன்னம் முகிழ்த்த) அடுத்தபடியாக விவரிக்கப்போகும் சோலையிலே பூக்கொய்கையாகிற காரியத்தை முன்கூட்டியே தெரிவிப்பதுபோலிருக்கிறது இவர்களு டைய இளமுறுவல் என்று கருத்து. (அன்னவர்தம் மான் நோக் கம் உண்டு) அப்படிப்பட்டவர்களுடைய மான்போன்ற நோக்கை அனுப₄வித்து.

அடுத்தபடியாக புண்யபலத்தாலே நினைத்தவுடன் கண்முன்பு தோன்றுகிற சோலையிலே முறுவலால் தெரிவித்த பூக்கொய்யும் காரி யத்தைச்செய்து விளையாடுவதைத் தெரிவிக்கிறது. (ஆங்கு) அப் போதிலே. (அணிமலர் சேர்) அவ்வுலகிற்கு அலங்காரமான மலர்

**பொன்னியல் கற்பகத்தின் காடுடுத்த மாடெல்லாம்**
**மன்னிய மந்தாரம் பூத்த மதுத்திவலை 24**
**இன்னிசை வண்டமருஞ் சோலைவாய் மாலைசேர்**
**மன்னிய மாமயில்போல் கூந்தல் மழைத்தடங்கண் 25**
**மின்னிடை யாரோடும் விளையாடி வேண்டிடத்து**

***பொன் இயல் கற்பகத்தின் காடு உடுத்த***—பொன்மயமான கற்பகக்காடுகள் சூழப்பெற்றதாய், ***மாடு எல்லாம் மன்னிய மந்தாரம் பூத்த மது திவலை***—மருங்கு எங்கிலும் நிலைபெற்றிருக்கிற பாரிஜாத வ்ருக்ஷங்களின் பூக்களிலுள்ள தேன் துளிகளில், ***இன் இசை வண்டு அமரும் சோலைவாய்***—இனிய இசைகளைப் பாடுகின்ற வண்டுகள் பொருந்தியிருக்கப்பெற்ற பூஞ்சோலைகளிலே, ***மாலை சேர் மன்னிய மாமயில்போல் கூந்தல்***—புஷ்பங்களை அணிந்தும், பொருந்திய மயில் தோகைபோலுமிருக்கிற கூந்தலையுடையவர்களாயும். ***மழை தடம் கண்***—மேகம் போலே கறுத்துக் குளிர்ந்து, விசாலமான கண்களையுடையவர்களாயும், ***மின் இடையரோடும்***—மின்போல் நுண்ணிய இடையையுடையவர்களாயுமிருக்கிற அப்ஸரஸ் ஸ்த்ரீகளோடே, ***வேண்டிடத்து விளையாடி***—விரும்பிய இடங்களில் விளையாடி,

---

யைப் பேசுகிறது. (மன்னிய) நிலைநிற்கும் கற்பகங்கள். (இன்னிசை வண்டமரும்) * குடியாவண்டு கள்ளுண்ணச்

---

இவர்கள் லீலாரஸமநுபவிக்கும்படி சொல்லுகிறது மேல்— (அணிமலர்சேர் பொன்னியல் கற்பகத்தின் காடுடுத்த மாடெல்லாம்) செறியப் பூத்த பூக்கள் பரப்புமாறியிருப்பதாய்ப் பொன்னாலே செய்யப்பட்டதாய்க் கற்பகக்காடாய்த் தரிசுகிடக்குமிடமெல்லாம். (மாடெல்லாம்) இவர்களிருக்கிற பரிஸரமெல்லாம். (மன்னிய) உண்டாயுள்ள. (மந்தாரம் பூத்த)

---

**கள் நிரம்பியிருக்கை. (பொன்னியல் கற்பகம்) பொன்னைகருக்குத் தருந்த பொன்னியல் கற்பகமாயிருக்கை. பொன்போலே வேண்டப்படுவதாயிருக்கை. "மன்னிய கற்பகம்" என்று வ்யாக்யான பாடம். நிலைநிற்கும் கற்பகங்கள் என்றபடி. (கற்பகத்தின் காடுடுத்த) சோலைக்கு விசேஷணம். கற்பகக்காடு சூழப்பட்ட சோலை. (மாடெல்லாம் மன்னிய மந்தாரம் பூத்த மதுத்திவலை) மருங்கெல்**

சிறகோசையிலே அறியுமித்தனை. (மாமயில்) அங்கு இவர்க ளொப்பனை இருக்கும்படி. (விளையாடி)

---

பூவாய்க் கிடக்கும். (மதுத்திவலை) அப்பூவிலுண்டான மது₁ வெள்ளத்தினுடைய திவலையிலே. (இன்னிசை வண்டு) அத்தைப் பாநம்பண்ணுகைக்காக வண்டுகள் படிந்து கிடக் கும். அவற்றுள் வண்டு உண்டென்று அறிவது, அவற்றின் இன்னிசை கேட்டவாறேயாயிற்று. (அமரும் சோலைவாய்) பரிமளம்போலே படிந்துகிடக்குமாயிற்று சோலையிடத்திலே. (மாலைசேரித்யாதி₃) ஒரு கொம்பில் நின்றும் பறித்துப்போந்து மாலையாக்கிச் சேர்க்கிற விளம்ப₃த்தாலே வரும் செவ்வியழியு மதின்றிக்கே குழலிலே மாலையாய்ப் பூத்தாற்போலேயிருப்ப தாய், நாயகன் முன்பே மயிரை ஒருகால் குலைத்தால் அவ னுக்கு ஸகலதாபங்களுமாறும்படியாய், பெரிய மயில் தோகை விரித்தாற்போலே இருக்கிற அளகப₄ாரத்தையுடை யருமாய், காலதத்வமுள்ளதனையும் துவக்குகைக்கும் மயிர் முடியே போந்திருக்க, அதுக்குமேலே கண்ணாலே ஒருகால் கடாக்ஷித்தால் ஒருபாட்டம் வர்ஷித்தாற்போலேயிருக்கும் படி குளிர்ந்த கண்களையுடையருமாயிருந்துள்ள ஸ்த்ரீக ளோடே பே₄ாகே₃ாபோத்₃க₄ாதத்திலே காலக்ஷேபத்தைப் பண்ணி, வேண்டிடத்து விளையாடி என்னுதல், வேண்

---

லாம் நிலைநிற்கும் மந்தா₃ர வ்ருக்ஷங்களின் பூக்களிலுள்ள மது₄பிந் துக்களிலே. (இன்னிசை வண்டமரும் சோலை) இன்னிசை முரலும் வண்டுகள் அமர்ந்திருக்கும் சோலை. மலரிலே 'குடியாவண்டு கள் ளுண்ண' சிறகின் இன்னிசையாலே அறியுமித்தனை. (சோலைவாய்)சோலை யிலே. இனி, அவர்களுடைய கூந்தலை வருணிக்கிறது. (மாலைசேர்) பூமாலைகளாலே அலங்கரிக்கப்பெற்ற கூந்தல். (மன்னிய மாமயில் போல் கூந்தல்) இயற்கையிலேயே அமைந்திருக்கும் பெரிய மயில் தோகைபோன்ற கூந்தலை உடையவர்கள். (மாலை சேர்...கூந்தல்) சோலையிலே இவர்கள் கூந்தலுக்குச் செய்துகொண்டிருக்கும் அலங் காரங்களைக் காட்டுகிறது. (மழைத் தடங்கண்) மேக₄ம்போல் குளிர்ந்து கறுத்திருப்பதாய், பரந்திருப்பதான கண்களையுடையவர் கள். (மின்னிடையாரோடும் விளையாடி) மின்னல்போன்ற இடை யையும் உடையவர்களான அவரோடும் விளையாடி.

**மன்னு மணித்தலத்து மாணிக்க மஞ்சரியின் 26**
**மின்னி னொளிசேர் பளிங்கு விளிம்படுத்த**
**மன்னும் பவளக்கால் செம்பொன்செய் மண்டபத்துள் 27**
**அன்ன நடைய வரம்பையர்தங் கைவளர்த்த**
**இன்னிசையாழ் பாடல்கேட் டின்புற் றிருவிசும்பில் 28**

***மன்னும் மணி தலத்து***—சிறந்த ரத்னங்களழுந்தின தரையை யுடையதும், ***மாணிக்கம் மஞ்சரியின்***—மாணிக்கமயமான பூங் கொத்துத் தோரணங்களையுடையதும், ***மின்னின் ஒளிசேர் பளிங்கு விளிம்பு அடுத்த***—மின்னல்போலே பளபளவென்று விளங்குகின்ற ஸ்படிகக் கற்களாலே கொடுங்கை கட்டப் பெற்றதும், ***மன்னும் பவளக்கால்***—விளங்கும் பவளத்தூண்களை யுடையதும், ***செம்பொன் செய்***—செம்பொன்னால் செய்யப் பட்டதுமான, ***மண்டபத்துள்***—மண்டபத்திலே, ***அன்னம் நடைய அரம்பையர் தம் கை வளர்த்த*** — அன்னநடையையுடைய அப்ஸரஸ்ஸுக்களின் கையால் தடவி வளர்க்கப்பெற்ற, ***இன் இசை யாழ் பாடல்***—இனிய இசையையுடைய வீணையின் பாட்டை, ***கேட்டு இன்புற்று***—கேட்டு ஆனந்தித்தும்,

---

இனி ஓலக்கமிருக்கும்படி சொல்லுகிறது. (வேண் டிடத்து) அபேக்ஷையின்படியே. (மாணிக்க மஞ்சரி)

---

டிடத்து மன்னும் மணித்தலத்து என்று மேலே கூட்டுதல். நெடும்போது விளையாடி ஆயாஸிக்கையாலுண்டான ச்ரமம், ஓரிடத்திலேயிருந்து ஆறவேண்டியிருக்குமிறே. இவனுடைய புண்யபலம் பக்வமாயிருக்கையாலே, இவனிருக்க அபேக்ஷித மானவிடத்தே அப்போதே அது உண்டாயிருக்கும்.

(மன்னுமணித்தலத்து) உண்டான நீலரத்னங்களாலே சேர்த்துச் சமைக்கப்பட்டிருந்துள்ள நிலத்திலே, (மாணிக்க

---

இனி; ''வேண்டிடத்து......கேட்டின்புற்று'' என்னும் தொடராலே தேவஸபையிலே கொலுவீற்றிருக்கும்படியைச் சொல்லுகிறது. (வேண்டிடத்து) தாங்கள் விரும்பியவிடத்திலே. (மன்னு மணித் தலத்து) என்று தொடங்கி (செம்பொன் செய்) என்பது வரையில் மண்டபத்துக்கு விசேஷணம். (மன்னு மணித்தலத்து) நிலைநிற்கும்

மாணிக்கங்களைக் கோத்துப் பூங்கொத்தாகத் தூக்கி. (மன்னும் பவளக்கால்) ஆடுவார் சாய்ந்திருக்கை. (அரம்பையர்) தே₃வஸ்த்ரீகள். (கைவளர்த்த) நீரூட்டி வளர்த்தாற்போலே கையாலே தடவி வளர்த்த. (இன்புற்று) அந்த பே₄ாக்₃யதையை அனுப₄வித்து.

---

மஞ்சரியின்) மாணிக்கக்கொத்துக்களை இடையிடையே அழுத்துவர்கள். ஒரு ப்ரதே₃ஶத்திலே, பொன் அரிதாயிருக்குமா போலே, அங்குத்தையார்க்கு ஆஶ்சர்யமாயிருப்பது பளிங்காயிற்று. (மின்னிஒளிசேர் பளிங்குவிளிம்படுத்த) மின்னிஒளி போலேயிருக்கிற ஒளியையுடைத்தான பளிங்கைக்கொண்டு (வந்து) விளிம்பிலே குறடுகட்டுவார்கள். (மன்னும் பவளக்கால் செம்பொன் செய் மண்டபத்துள்) சாய்ந்து நிற்கிற ஸ்த்ரீகளுக்கு ஓரடி போகில் த₄ரிக்கவரிதாம்படியான பவளத் தூணையுடைத்தாய், மாற்றற்ற செம்பொன்னாற்செய்யப்பட்ட மண்டபத்திலே. (அன்ன நடைய அரம்பையர்தம்) அன்னத்தோடொத்த நடையையுடையராயிருக்கிற அப்ஸரஸ்ஸுக்களுடைய. (கைவளர்த்த இன்னிசை யாழ் பாடல் கேட்டு) நீர்வார்த்து வளர்ப்பாரைப்போலே இவர்களுடைய கரஸ்பர்ஶமே நீராக வளர்ந்த இனிய இசையையுடைத்தான யாழிலுண்டான பாட்டைச் செவியாலே அநுப₄வித்து, ஸாமக்₃ரியால் குறைவற்றிருக்கிற யாழைத்தட்டி, பின்னை அது

---

மணிகளால் பதிக்கப்பெற்ற தரையையுடையது. (மாணிக்க மஞ்சரியின்) மாணிக்கங்களைக் கோர்த்துப் பூந்தோரணங்கள்போலே கட்டியிருக்கை. (மின்னொளிசேர்) அத்தோரணங்களின் மின்னும் ஒளி சேர்ந்திருக்கும் மண்டபம். (பளிங்கு விளிம்பு அடுத்த) ஸ்ப₂டிகக் கற்களாலே கொடுங்கைகள் அமைக்கப்பெற்றிருக்கை, (மன்னும் பவளக்கால்) ரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலான நடனமாதர் சாய்ந்திருக்கப் பெறுகையாலே விளங்கி நிற்கும் பவளத்தூண்களையுடைய மண்டபம். (செம்பொன் செய் மண்டபத்துள்) பதினறுமாற்றுடைய ஆணிச் செம்பொன்னல் செய்யப்பெற்ற மண்டபத்தினுள். (அன்ன நடைய அரம்பையர் தம் கைவளர்த்த) அன்னம்போல் நடையையுடைய தே₃வஸ்திரீகள், செடிகளை நீரூட்டி வளர்க்குமாபோலே, தம் கையாலே தடவி வளரச்செய்த இசை. (இன்

**மன்னு மழைதவழும் வாணிலா நீண்மதிதோய்**
**மின்னி னொளிசேர் விசும்பூரும் மாளிகைமேல் 29**
**மன்னு மணிவிளக்கை மாட்டி மழைக்கண்ணார்**

***இரு விசும்பில் மன்னு மழை தவழும்***—பரந்த ஆகாசத்திலே பொருந்தியிருக்கிற மேகமண்டலங்கள் வந்து படியப்பெற்றதும், ***வாள் நிலா நீள் மதி தோய்***—அழகிய நிலவையுடைய பெரிய சந்திரன் வந்து படியப்பெற்றதும், ***மின்னின் ஒளி சேர்***—மின்னலின் ஒளிபோன்ற ஒளியையுடையதும், ***விசும்பு ஊரும் மாளிகை மேல்***—ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதுமான விமானத்திலே, ***மழை கண்ணார்***—குளிர்ந்த கண்களையுடையரான மாதர்கள், ***மன்னு மணி விளக்கை மாட்டி***—அணையாத மாணிக்கங்களாகிற விளக்குகளைத் தொங்கவிட்டு,

---

இனி ஸம்போகாநுபவம் பேசுகிறது. (மழை தவழும்) மேகமும் இளைப்பாறும்; போக்யனான சந்த்ரனுமப்படியே. (விசும்பூரும்) பள்ளப்பாறையுள்ள ஸ்தலம்.

---

பண்பட்டவாறே மிடற்றிலே மாற்றிப்பாட அத்தைக்கேட்டு, (இன்பு உற்று) ஆனந்தநிர்பரனாய்.

இனி ஒரு வெளியோலக்கமும், ஸம்போகார்த்தமாயிருப்பதொரு இருப்பும், ஒரு தென்றலும் அபேக்ஷிதமாயிருக்குமிறே, அத்தைச் சொல்லுகிறது. (இருவிசும்பில்) பரப்புடைத்தான ஆகாசத்திலே. (மன்னு மழை தவழும்) க்ருங்கை கடக்கிறபோது ஒரு மழையும் துளியும் மின்னும்

---

**இசை) இவ்வுலக இசையிலும் சிறந்த தேவகானம். (யாழ் பாடல் கேட்டின்புற்று) அப்படிப்பட்ட இசையையுடைய வீணையின் பாடலைக் கேட்டு அந்த இனிமையை அநுபவித்து.**

**இனி, ''இன்னமுதம் மாந்தியிருப்பர்'' என்பது வரையில் தேவஸ்திரீகளோடு இவன் சிற்றின்பம் அனுபவிப்பதைப் பேசுகிறது. (இருவிசும்பில்) விசாலமான தேவருலகில். (மன்னு மழை தவழும்) கோடையோடு மழை காலத்தோடு வாசியில்லாமல் எப்போதும் மேகங்கள் படிந்திருக்கும் மாளிகை. உயிரளிப்பான் மாகங்களெல்லாம் திரிந்து நன்னீர்கள் சுமந்து, தம் ஆகங்கள் நோவ**

(மின்னுமணி விளக்கை மாட்டி) மாணிக்கத்தின் அழுக்கைக் கழற்றி நிலைவிளக்காக வைத்து (மழைக்கண்ணார்) அடுத்து ஒருகால் பார்க்க, காலதத்வமுள்ளதனையும் வவ்வு

---

உதவினாற்போலே, பேூாகூத்திலே அந்வயித்தபோது ஒரு இருட்சியும் ப்ரகாமமும் அபேக்ஷிதமாயிருக்குமிறே. (வாணிலா நீள் மதி தோய் மின்னிஒளிசேர் விசும்பூரும் மாளிகைமேல் மன்னுமணிவிளக்கை மாட்டி) ஆகாமத்திலே ஸஞ்சரிக்கிற மாளிகைகளிலே பெருவிலையனான ரத்னங்களை, அவித்து ஏற்ற வேண்டாதபடி விளக்காக ஏற்றி, ப்ரகாமாபேக்ஷையில்லாமை யாலே மங்கூளதீூபமாயிருக்[illegible]த்தனையிறே.

(மழைக்கண்ணார்) படுக்கைபடுப்பாரென்று சில பெண்களுண்டு, அவர்கள் படுக்கையைக் கண்ணாலே குளிரப்பார்த்தால் சேதநஸமாதியாலே படுக்கையாயிருக்குமத்தனை.

---

வருந்திய வருத்தம் தீருவதற்காகக் கட்டிய விம்ரம ஸ்தூானங்கள் (இளைப்பாறுமி ங்கள்) போலேயிருக்கை. (வான் நிலா நீள்மதி தோய்) ஒளிபொருந்திய நிலவொளியை உடையதாய், இனிமையிலே நீண்டதாயிருக்கும் சந்திரனும் (மேகூத்தைப்போலே) இளைப்பாறுமிடமாயிருக்கை. (மின்னின் ஒளிசேர்) மின்னலைப்போலே கண்ணைப் பறிக்கும் ஒளியுடையதாயிருக்கை. (விசும்பூரும்) சந்திரனும், மேகூமும் இளைப்பாறுமிடங்கள் பள்ளமானவை யென்னும்படி மிக வோங்கி ஆகாசப் பரப்பையெல்லாம் அடைத்துக்கொண்டிருக்கும் மேடான ஸ்தூலங்களையும் உடையதாயிருக்கும் மாளிகை. மேடு பள்ளமுள்ள இடம்.

(மாளிகைமேல் மன்னு மணிவிளக்கை மாட்டி) மாளிகையின் மேலே மாணிக்கத்தை அழுக்கறக் கடைந்து மன்னவைத்து, அதை நிலைவிளக்காக மாட்டிவைத்து. (மழைக் கண்ணார்) மழைபொழியும் மேகூம்போல் கறுத்துக் குளிர்ந்து விளங்கும் கண்களையுடையவர்கள். ஒருதடவை உற்றுப்பார்த்தால் காலமுள்ளவளாயிலும் கண்ணின் குளிர்ச்சியானது வவ்வலிடச்செய்யுமோ என்னும்படியிருக்கை. (பன்னு) படுக்கை விரித்திருக்கும் அழகைக் கண்டால், காலமெல்லாம் அதையே கொண்டாடவேண்டும்படியிருக்கை. (பன்னு விசித்

**பன்னு விசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல் 30**
**துன்னிய சாலேகஞ் சூழ்கதவந் தான்திறப்ப**
**அன்ன முழக்க நெரிந்துக்க வாணீலச் 31**
**சின்ன நறுந்தாது சூடியோர் மந்தாரம்**
**துன்னு நறுமலரால் தோள்கொட்டிக் கற்பகத்தின் 32**

***விசித்திரமா பாப்படுத்த***—பலவிதமாக விஸ்தாரமாய்ப் பரப்பின, ***பன்னு, பள்ளிமேல்*** — கொண்டாடத்தக்க சயனத்தின்மீது, ***துன்னிய சாலேகம் சூழ் கதவம் தான் திறப்ப*** — நெருங்கிய சன்னல்களைச் சுற்றியுள்ள கதவுகள் திறந்து கொள்ள, ***அன்னம் உழக்க நெரிந்து உக்க வான் நீலம் நறு சின்ன தாது சூடி***—அன்னப்பறவைகள் மிதிப்பதனாலே நெரிந்து துகளாய்ப் போன அழகிய நீலோற்பலத்தின் மணம்மிக்க சிறிய தாதுக்களைச் சூடிக்கொண்டும், ***ஓர் மந்தாரம் துன்னு நறு மலரால் தோள்கொட்டி***—சிறந்த மந்தார வ்ருக்ஷத்திலே நெருங்கியுள்ளதும் மணம் மிக்கதுமான புஷ்பங்களாலே தோள்களை அலங்கரித்துக்கொண்டும்,

---

லிடும்படி பண்ணும். (பன்னு) படுக்கை படுத்தபடி கண்டு வாய்புலர்த்த. (விசித்திரம்) நாநாவர்ணமாகப் பரப்பப் படுத்த படுக்கையிலே. (துன்னிய) காற்றைப்பிடித்துப்

---

(பன்னுவிசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல்) படுக்கையிலே போய் இவன் சர்ய்ந்தால், "படுக்கைவாய்ப்பு இருந்தபடியே" என்று வாய்புலர்த்தும்படியாய், நாநாவர்ணமாய் முடங்க லற்றுப் படுக்கப்பட்ட படுக்கையிலேயாயிற்று சாய்வது. அப்போது காற்று அபேக்ஷிதமாயிருக்குமிறே. (துன்னிய சாலேகம்) அவ்விடம்தான் சுற்றும் ஜாலகமுமாயிருக்குமிறே. வேண்டினபோது வேண்டின வடிவுகொள்ளலாயிருக்குமிறே.

---

**திரமாப் பாப்படுத்த பள்ளிமேல்) கொண்டாடத்தக்கதாய் பல வர்ணங்களையுடையதாகப் பரப்பப்பட்ட படுக்கையின் மேலே. (துன்னிய சாலேகம்) நெருங்கிய துளைகளையுடைய சன்னல். பெருங் காற்று வீசாமலும், காற்றே இல்லாமலுமிராமல், காற்றை அளந்து வீசச்செய்யும்படியான நெருங்கிய துளைகளையுடைய சன்னலா யிருக்கை. (சூழ்கதவம்) அந்த சன்னலைச் சூழ்ந்து மூடியிருக்கும்**

புகுர விடவற்றாயிருக்கை. (தாள் திறப்ப) வேண்டினபோதே தாமே திறப்ப. அவ்வழியே புகும் தென்றலைப் பேசுகிறது —(அன்னம் உழக்க) அன்னங்கள் புக்கு அள்ளல் சேற்றை உழக்குமாபோலே தேனும் சுண்ணமும் தாதும் ஒன்றாக உழக்க, அத்தாலே அது துகளாய், ஒளிமிக்க நீலப்பூவின் சின்ன நறும் தாதை ராஜாக்கள் வளையம் வைக்குமாபோலே வைத்து, மந்தாரப்பூவைத் தோளிலே

(சூழ்கதவப் தாள் திறப்ப) விரல் நுழையாதபடியாய்க் காற்றுக்குச் சீரவடியிட்டுப் புகுரவேண்டும்படி நெருங்கியிருந்துள்ள ஜாலகங்களில் சுற்றுமுண்டான கதவுகள் தாள்நீங்க. (தாள்திறப்ப) தென்றல் புகுந்து, க்ருதஸங்கேதிகள் கதவு திறக்குமாபோலே, புண்யமடியாக வருகிறதாகையாலே சிலர் அடைக்கவும் திறக்கவும் வேண்டாவிறே. (அன்ன முழக்க) அப்போது புகுரும் காற்று இருக்கும்படி சொல்லுகிறது. * "பெடையோடு செங்கால அன்னம் துகைப்ப" என்னுமா போலே, அன்னமானது மிதுநஸம்போகார்த்தமாகவும் மதுபாநார்த்தமாகவும் சென்று இழியும்; இவை ஸஞ்சரிக்கையாலே, பூவும், தாதுவும், தேனும், சுண்ணமும், ஒன்றாகக் குழம்பும். (நெரிந்துக்க வாள் நீலச் சின்ன நறுந்தாது சூடி) பின்னைப்போய் நெரிந்து உகுந்து ஒளியையுடைத்தாய், இவை துகைக்கையாலே முகம் கருகிச் சிதறி, பரிமளம் அதிசயமாயிருந்துள்ள தாதைச் சூடி, இத்தையாயிற்று வளையமாக வைப்பது. (ஓர் மந்தாரம் துன்னு நறுமலரால் தோள்கொட்டி)

**கதவானது. (தாள் திறப்ப) காற்று வேண்டினபோது தானாகத் திறந்துகொள்ள, சன்னல் வழியே புகுந்த தென்றலை ஒரு மஹா புருஷனைப்போலே வருணித்துப் பேசுகிறது இனி,—(அன்னம் உழக்க நெரிந்துக்க) நீர்நிலைகளிலே உள்ள நீலோற்பல புஷ்பங்களிலே அன்னங்கள் புகுந்து, சேற்றைக் குழப்புவதுபோலே, பூவிலுள்ள தேனும், சுண்ணமும், தாதும் ஒன்றாகும்படி குழப்ப, அத்தாலே அது பொடியாகிறது. (வாள் நீலச் சின்ன நறுந்தாது சூடி) அப்படி பொடியான ஒளிமிக்க கருநெய்தற்பூவின் சின்ன நறும் தாதை அரசர்கள் தலையிலே மாலை சூடுவதுபோலே சூடி. (ஓர் மந்தாரம் துன்னு நறுமலரால் தோள் கொட்டி) ஒப்பற்ற மந்தாரபுஷ்பத்தால்**

* பெரியதிரு 3-8-9.

**மன்னு மலர்வாய் மணிவண்டு பின்தொடர**
**இன்னிளம் பூந்தென்றல் புகுந்தீங் கிளமுலைமேல் 33**
**நன்னறுஞ் சந்தனச்சே றுன்புலர்த்தத் தாங்கருஞ்சீர்**
**மின்னிடைமேல் கைவைத் திருந்தேந் திளமுலைமேல் 34**

*கற்பகத்தின் மன்னு மலர்வாய் மணிவண்டு பின்தொடர*— கல்பகவ்ருக்ஷத்திலே பொருந்திய பூக்களிலே படிந்த அழகிய வண்டுகள் பின்தொடரப்பெற்றும், *இன் இள பூ தென்றல்*— பரம போ₄க்₂யமான மந்த₃மாருதமானது, *ஈங்கு புகுந்து*—இவர்கள் ரமிக்குமிடங்களிலே வந்து சேர்ந்து, *இள முலை மேல்*— இள முலைகள்மேல் பூசப்பட்ட, *நல் நறு சந்தனம் சேறு உள் புலர்த்த*— நல மணமுடைய சந்தனச்சேற்றை நன்கு உலர்த்த, *தங்க அரு சீர் மின் இடை மேல் கை வைத்து இருந்து*—த₄ரிக்கமுடியாத (ஸூக்ஷ்மமான) அழகிய மின் போன்ற இடுப்பின் மீது கையை வைத்துக்கொண்டிருந்து, *ஏந்து இள முலைமேல்*—உயர்ந்த இளமுலைமேலே,

---

தோள்மாலையாக ஏறிட்டு, கற்பகத்துக்கு எழுதிக்கொடுத்த வண்டுகள் தன்னைக்கொண்டு எழுந்துபோகும்படியாய்.

---

ஒரு மந்த₃ாரமரத்தினுடைய நெருங்கப் பூத்துப் பரிமள ப்ரசுரமாயிருக்கிற பூக்களை ஹர்ஷத்தாலே தோளிலே கொட்டிக்கொண்டு. (கற்பகத்தின் மன்னு மலர்வாய் மணி வண்டு பின்தொடர) "ஒருகாலும் பிரியக்கடவோமல்லோம்" என்று சூழ்த்துக்கொடுத்து, ஒரு விஷயத்திலே தொடர்ந்து போவாரைப்போலே, கல்பகதருவில் ஏகரூபமாயிருந்துள்ள புஷ்பத்திலே மது₄பானத்தாலும் பரஸ்பர ஸம்ஶ்லேஷத்தாலும் நரை திரை மூப்பு அற்றிருக்கிற வண்டுகளானவை பின்தொடர, இக்காற்றைக் கண்டவாறே, "இதுக்கு முன்பு இக்காற்றைக்

---

**நெருங்கக்கட்டிய மணமிக்க மாலையை அரசர்கள் தோளிலே மாசூடுவதுபோலே சுமந்துகொண்டு. (கற்பகத்தின் மலர் வாய் மன்னும் மணிவண்டு பின்தொடர) கற்பகத்தின் தேன்மிகுதிக்குத் தோற்றுத் தம்மை எழுதிக்கொடுத்து அதிலேயே நித்யவாஸம் செய்யும் வண்டுகள், அதையும் மறந்து இத்தென்றலின் இனிமையிலே**

மந்த3மாய்ப் பரிமவ த்தையுடைத்தான தென்றல் நாலடி யிட்டுப் புகுந்து, "அல்லோம்" என்பாரும் விழவற்றுன போ4க்3யதையையுடைத்தான சந்த3னச் சேற்றைச் சிற்றால வட்டம்போலே முறையிலே உலர்த்த. தாங்க அரிதாய் சீருடைய மின்போன்ற இடைமேலே கையை வைத்துக்

கண்டறியோமீ !" என்று தன்னை அநாத3ரித்துப் போகச் செய்தேயும் ஒருநிலைக்காமமாகத் தானே காற்றைப் பின் தொடராநிற்கும். இது பிட.தொடரவேண்டும்படி. (இன்னிளம் பூந்தென்றல். புகுந்து) இனியதாய் இளையதாய் பரிமளிதமாயிருந்துள்ள தென்றலானது போ4க3வர்த்த4கமாய்க் கொண்டு புகுந்து. (ஈங்கிள முலைமேல் நன்னறுஞ்சந்தனச் சேறு) இவ்வளவிலே எப்போதுமொக்க ஷோட3ஶவார்ஷிகை களாயிருக்கையாலே முலையும் இளையதாயிருக்குமறே. அதின் மேலே போ4க3யோக்3யமாக அலங்கரிக்கப்பட்டிருந்துள்ள, நன்றாய் பரிமளப்ரசுரமான சந்தனக்குழம்பை. (உள் புலர்த்த) மேலெழவன்றியிலே அந்தப் பணிக்குக் கடவார் சிற்றால வட்டங்கொண்டு ஆற்றுமாபோலே புலர்த்த.

போ4க்தாவும் ஈடுபடும்படியான வைத3க்3த்4யம் சொல்லு கிறது,—(தாங்கரும் சீர் இத்யாதி3) இத்தை எங்ஙனே தான் கொண்டு த3ரிக்கும்படி? என்று கூசவேண்டும்படியான அழகையுடைத்தாய், (தாங்கரும்சீர் மின்னிடைமேல் கைவைத் திருந்து) முலையைத் தாங்க அரிதாய், அழகிய மின்போலே

மயங்கி, அரசர்களைத் துதிபாடகர்கள் துதித்துக்கொண்டு பின்வருமா போலே, ரீங்காரம் செய்துகொண்டு பின்தொடரும்படியாக. (இன் னிளம் பூந்தென்றல் ஈங்கு புகுந்து) ஸ்பர்ஶிப்பதற்கு இனியதாய், மந்த3 மாய், பூக்களின் நறு:ணத்தையுடையதான தென்றல் இவர்களிருக்கு மிடம் புகுந்து. (இள முலை மேல் நன்னறுஞ் சந்த3னச் சேறு உள் புலர்த்த) கலவியை வெறுக்கும் முனிவர்களையும் இதைக்கண்டுவிட் டால் மேல் விழச்செய்யும் இனிமையையுடையதான தே3வஸ்த்ரீ ஸ்தனத்தின் மேலே பூசப்பெற்றிருக்கும் மணம் மிக்க சந்த3னக்குழம்பை சிறியதொரு விசிறிகொண்டு வீசினாற்போலே க்ரமமாக உலர்த்த. (தாங்கருஞ்சீர் மின் னிடை மேல் கைவைத்து) கொங்கை பா4ரத்தைத்

**பொன்னரும் பாரம் புலம்ப வகங்குழைந்தாங்கு**
**இன்ன வுருவி னிமையாத் தடங்கண்ணார் 35**
**அன்னவர்தம் மானோக்க முண்டாங் கணிமுறுவல்**
**இன்னமுதம் மாந்தி யிருப்பர் இதுவன்றே 36**

*பொன் அரும்பு ஆரம் புலம்ப*—காசுமாலைகள் ஒலிக்கும்படிநிற்க, *ஆங்கு*—அவ்விடத்திலே, *அகம் குழைந்து*—மனமுருகி இன்ன *உருவின் இமையா தடம் கண் ஆர்*—இப்படிப்பட்ட சிறந்த பெரிய கண் படைத்த, *அன்னவர் தம்*—தேவர்மாதர்களுடைய, *மான் நோக்கம் உண்டு*—மானின் நோக்குப்போன்ற நோக்கை அநுபவித்து, *ஆங்கு*—அதனோடுகூட, *அணி முறுவல் இன்னமுதம் மாந்தி இருப்பர்*—அழகிய புன்சிரிப்பாகிய இனிய அம்ருதத்தையும் பருகியிருப்பர்கள்;

---

காந்தனுக்கு ஸர்வஸ்வதானம் பண்ணி இருந்து. (பொன் னரும்பாரம் புலம்ப) ஸம்ச்லேஷத்தைப் பேசினபடி.

---

யிருந்துள்ள இடையின்மேலே கையை வைத்துக்கொண்டி ருந்து. (ஏந்திள முலைமேல் பொன்னரும்பாரம் புலம்ப) ஏந்தப் பட்டுச் சமைய வளர்ந்திருந்துள்ள முலைமேலில், ஸம்போக ஸமயத்திலும் கழற்றிப் பூணவேண்டாதபடி ஸஹஜமாயிருக் கிற முத்துக்களும் பொன்னுமாயரும்பி, உட்கழுத்தாரம், ஸம் போகத்திலுண்டான வ்யாகுலதையாலே அங்கேயிங்கே அலச, "இவளுக்கு நாம் ஆபரணமாகப்பட்டதே ?" என்று கூப்பிடு கிறப்போலேயாயிற்று இருப்பது. த்ரிஸரம், பஞ்சஸரம், தனி யாரம் இவை தன்னிலே அலசின ஓசையைச் சொல்லுகிறது புலம்பிற்றாக. இதாயிற்றுப் புறம்பு படுகிறபடி.

---

**தர்க்க அரிதாய், அழகியதாய், மின்னல்போல் நுண்ணியதான இடை மேலே கையை வைத்துக்கொண்டு காதலனை இவனுக்குத் தன்னை முற்றூட்டாக அனுபவிக்கக் கொடுத்துக் கொண்டிருந்து. (பொன் னரும்பு ஆரம் புலம்ப) பொற்காசுகளாலான மாலை ஒலிக்கும்படியாக. ஸம்போகத்தில் உடம்புகள் அணைவதால் அசையும்காசுமாலை ஒலிக் கும்படியாக. (அரும்பு ஆரம் புலம்ப) "இவளுக்கு ஆபரணமாகி நாம் இப்பாடுபடுவதே" என்று முலையிலே அரும்பினாற்போல் பொருந்தி யுள்ள அணிகலன்கள் புலம்புவதுபோலே உள்ளது. கலவியின்பத்தை மறைமுகமாகப் பேசுகிறார்.**

(அகம் குழைந்து) உடன்பட்டபடி. (இன்னவுரு) இட்டு மாற்றிஞற்போல் இருக்கை. (இமையாத் தடங் கண்ணர்) வைத்த கண் வாங்கவொண்ணுதை போ₄க்₃ய தையை உடையவர்கள். (மாஞேக்கமுண்டு) நோக்குப் பொறுத்தவாறே முறுவல்பண்ண, அதுவும் உண்டறுக்க வல்லராம்படியாயிற்றிருப்பது. (இருப்பர்) போ₄க்₃யதாதி

---

(அகம் குழைந்து) அகவாயில் ஆட்டம் பேச்சுக்கு நில மல்லவே. "முலேமேல் பொன்னரும்பாரம்" என்று ஆரம் பூண்டதாயிருக்கையன்றி, முலேதான் ஆரமாய்க்கொண்டு அரும்பிஞற்போலேயாயிற்று ஆரம்பூண்டிருக்கும்படி என்று மாம். (ஆங்கு) ஹ்ருத₃யமழிந்த அவ்வவஸ்தை₂யிலே. (இன்ன உருவில்) ஏவம்வித₄மான ஸ்வரூபவைலக்ஷண்யத்தையுடைய ராய். (இமையா) கண் இமையோடு இமை பொருந்தில் ஜக₃து₃பஸம்ஹாரமாமென்னும்படியிருக்கையாலே இமை யோடு இமை பொருந்தாதே. இமையா என்று — ஸ்வரூப கத₂மன்று. விஷயத₃ர்ஶநத்தால் இமையாமை. (தடங் கண்ணர்) கண்ணின் பரப்புடங்கலும் இமையாமைக்கு உறுப்பு.

(அன்னவர்தம் மான் நோக்கமுண்டு) அப்படிபபட்டவ ருடைய விலக்ஷணமான நோக்கையாயிற்று பு₄ஜிப்பது. (ஆங்கு அணி முறுவல் இன்னமுதம் மாந்தியிருப்பர்) அந் நோக்கைப்பருகி அது ஸாத்மியாநின்றவாறே முறுவல்பண்ண, அத்தாலே அழகிதான முறுவலோடே கூடின அத₄ராம்ருதத் தைப் பானம்பண்ணி, அதிலுலே தங்களை அழிந்திருப்பர்கள்.

---

**(அகம் குழைந்து) அவ்வின்பத்திற்கு மனமுருகி உடன்பட்டு. (ஆங்கு) அந்த தே₃வருலகில். (இன்ன உருவின் இமையாத் தடங் கண்ணர்) (இன்னவுரு) உலேயிலிட்டு உருக்கியெடுத்த பொன் போலே விவரிக்கவொண்ணுத அழகையுடையராயிருக்கை. (இமையாத் தடங்கண்ணர்...) கண்ணிமைத்துப் பார்க்கவொண்ணுத கண்ணழகை யுடையவர்களுடைய மான் நோக்கம் உண்டு. அந்த நோக்காகிற உணவைச் சீரணித்தவுடன், அவர்கள் புன் முறுவல் பூக்க, அம் முறுவலேயும், அத₄ரபானத்தையும் பருகி தா₃ஹஶாந்தி செய்து கொள்ளுவர். (இருப்பர்) இனிமை மிகுதியாலே இவ்வின்பத்தை**

**அன்ன வறத்தின் பயனாவ தொண்பொருளும்**
**அன்ன திறத்ததே யாதலால் காமத்தின்** 37
**மன்னும் வழிமுறையே நிற்றும்நாம் மானோக்கின்**
**அன்ன நடையா ரலரேச ஆடவர்மேல்** 38

***அன்ன அறத்தின் பயன் ஆவது இது அன்றே***—அப்படிப்பட்ட (முன்னே நான் சொன்ன) தர்ம புருஷார்த்தத்திற்குப் பலனாகப் பெறும் பேறு இதுவேயாம்; ***ஒண் பொருளும்***—சிறந்த அர்த்த புருஷார்த்தத்தின் பலனும், ***அன்ன திறத்ததே***—அப்படி அற்பமாகவும் அஸ்திரமாகவுமுள்ளதே: ***ஆதலால்***—இப்படி அறம்பொருள்களாகிற இரண்டு புருஷார்த்தங்களுக்கும் காமமே பயனாகத் தேறுவதனால், ***காமத்தின்***—அக்காமபுருஷார்த்தத்தினுடைய, ***மன்னும் வழி முறையே***—நிலைநின்ற வழியாகிய பகவத் காம மார்க்கத்திலே, ***நாம் நிற்றும்***—நாம் ஊற்றமுடையராயிருப்போம். ***மான் நோக்கின் அன்னம் நடையார்***—மான்போன்ற நோக்கையும் அன்னம்போன்ற நடையையுமுடைய மாதர்கள், ***அலர் ஏச***—(உலகத்தார்) பழிதூற்றும்படி, ***ஆடவர் மேல்***—புருஷர்களின்மேல் (ஆண்களைநோக்கி)

---

*ஸ*யத்தாலே போகமாட்டாமை. (இதுவன்றே) ஒரு சிருங்கையென்கிறது; க்ருஷிக்குத் தக்க பலம் போராமை.

---

(இதுவன்றே அன்ன அறத்தின் பயனாவது) இதுவிறே அப்படிப்பட்ட தர்மத்தினுடைய ப்ரயோஜநமாயிற்று. ஆகையாலே தர்மமும் காம*ஸே*ஷம். மோக்ஷம் தானே தள்ளுண்டது. இனி *ஸே*ஷிப்பது அர்த்தமிறே.

---

**விட்டு அகலமாட்டாமையைக் காட்டுகிறது. (இதுவன்றே அன்ன வறத்தின் பயனாவது) அப்படி சிரமப்பட்டு அனுஷ்டிக்கும் தர்மத்தின் பயன் இவ்வளவு சிறிதன்றோ. படாதபாடுபட்டுக் கையளவு உணவு பெற்றாற் போலிருப்பதன்றோ. சிரமத்துக்குத்தக்க பலனில்லை என்றபடி.**

**(ஒண்பொருளும் அன்ன திறத்ததே) ஒளிபொருந்திய பொருளும் இப்படி அற்பமாகவும் அஸ்திரமாகவுமிருப்பதே. பரம்பொருளை**

(ஒண்பொருளும் அன்ன திறத்ததே) ஒண்பொருளும் அத்தனையே. ஒண்பொருள்–ஆசார்யர்களையுங்கூட விட்டுப் பற்றுமவன் பக்ஷத்தாலே. (மன்னும் வழிமுறை) ஆபாஸ காமத்தையொழிய நிலைநின்ற பகவத் காமத்தின் வழியே. (நாம்) காமத்தையொழிய ஸர்வத்தையும் விட்ட நாம். (மான் நோக்கின்) நோக்குக்கும் நடைக்கும் தனித்தனியே

---

(ஒண்பொருளும் அன்ன திறத்ததே) சிறியார் பெரியார் இன்றென்று வாசியின்றிக்கே எல்லாருமொக்க,"நன்று நன்று" என்று விரும்புகிற அர்த்தமும் காமசேஷம்.

(ஆதலால் காமத்தின் மன்னும் வழிமுறையே நிற்றும் நாம்) ஆதலால் — அர்த்தஸ்திதி இப்படியேயிருக்கையாலே, ப்ரதாந புருஷார்த்தமான காமத்தினுடைய நிலைநின்ற வழியிலே முறைகெடாதபடி நின்றோம் நாம். இப்படியொழிய அபிமத விஷயத்தைப் பிரிந்த ஆற்றாமை கரைபுரளச் செய்தேயும் எதிர்த்தலை வரக்கண்டிருக்கைக்கு மேற்படத் தாந்தாம் அர்த்திக்கக் கடவதல்லவென்று விவக்ஷிதரல்லாதார் சொல்லுவதொரு பாசுரமுண்டு; அது சாஸ்த்ரமேயாகிலும் நமக்கது பக்ஷமல்ல.

(மான் நோக்கின் அன்னநடையார் அலரேச) அபிமத விஷயத்தில் கண்ணிலும், மௌக்த்யத்திலும் குறியழியாதே,

---

யளிக்கும் ஆசாரியர்களையுங்கூட இதுநிமித்தமாகக் கைவிட்டு, இதைப்பற்றும் இவன் இப்பொருளையே ஒளிபொருந்திய வஸ்துவாக நினைத்திருக்கிறுகையாலே இவன் நினைவாலே 'ஒண் பொருள்' என்கிறார். தன் நினைவாலேயன்று.

(காமத்தின் மன்னும் வழிமுறையே நிற்றும் நாம்) காமத்தில் தாழ்ந்த வழியான இதரவிஷய காமத்தையும் அறம்பொருள்களைப் போலே விட்டு, நிலைநின்ற காமமார்க்கமான பகவத் காமமார்க்கத்திலேயே நாம் உறுதியாக நிற்போம். (நாம்) காமத்தைத் தவிர்ந்த எல்லாவற்றையும் கைவிட்டிருக்கும் நாம். (மான் நோக்கின் அன்ன நடையார் அலரேச ஆடவர் மேல் மன்னுமடல் ஊரார் என்

**மன்னு மடலூரா ரென்பதோர் வாசகமும்**
**தென்னுரையிற்கேட்டறிவ துண்டதனை**
**யாந்தெளியோம் 39**
**மன்னும் வடநெறியே வேண்டினோம் வேண்டாதார்**

*மன்னும் மடல் ஊரார் என்பது ஓர் வாசகமும்*—'(உயிரை) நிலைப்பிக்கும் மடலூரக்கூடாது' என்று சொல்லுகிற ஒரு வாக்கியத்தை, *தென் உரையில் கேட்டு அறிவது உண்டு*—தமிழ் பாஷையில் கேட்டு அறிந்திருக்கிறோம்; *யாம் அதனை தெளியோம்*—அந்த வாக்கியத்தைத் தெளிவுண்டயதாக நாம் நினைக்கமாட்டோம், (அது பொருந்தாது); *மன்னும் வடநெறியே வேண்டினோம்*—(இவ்விஷயத்தில்) சிறந்த ஸம்ஸ்க்ருத நூல்களிற்கூறிய வழியையே கைப்பற்றுவோம்; *வேண்டாதார்*—(அப்படி வடமொழி நூல்களில் சொல்லப்பட்டுள்ளபடி காமம் வரம்பு மீறுவதை) விரும்பாதவர்கள் (எப்படிப்பட்டவர்களென்றால்,)

---

மடலூரவேண்டும்படியிருக்கை. (அலரேச) பிறர் பழி சொல்ல. (ஆடவர்) தலைமகன் பேர் (மேல்?). (மன்னு

---

கடையிலும் தோற்ற தோல்வியின்றிக்கேயிருக்குமவர்கள், இரண்டு மருங்குமிருந்து பழி சொல்லாநிற்க. (ஆடவர்மேல்

---

பதோர் வாசகமும்) பெண்கள் ஆடவர்மேல் மடலெடுக்கக் கூடாது என்று தமிழர் வரம்புகட்டியிருப்பதை அநுவதிக்கிறார். (மான் நோக்கின் அன்ன நடையார்) இவர்கள் நோக்கழகையும் நடையழகையும் கண்ட ஆடவர்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே மடலெடுக்கவேண்டியிருக்க, இவர்கள் அவர்கள்மேல் மடலெடுக்கை யாவதென்? என்று தமிழர் கருத்து. (அலரேச) பிறர் பழி சொல்லும்படியாக. பழிச்சொல் ஆணுக்கு ஏற்பட்டாலும் ஏற்படலாம், பெண்ணுக்கு ஏற்படலாகாது என்று தமிழர் கருத்து. (ஆடவர் மேல்) தலைமகன் மேல். நாயகனுக்கு சேஷபூதையான நாயகி அவனுக்குப் பழியை விளைக்கக்கூடாது என்று தமிழர் கருத்து. (மன்னுமடல் ஊரார்) உயிரை தரிப்பிப்பதற்காகவும் மடல் ஊரமாட்டார்கள். தலைமகனுக்குத் தன் உயிரைக்காட்டிலும், தன்

மடல்) ப்ராணனை த₄ரிப்பிக்கும் மடல். (தென்னுரை) ம்லேச்ச₂ ஜாதி பிதற்றும் தமிழ். உக்திமாத்ரமே; அர்த்த₂ யுக்தமன்று.

(மன்னும் வடநெறி) மடலெடுக்கையே புருஷார்த்த₂மென்று உபபாதி₃க்கிற ஸ்ரீராமாயணாதி₃கள். (வேண்டா

---

மன்னும் மடலூரார் என்பதோர் வாசகமும் தென்னுரையில் கேட்டறிவதுண்டு) அபி₄மதமெல்லாம் பெற்றல்லது மீளாத படியான மடலூரக் கடவரல்லரென்றுகொண்டு இங்ஙனே சொல்லிக்கொண்டு போருவதொரு நிரர்த்த₂க ஶப்₃த₃முண்டு

(அதனை யாம் தெளியோம்) அப்படிப்பட்ட அதுதன்னை நாங்களிகழ்ந்த, ம்லேச்ச₂ ஜாதிகளிலே அப்ப₄ாஷையிலே கேட்டுப் போருவதுண்டு, அத்தை, அபி₄மத விஷயத்தைப் பெற்றல்லது த₄ரியாத நாம் அநுஷ்டே₂யமாகத் தேறோம்; (மன்னும் வடநெறியே வேண்டினோம்) நாங்கள் ஆத₃ரித்த பக்ஷம் சொல்லக்கேட்கில், நிலைநின்றதாய் அ(சா)ர்யர்கள் பரிக்₃ரஹித்துப் போருகிற ஸம்ஸ்க்ருதமான வைதி₃கமார்க₃த்திலே நின்றோம்.

---

ஸ்வரூபம் உயர்ந்தது என்று தமிழர் கருத்து. (என்பதோர் வாசகமும்) இக்கருத்தை சொல்லும் வாக்கியம் ஒன்றை. (ஓர் வாசகமும்) காதலின் பெருமையை அறியமாட்டாத இதுவுமோர் வாசகமாவதே! என்னும் இகழ்ச்சி தோற்றுகிறது. (தென்னுரை) * மிலேச்ச₂ ஜாதியினர் பிதற்றும் பிராகிருத மொழியிலமைந்த வாசகம் காதலின் உயர்வைக் காட்டமுடியுமோ? (உரை) வெறும் உரையேயொழியப் பொருள் பொதிந்ததன்று. (அதனை யாம் தெளியோம்) அவ்வார்த்தையில் பொருளிருந்தாலும், அது எம் அறிவுக்கு எட்டவில்லை.

(மன்னும் வடநெறியே வேண்டினோம்) புருஷனைப் பிரிந்த பாவையர் மடலெடுப்பதே புருஷார்த்த₂மாகும் என்று அறிவிக்கும்

---

* மடலெடுப்பதிலுள்ள உத்₃வேக₃த்தாலே தமிழையும், தமிழர் பண்பாட்டையும் இகழ்கிறாரேயொழிய உண்மையில் தமிழின்மேல் ஆழ்வார் துவேஷமுடையவரல்லர். நஹிநிந்தா₂ந்யாயத்தை நினைப்பது. மடலெடுப்பதாகத் தொடங்கினாரேயொழிய, இவரும் மடலெடுத்து முடிக்கவில்லையே. ஆகையால் கடைசியில் தமிழும், தமிழர் பண்பாடுமே வெற்றி கொண்டது.

**தென்னன் பொதியில் செழுஞ்சந்த னக்குழம்பின் 40**
**அன்னதோர் தன்மை யறியாதார் ஆயன்வேய்**
**இன்னிசை யோசைக் கிரங்காதார் மால்விடையின் 41**
**மன்னு மணிபுலம்ப வாடாதார் பெண்ணைமேல்**

***தென்னன் பொதியில் செழு சந்தனம் குழம்பின் அன்னது ஓர் தன்மை அறியாதார்***-பாண்டியராஜனது நாட்டிலுள்ள பொதிய மலையில் விளைகிற சந்தனத்திலாகிய குழம்பின் அப்படிப் பட்ட தன்மையை அறியாதவர்கள்; ***ஆயன் வேய் இன் இசை ஓசைக்கு இரங்காதார்***—இடையன் ஊதுகிற புல்லாங்குழலின் இனிய பாட்டொலியைக் கேட்டுத் தளராதேயிருப்பவர்கள்; ***மால் விடையின்***—(பசுவின் மேலே) மோகித்து வருகிற காளை யின், ***மன்னு மணி புலம்ப வாடாதார்***—சிறந்த (கழுத்தின்) மணி யானது ஒலிக்க வாட்டமடையாதவர்கள்;

---

தார்) காமபுருஷார்த்தத்தை வேண்டாதார். (தென்னன்) சந்தநம் இன்ன பூண்டென்றறியாமை. (செழும்) ருஷி களையும் துவளப் பண்ணவற்றுகை. துரும்பு எழுந்தாடவும்

---

(வேண்டாதார்) இத்தை ஆதரியாதவர்கள், ஆதரித்த அபிமதவிஷய விச்லேஷத்தில் நோவுபடாநிற்கச் செய்தேயும் போகோபகரணங்கள் கொண்டு காலக்ஷேபம் பண்ணியிருக்க வல்ல ஸாஹஸிகர்கள். (தென்னனித்யாதி) (பொதியில் செழும் சந்தனக்குழம்பின் அன்னதோர் தன்மையறியாதார்) அவர்கள் தெற்குத்திக்குக்கு நிர்வாஹகனான ராஜாவையும் அவன் சந்தநகிரியையும், அப்பர்வதத்திலே படக்கடவதாய்

---

**ஸ்ரீராமாயணம் முதலான வடமொழி நூல்களிற் சொன்ன முறை யையே விரும்பினேன், (வேண்டாதார்) வடநெறியை வேண்டாமல் தென்னுரையைப் பின்பற்றுமவர்கள் காமம் இன்னதென்பதையே அறி யாதவர்கள். (தென்னன்......) தமிழ் நாட்டிலிருந்தும் நாட்டின் பெருமையை உணராதவர்கள். (தென்னன் பொதியில்) சந்தநம் நம் தமிழ்நாட்டிலே பொதியமலையில் உண்டாவதொரு தாவரம் என்பதையும் அறியாதவர்கள். (செழும் சந்தனக் குழம்பு) முற்றும் துறந்த முனிவரையும் மயக்கக்கூடிய செழுமையுடைய சந்தநம். இதைப் பூசியவுடனே, ஒரு துரும்புக்கும் எழுந்தாடலாம்படியான**

பண்ணவற்று. (அன்ன) சொல்ல வாய்வேம் தன்மை அறியாதார். தலைமகனைப் பிரிந்தால் சந்தநம் கொப்பளிக்குமென்று அறியாதார். (ஆயன்வேய்) குழலோசை துடைகுத்த உறங்கவல்லார். ப்ராஹ்மணர்க்கு ஓத்தும், பாணர்க்குப் பாட்டும்போலே இடையர்க்குக் குழல். அந்த ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஈடுபடாதார். (இன்னிசை) த்வநியே நஞ்சு. இது பாதகமாகிறது – அவனுடைய ஸாந்த்வநங்களை நினைத்து. (மால்விடையின் மன்னுமணி புலம்ப வாடாதார்) நாகின்மேலே பிச்சேறின விடையினுடைய

---

வெளிறு கழிந்த சந்தநத்தையும், அதினுடைய குழம்பைப் பூசினால் அழலக்கடவதான வ்யஸநத்தையும் அறியாதவர்கள்.

(ஆயன்வேய் இன்னிசையோசைக்கு இரங்காதார்) அதுக்கு மேலே ப்ராஹ்மணர் குழலூதக் கேட்டால் ஸ்வரவசந வ்யக்திகளை ஆராய்ந்து லக்ஷணம் கொண்டாடியிருக்குமா போலே, இடையனுடைய குழலிலுண்டான இனிதான குழல் த்வநியைக் கேட்டு வ்யஸநப்படாதே தரித்திருக்கவல்லவர்கள். (மால்விடையின் மன்னு மணி புலம்ப வாடாதார்) நாகின்

---

செழுமையை அளிக்கவல்ல சந்தனம், (குழம்பின் அன்னதோர் தன்மை அறியாதார்) தலைமகனைப் பிரிந்தார்க்கு இச்சந்தனம் உடம்பைக் கொப்பளிக்கச்செய்யும் தன்மையையுடையது என்பதை அறியாதார். '(அன்னதோர் தன்மை) இன்னது என்று சொன்னாலும் வாய் வெந்துபோம்படியான தன்மையை அறியாதார். (ஆயன் வேய் இன்னிசையோசைக்கு இரங்காதார்) ஆயர்களின் குழலோசையைக்கேட்டு, 'ஐயோ! இவ்வொலியை நாம் காதலனோடு கூடியிருந்து அநுபவிக்கப் பெற்றிலோமே' என்று கரையாதவர்கள் அவர்கள். அந்தக் குழலோசையைக் கேட்டபின்பும், காந்தன் நினைவேயில்லாமல், அதுவே தாலாட்டாக உறங்கவல்ல கல்நெஞ்சினர் அவர்கள். அந்தணர் அருமறையோதுவதும், பாணர் பாடுவதும், இடையர் குழலூதுவதும் கேட்பவரையெல்லாம் ஈடுபடுத்தும். ப்ரஹ்மாஸ்த்ரம்போல் தப்பாததான அக்குழலோசைக்கும் ஈடுபடாத அரஸிகர்கள் அவர்கள். (இன்னிசை ஓசை) விஷந்தடவிய அம்பு. ஓசை அம்பு; இசை விஷம். இப்படி இது விஷமாகிறது ஏனெனில்: அவனுடைய இன்சொற்களை நினைவுறுத்துவதன் மூலம் வாட்டுகையாலே. (மால்விடையின் மன்னு மணி புலம்ப வாடாதார்) மால்

**பின்னுமவ் வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு 42**
**உன்னி யுடலுருகி நையாதார் உம்பர்வாய்த்**

*பெண்ணைமேல் பின்னும்* — பனைமரத்தின் மீது ஆணோடே வாயலகு கோத்துக்கொண்டிருக்கிற, *அவ்வன்றில் பெடைவாய் சிறுகுரலுக்கு* — அன்றிற் பறவையின் பேடையினது வாயில் நின்றும் உண்டாகிற அப்படிப்பட்ட சிறு குரலைக்கேட்டு, *உன்னி*—தமது நாயக ஸம்ச்லேஷத்தை நினைத்து, *உடல் உருகி நையாதார்*—ஶரீரம் கரைந்து குலையாதவர்கள்; *உம்பர் வாய்* — ஆகாஶத்திலே,

---

த்₃வநியோவாதே மணி புலம்ப, அக்₃நிஸகாஶத்திலே தளிர் சுருங்குமாபோலே சுருளாதார். இதுதான் இருய்க்க அதுதான் மேலே விழும்படி.

---

மேலே பிச்சாய்த் தொடர்ந்து வருகிற ருஷப₄த்தின் கழுத்திலே கயிறிட்டுக் கட்டுவாரில்லாமையாலே, ஏகருபமாய் அணியரானவர்கள் இத்₃த₄ர்மஹாநியை அநுஸந்தி₄த்துக் கையெடுத்துக் கூப்பிடுமாபோலே த்₄வநிக்க, அத்தைக்கேட்டு ஸத்தை அழிந்த தளிர்போலே சருகாய்ப்போகாதார்.

(பெண்ணைமேல் பின்னும் அவ்வன்றிற் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு உன்னியுடலுருகி நையாதார்) பனையின்மேலே பரஸ்பரம் வாயலகைக் கோத்துக்கொண்டு உறங்கின அன்றிலி

---

விடை-(பசுவிடம்) காதல்கொண்ட எருது. அதனுடைய மணியானது இடைவிடாமல் ஒலிக்க. அதைக்கேட்டு, தீப்பட்ட தளிர் வாடுவது போலே வாடாதவர்கள். அதைக்கேட்டு ஏன் வாடவேண்டுமெனில்: புணர்வதற்காக வரும் எருத்தைக்கண்டு பசுவானது இசைவின்மை தோற்றவிருக்க, எருதானது தானே மேல்விழுந்து புணருகையாலே எருத்தின் கழுத்தில் கட்டிய மணி ஒலிக்கிறது. இவ்வொலியானது தான் இசைந்திருந்தும் வாராதிருக்கும் நாயகனை நினைவுறுத்தி நாயகியை வாட்டுகிறது.

(பெண்ணைமேல் பின்னும் அவ்வன்றில் பெடை வாய்ச் சிறுகுர லுக்கு உன்னி உடலுருகி நையாதார்) பனைமரத்தின் மேலே (தன்

(பெண்ணை இத்யாதி) அன்றிலினுடைய ஆர்த்த நாதத்தைக் கேட்டும் உருகி இரங்காதவர்கள். (பின்னும்) வாயலகு கோத்திருக்கை. முன்பில் வ்யஸநத்துக்கு மேலே என்றுமாம். (சிறுகுரல்) ப்ரணயத்தாலே இளைத்துப் பேசுகிறபடி. (உன்னி) தங்கள் ஸம்ச்லேஷத்தை ஸ்மரித்து.

(உம்பர்வாய்) தலைமகனையொழிய நிலவிலே படுக்க வல்லவர்கள். "உம்பர்வாய்" என்றது – ஆகாசத்திலே; உகுத்த, – ஸ்வாநுமாநத்தாலே அவளும் பொறுக்கமாட்

---

னுடைய பரிவுக்குப் பாடாற்றவல்ல சேவலுடைய த்வநிக் கன்றிக்கே, பிரிவுபொறுக்கமாட்டாத மார்த்தவத்தோடே கூடின பேடையினுடைய அதிதாருணமான சிறுகுரலுண்டு— ஒருகால் தொடங்கின வார்த்தையைத் தலைக்கட்டும்போது நடுவே பதின்கால் இளைப்பாறவேண்டும்படி அத்யந்தம் ஆர்த்தமான சப்தம், அத்தைக்கேட்டு, தாங்கள் சேர விருந்தால் போகமத்யே பிறக்கும் சப்தங்களை அநுஸந்தித்த அநந்தரம், கிண்ணகப்பெருகானது கரைகளைச் சென்று குத்திக் கரைத்துப் பொகடுமாபோலே, சரீரமானது கட்டழிந்து, பின்னை ஓரவயவியாகக் காணவொண்ணாதபடி சிதிலராய்ப் போகாதார்.

---

நாயகனோடே புணருகையாலே) ஒன்றோடொன்று வாயலகைப் பின்னிக்கொண்டிருக்கும் அன்றில்பேடையினுடைய வாயிலிருந்து புறப்படும் சிறுகுரலைக்கேட்டு, தான் நாயகனோடு கலந்ததை எண்ணி உடலுருகி நைவாதவர்கள், (பின்னும்) என்பதை முதலிலே வைத்து, மாலிளை மணியோசை கேட்ட துன்பத்துக்குமேலே என்றும் சொல்லலாம். (சிறு குரல்) கலவியாலே இளைத்துச் சிறுகுரலாயிருக்கை. (உன்னி) தாங்கள் இன்புற்றதை நினைவுறுத்துவதன் மூலம் இது உடலை உருக்குகிறது.

(உம்பர்வாய்......தளராதார்) நாயகனைப் பிரிந்து நிலவாகிற நெருப்பிலே படுக்கவல்லவர்கள் அவர்கள். "உம்பர்வாய்" என்றது

**துன்னு மதியுகுத்த தூநிலா நீணெருப்பில் 43**
**தம்முடலம் வேவத் தளராதார் காமவேள்**
**மன்னுஞ் சிலைவாய் மலர்வாளி கோத்தெய்யப் 44**
**பொன்னெடு வீதி புகாதார் தம்பூவணைமேல்**

***துன்னுமதி உகுத்த***—நெருங்கிய (கிரணங்களையுடைய) சந்திரன் சொரிந்த, ***தூ நிலா நீள் நெருப்பில்***—பரிஶுத்₃த₄மான நிலாவாகிற பெருநெருப்பில், ***தம் உடலம் வேவ தளராதார்***—தங்களுடைய ஶரீரம் வெந்துபோம்படி உருக்குலையாதவர்கள்; (இப்படிப்பட்ட அரஸிகர்கள் யாரென்னில்) ***காமவேள்***—மன்மதன், ***சிலை வாய் மன்னும் மலர் வாளி கோத்து எய்ய***—தனது வில்லிலே பொருந்திய புஷ்பபா₃ணங்களைத் தொடுத்துப் பிரயோகி₂க்கும்போதும் (இனி மடலூர்வதே புருஷார்த்த₂மென்று அறுதியிட்டு), ***பொன் நெடு வீதி புகாதார்***—அழகிய பெரிய வீதிகளிலே புறப்படாதவர்கள் எவரோ அவர்கள், ***தம் பூ அணைமேல்***—தங்களுடைய புஷ்பஶயனத்தின் மீது,

---

டாரமே உகுத்தானென்றிருக்கிருள். (தூநிலா) கொப்பளித்தபின்பு நிலவென்றறிந்தாள். (நீள்நெருப்பில்) தா₃ஹ்யம்

---

(உம்பர்வாய்த் துன்னுமதியுகுத்த தூநிலா நீணெருப்பில் தம்முடலம் வேவத் தளராதார்) மேலே நெருங்கின கிரணங்களையுடைய சந்த்₃ரனானவன், தன் கையில் நெருப்பைப் பிறர் கையில் பொகடுமாபோலே பொகட்ட மறுவற்ற நிலாவாகிற பெருநெருப்பில்; தா₃ஹ்யம் வேறேயாய், தான் தா₃ஹகமாயிருக்கையன்றிக்கே இரண்டும் தானேயாயிருக்கிற நெருப்புப்படச் செய்தே ஶரீரமானது த₃க்₃த₄மாகாநிற்க, அதுக்கு ஈடுபடாதார்.

---

**ஆகாயத்தைச் சொல்லுகிறது. (துன்னு மதி உகுத்த தூநிலா நீள் நெருப்பில்) நெருங்கிய கிரணங்களையுடைய சந்திரன் வெளிவிட்ட தூயநிலாவாகிற கொடிய நெருப்பில். (மதி உகுத்த தூநிலா நீள் நெருப்பு) தன்னைப்போலே சூடுபொறுக்கமாட்டாமல் சந்திரனும் தன் நீள்நெருப்புக் கிரணங்களைத் தன்னிடம் வைத்துக்கொள்ளாமல் வெளியே சிந்துகிருன் என்று நினைக்கிருள். (தூநிலா) தாபத்தினுல் கொப்பளிக்கச்செய்தபின்பு, ஆராய்ந்துபார்த்தால் கலப்பற்ற நிலவாயிருந்தது! (நீள் நெருப்பில்) எரிபொருளைச் சாம்பலாக்கிய பின்பும் தான் அணையாத நெருப்பு. (நெருப்பு-நீள் நெருப்பு) நெருப்பானது**

சமைந்தாலும் சமையாதொழிகை. அக்ⁿிகணம் நிலவென்னும்படி சுடுகை. கேவலாக்ⁿி தாஹிப்பது ஶரீரத்தையிறே. இது ஆத்மாவை தாஹிக்கையாலே "நீள் நெருப்பு" என்கிறாள். நீருக்கு அவியாதே * நீர்வண்ணனே அவிக்கவேண்டியிருக்கை. (தம்முடலம் வேவத் தளராதார்) இரவலுடம்பல்லவே. தம்முடலம் வேவ தாரிப்பாருண்டாகாதே! § உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும் பழுதேயாமுணர்வைப் பெற்றிருக்கிறாருமல்லரே.

(காமவேளித்யாதி) காமனுடைய சிலையிடத்துப் பொருந்தியிருந்துள்ள புஷ்பபாணங்களைத் தொடுத்தெய்ய,

/ [அல்ப கலஹந் தன்னிலேயும் வந்தால், "ஸ்ருஷ்டஸ்த்வம்" (*ஸ்ருஷ்டஸ்த்வம்*) என்கிற ப்ரகரணத்திலே மிக்க நெருப்புண்டாகில், அப்படிப் பண்ணுவதில்லையாகில் தேடிக்கொண்டு வந்து செய்யவேண்டுவதில்லை.] இத்தால்—அதாஹ்ய வஸ்து படுகிறபடி. நீர் சுட்டால் ஆற்றலாவதில்லையே.

(காமவேள் மன்னும் சிலைவாய் மலர்வாளி கோத்தெய்ய பொன்னெடு வீதி புகாதார்) காமனென்கிற தேவதை சிறிதுபோது

---

குளிர்ந்தது என்று சொல்லலாம், இந்நிலவின் வெம்மையை நோக்கும்போது; நெருப்பு நிலவாகிறது; நிலவு நீள்நெருப்பாகிறது. அந்நெருப்பு ஶரீரத்தைத்தான் எரிக்கும்; இது அதாஹ்யமான ஆத்மாவையும் தாஹிக்கையாலே 'நீள் நெருப்பு' என்கிறாள்; அந்நெருப்பு நீருக்கு அவியும்; இது அதற்கும் அவியாது; * நீர் வண்ணனே வந்து அவிக்கவேணும். அத்தாலும் இது நீள் நெருப்பு. (தம்முடலம் வேவத் தளராதார்) இரவலுடம்பல்லவே தளராமலிருப்பதற்கு! தம்முடம்பாயிற்றே! அது வேகும்போதும் தளராமல் தரித்து நிற்பதே!

"உணர்வுமுயிருமுடம்பும் மற்று உலப்பிலனவும் பழுதேயாம் உணர்வைப்பெற" [திருவாய் 8-8-3]

என்ற ஆழ்வாரைப்போலே உடம்பை வெறுத்திருக்கும் அறிவைப் பெற்றிருப்பவர்களும் அல்லவே. உடம்பைப் பேணியிருப்பவர்களாயிற்றே.

(காமவேள் சிலைவாய் மன்னும் மலர்வாளி கோத்தெய்ய பொன்னெடு வீதி புகாதார்) மந்மதன் தன் கரும்புச்சிலைக்குப்

---

 * திருநெடு-18. § திருவாய் 8-8-3. / [ ] விளக்கவில்லை.

**சின்ன மலர்க்குழலு மல்குலு மென்முலையும் 45**
**இன்னிள வாடை தடவத்தாங் கண்டுயிலும்**

***சின்னம் மலர் குழலும்***—அப்போது விரிந்த புஷ்பங்களை யணிந்த கூந்தலையும், ***அல்குலும்*** — நிதம்ப,த்தையும், ***மென் முலையும்***—மெல்லிய முலையையும், ***இன் இள வாடை தடவ***— இனிதாய் இளையதாயுள்ள வாடைக் காற்றானது வந்து தடவ, ***கண் துயிலும்***—(ஆநந்த,மாகத்) தூங்குகின்ற;

---

அழகியதாய் நெடிதான வீதியிலே கையும் மடலுமாய்ப் புறப்படாதே, ஸ்த்ரீத்வம் நோக்கிப் படிகிடந்து புறப்படாதே அடைத்துக்கொண்டு உள்ளேயிருக்கவல்லவர்கள். பொன்-அழகு. மடலூருவாரை எதிர்கொள்ளும் வீதி. (புகாதார்)காம பா,ணங்கள் வாய்மடியும்படி கல்மதிளுக்குள்ளே புகாதார்.

---

வில்கொண்டு வ்யாபரித்துப் பின்னை நெருப்புச் சுட்டதென்று போகடுகையன்றிக்கே, கையிலே கொண்டிருக்கும்படி; வேறொன்று வேண்டாத வில்லிலே புஷ்பபா,ணங்களைத் தொடுத்துவிட, அதுக்கீடுபட்டுக் கையும் மடலுமாய்க் கொண்டு ஶ்லாக்,யமாய்ப் பெருத்திருக்கிற வீதியிலே புறப் படாதார். நெடுவீதி — இரண்டருகும் அறத் தையலார் பழி தூற்றும்படி பெருத்திருக்கை. திருநறையூர் திருவீதியிலே கையும் மடலுமாய்ப் போகாதார். திருநறையூரிலே புக்கா ரடங்கலும் தம்மைப்போலே மடலெடுக்கவேணுமென்றிருக் கிறார், * "நீணிலாமுற்றத்து நின்றிவள் நோக்கினான்".

---

**பொருத்தமானதான மலரம்புகளைத் தொடுத்து எய்தவுடன், அழகிய தாய் நீண்டதான வீதியிலே கையும் மடலுமாகப் புறப்படாமல் படிதாண்டாப் பத்தினித்தன்மை பாவித்துக்கொண்டு, கதவை யடைத்துக்கொண்டு உள்ளேயிருக்கவல்லவர்கள். பொன் வீதி – அழ கிய வீதி. மடலூருவாரை 'வருக வருக' என்று அழகைக்காட்டி அழைக்கும் வீதி. நெடு வீதி–கல்பகாலமெல்லாம் மடலூரலாம்படி நீண்டிருக்கும் வீதி. (புகாதார்) கதவையடைத்துக்கொண்டு உள்ளே யிருக்கும்வரையில் காமபாணங்கள் மேன்மேலும் விழுந்து துன்புறத் திக்கொண்டேதான் இருக்கும். அவை விழவொண்ணாதபடி பொன்**

---

* பெரிய திருமொழி 8-2-2.

( தம் பூவணை ) காந்தகரஸ்பர்ஶம்போலே தென்றல் ஸ்பர்ஶிக்கப் படுக்கைப் பொருந்திக் கிடக்கவல்லவர்கள். இருவர்க்குப் படுத்த படுக்கையிலே தனியே கிடக்க 'வல்ல வர்கள். ( பூவணை ) " மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளி " என்னுமாபோலே நெருப்பை உருக்கி வார்த்தாற்போலே யிருக்கை. (சின்னமலர்க்குழலும்) சின்னப்பூவையுடைத் தான குழலையும், இடையையும், முலையையும், அவன் தடவுமாபோலே 'நஞ்சூட்டின இளவாடை தடவ. (இள வாடை) பிறரை நலிய நலிய இளகிப்பதியாநின்றது.

---

(தம் பூவணைமேல்) இருவர்க்குப் படுத்த படுக்கையிலே தனியே பூவும் தாதும் சுண்ணமுமாகப் பரப்பிக்கொண்டு. ( சின்ன மலர்க்குழலும் ) பருவம் செய்கிற பூவையுடைய குழலும். சின்னம்—விரிகை. முடி நெகிழ்ந்த குழலென்னவுமாம். (அல்குலும் மென்முலையும்) விரஹஸஹமல்லாத முலை; மேலும் தென்றல்பட மாந்தும் முலை. (இன்னிள வாடை தடவ) காந்த

---

னொடு விதியாகிற கல்மதிலுக்குள்ளே போகமாட்டாத அறிவிலிகள் இவர்கள்.

(தம் பூவணைமேல்...பொன்னனையார்) வாடை தொடுவதைக் காதல னின் கைதொட்டாற்போலே நினைத்துக்கொண்டு பூப்படுக்கையிலே பொருந்திப் படுக்கவல்ல ஸௌபாக்யவதிகள் அவர்கள்! (தம் பூவணைமேல்) காதலனைப் பிரிந்திருக்கும்போது தரைக்கிடை கிடக்க வேண்டியிருக்கத் தாமே பூப்படுக்கையை ஸித்தப்படுத்தி அதிலே கிடக்கிறவர்கள். (தம் பூவணை ) இருவருக்கு ஏற்பட்ட படுக்கையிலே தாம் தனியே கிடப்பவர்கள். (பூவணை) ''மென்மலர்ப்பள்ளி வெம் பள்ளி'' [திருவாய் 9—9—4] என்பதுபோலே எமக்கு நெருப்பை உருக்கி வார்த்தாற்போலே இருக்கிற படுக்கையிலே பொருந்தி யிருப்பதே! (சின்ன மலர்க்குழலும்) விரிந்த பூவையுடைய குழலையும். ''மலரிட்டு நாம் முடியோம்'' என்று அவன் சூட்டினாலொழியப் பூச்சூடமாட்டோம் என்றிருக்கவேண்டியவர்கள் பூச்சூடியிருப்பதே! சின்னம்-விரிகை. (குழலும் அல்குலும் மென்முலையும் இன்னிள வாடை தடவ) நாயகனானவன் ஒவ்வோரவயவத்தையும் தனித் தனியே தடவிக்கொடுக்கும்போது பெறும் இன்பத்தை இவ்வாடை யின் ஸ்பர்ஶத்திலேயும் பெறுவதே ! ( இன்னிள வாடை ) நஞ்சு

**பொன்னனையார் பின்னுந் திருவுறுக—போர்வேந்தன் 46**

***பொன் அனையார் தாம்***—ப₄ாக்₃யவதிகளானவர்கள், ***பின்னும் திரு உறுக***—மேன்மேலும் மேனியழகு மேலிட்டு விளங்கட்டும், ***போர் வேந்தன்***—போரில் புலியான இராமன்,

(தாம் கண் துயிலும்) கண் உறங்குகிறபோதே தம்மதன்று; இரவல் கண்ணாக வேணும். (பொன்னனையார்) நெருப்பிலே கிடந்து நிறம்பெறுவர்கள். காட்டுத்தீ கதுவிலும் உறங்கவல்ல ப₄ாக்₃யவதிகள். (பின்னும் திருவுறுக) அவர்களுக்கு நித்யமாகிடுக.

னுடைய கரஸ்பர்ஶத்துக்கு யோக்₃யமான இடங்களிலே தென்றல் வந்து தடவ, *"குன்றாடு பொழில் நுழைந்து" இத்யாதி₃. அதுக்கிருய்த்துக் கண்ணுறங்கவல்ல ஸாஹஸிகர்கள். இனிதாய் இளையதான வாடையானது காந்தனுடைய ஸமாதி₄யிலே வந்து ஸ்பர்ஶிக்க. (தாம் கண் துயிலும்) கெட்டேன், இரவல் கண்ணோ இவர்களுக்கு? (பொன்னனையார் பின்னும் திருவுறுக) பொன்னானது நெருப்பிலேயிட த₄ர்மிலோபமற அழுக்கற்று நிறம்பெறுமாபோலே, விரஹஸமயத்தில் ஸம்ஶ்லேஷஸமயத்தில் அநுகூலமான பதா₃ர்த்த₂ங்கள் முகங்காட்ட, அவற்றின் ஸந்நிதி₄யிலே முடியாது, அவற்றைக்

தடவின அம்புபோன்றது. (இளவாடை) பிறரைத் துன்புறுத்தத் துன்புறுத்த. இளமைமிக்குவரும் வாடை.

(தாம் கண்துயிலும்) காதலனைப் பிரிந்த தாமோ கண்துயில்வது? "பொருகயற்கண்ணிணை துஞ்சா" [நாச்-திரு 5-5] என்றிருக்க வேண்டாவோ? கண்ணுறங்குகையாலே இது அவர்களுடைய கண்ணன்றுபோலும்! இரவல் கண்ணாகவேயிருக்கவேண்டும். (பொன்னனையார்) பூம்பள்ளியாகிய நெருப்பிலே கிடந்து நிறம்பெறும் இவர்கள், நெருப்பிலே கிடந்து நிறம்பெறும் பொன்னை ஒத்தவர்களே! அல்லது, 'பொன்னனையார்' என்றது 'ஸௌபா₄க்₃யவதிகள்' என்னும் பொருளிலேயாகவுமாம். காட்டுத்தீ கொளுத்தினாலும் உறங்கவல்ல இவர்கள் உண்மையில் ஸௌபா₄க்₃யவதிகளே! என்று பரிஹஸிக்கிறார். (பின்னும் திருவுறுக) இந்த ஸௌபா₄க்₃யம் அவர்களுக்கு நித்யமாகச் செல்லட்டும்!

* பெரியாழ்வார் திருமொழி 4-8-9.

(போர்வேந்தன்) ஆண்புலி; ரணமுக₂ராமன். சக்ர வர்த்தியைக் கட்டிவைத்து ராஜ்யம் பண்ணவல்ல மிடுக்கு.

---

கொண்டு போதுபோக்கி ஸ்வரூபத்தைப்பெற்றிருக்கிறவர்கள்: "மடலெடுக்கும் நம்போல்வாரைப் போலன்றே" என்று அவர்களை நிந்தி₃த்து, தங்களுக்குமேல் வரக்கடவதான ஸம்பத்தை அநுப₄விக்க இருக்கிறவர்கள் அங்ஙனே இருந்திடுக என்கிறாள்.

அவர்கள் படி கிடக்கிடீர், நம்படியுடையார்படி கேட்கலாகாதோ? — ஸர்வஜ்ஞகுலத்திலே பிறந்தவளிறே இப்படி அநுஷ்டி₂க்கிறாள். தான் மடலூரவிறே ஒருப்பட்டது; அதுக்கு ஶிஷ்டாசாரமாக ஆசரித்தார்படி சொல்லப்புக்கு; முந்துறப் பிராட்டியைச் சொல்லுகிறாள். ஆசாரத்தில் வந்தால் முதலிலே எண்ணப்பட்டவளிறே; ஜநககுலத்திலே பிறந்தவளிறே. "**कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः**" ***(கர்மணைவ ஹி ஸம்ஸித்₃தி₄மாஸ்தி₂தா ஜநகாத₃ய:)*** என்கிறபடியே ஜ்ஞாநப்ராத₄ந்யம் கிடக்கச்செய்தே கர்மயோக₃த்தாலல்லது அபி₄மதஸித்₃தி₄யில்லாதாரைப் போலே அத்தை ஆத₃ரித்து அனுஷ்டி₂த்துக்கொண்டு போருவர்கள் ப₄க₃வத்₃ஆஜ்ஞாநுரூபமாக.

இவ்விடத்தை — நஞ்சீயர், ப₄ட்டர் ஸ்ரீபாத₃த்தை ஆஶ்ரயித்த அநந்தரம், "ப்ரபன்னனுக்கு இவை அநுஷ்டே₂யமோ, அன்றோ?" என்ன, "அநுஷ்டி₂க்கவுமாம், தவிரவுமாம்" என்ன; "இவன் செய்யுமாகில் தவிரவொண்ணாது, தவிருமாகில் செய்யப்படாது, இருந்தபடி என்?" என்ன, "நம்முடைய க்ரியாப₄ாக₃த்திலேயாதல், நம்முடைய நினைவாலேயாதல் வரக்கடவதன்றே, அவன் நினைவேயிறே எல்லாவற்றுக்கும் காரணம்" என்று அருளிச்செய்தார்.

இனி பெருமாள் பின்னே போன பிராட்டி படியைச் சொல்லப்புக்கு, அதுக்கு உறுப்பாகப் பெருமாள் நைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. (போர்வேந்தன்) சக்ரவர்த்தி

---

**(போர்வேந்தன்) போரில் பேராண்மைமிக்க புலியாயிருப்பவன்; ரணமுக₂ராமன் என்று அழைக்கப்படுபவன். (வேந்தன்) த₃ஶரத₂,**

## தன்னுடைய தாதை பணியா லரசொழிந்து

*தன்னுடைய தாதை பணியால்*—தன் தகப்பனுன தஶரதனுடைய சொற்படி, *அரசு ஒழிந்து*—ராஜ்யமாள்வதைத் தவிர்ந்து, (காட்டுக்குப் புறப்பட்டபோது)

---

ஸ்ரீபரதாழ்வான் தோஷப்ரகரணத்திலே **"न च राघवस्य"** (ந ச ராகவஸ்ய) என்று ஸப்தஸாலங்களையும் ஓரம்பாலே உருவ எய்தவர் இத்தைச் செய்திலர் என்று கருத்து. (தாதை

---

பெருமாளை, "காட்டேறப்போ" என்ன; இவ்வார்த்தை செவிப்பட்ட அநந்தரம், கடுகப் புறப்பட்டுக்கொடுநின்ற இந்த நைரபேக்ஷ்யத்தைச்சொல்லுகிறது, பிராட்டிபடியைச் சொல்லப்புக்கு பெருமாள்படியை ப்ரஸங்கிப்பானென்னென்னில், அதுதன்னிலே கால்தாழ்ந்து அதுதன்னையே முடிய நடத்து

---

**சக்ரவர்த்தியானவர் அரசாண்டபோதிலும், அவரையும் சும்மாயிருக்கவைத்து, தானே அரசாளவல்ல பலத்தையுடையவனுயிருந்தவன். ஸ்ரீபரதாழ்வான்**

*** "ந மந்தராயா ந ச மாதுரஸ்யா**
**தோஷோ ந ராஜ்ஞோ ந ச ராகவஸ்ய।**
**மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்**
**வநப்ரவேஶே ரகுநந்தநஸ்ய ॥"**

**[(ராமன் வனம் சென்றதற்குக் காரணம்) மந்தரை, என் தாயான இந்தக் கைகேயி, அரசரான தஶரதர், ராமபிரான் ஆகியவர்களுடைய குற்றமன்று. ரகுநந்தனன் வனம்புகுந்ததற்கு என் பாபமே காரணமாயிருந்தது] என்றவிடத்திலே தன் தோஷத்தைச் சொல்லிக்கொள்ளும்போது "ராமபிரான் வனம் சென்றது அவருடைய குற்றம் அன்று" என்றான். "ஏழு ஸாலமரங்களையும் ஓரம்பே உருவிச்செல்லும்படி அம்பெய்தவர், தனக்கு சக்தியில்லாமையால், அரசுதுறந்து காடுபுகுந்தார் என்று சொல்லமுடியாது" என்பது**

---

*** இந்த ஶ்லோகம் எவ்விடத்திலுள்ளதென்று தெரியவில்லை. இங்கு வ்யாக்யானத்தை நோக்கும்போது கிஷ்கிந்தாகாண்டத்திற்குப்பிறகு. பரதன் தன் தோஷத்தைச் சொல்லிக்கொள்ளும் ஓரிடத்திலே இருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.**

பணியால்) சக்ரவர்த்திஹ்ருத₃யம் பாராதே உக்திமாத்ரத்திலே. (அரசொழிந்து) வாடல்மாலையைப் பொகடுவாரைப் போலே தலைச்சுமையென்று திருவபி₄ஷேகத்தையொழிந்து.

---

கிறது. (தன்னுடைய தாதை) "பெருமாளாகிறார் நமக்கு இஷ்டவினியோகா₃ர்ஹரன்றே. ஆனபின்பு நாம் சொல்லிற்றுச் செய்வர்" என்று அவன் நெஞ்சிலே படும்படி அவன்பக்கல் ப்ரவணராயிருக்கை, *"தயரதற்கு மகன்" என்னக்கடவதிறே. (பணியால்) அவனுடைய நினைவளவும் போயிற்றிலர். "இவர் காட்டேறப் போகாதே, நம்மைக் காலிலும் கழுத்திலுமிட்டாகிலும் ராஜ்யம் பண்ணிறாகிலோ" என்றிறே அவனுக்கு நினைவு. (அரசொழிந்து) "நாட்டைவிட்டுக் காட்டேறப்போ" என்கிறபோது, "இத்தை விடுகிறோமே" என்று பின்னாட்டாதே, **"वनवासो महोदयः"** *(வநவாஸோ மஹோத₃ய:)* என்று வநவாஸமுக₂ராயிருக்கை. **"अभिषेकात्परं प्रियम्"** *(அபி₄ஷேகாத் பரம் ப்ரியம்)* என்னக்கடவதிறே. இவர் முடிசூட ஒருப்பட்டபோது இவர் முகத்திலே விகாஸமிருந்தபடி அழகியதாகக் கண்டோமிறே. இவர், இத்தைவிட்டுக் காட்டேறப் போக ஒருப்பட்டபோது முகத்திலுண்டான ஐஶ்வர்யம் ஒரு காலும் கண்டிலோம் என்றார்களிறே. சக்ரவர்த்தி, "காட்டேறப் போய்வாரீர்" என்ற அநந்தரம், "ஸ்வாதந்த்ர்ய ஹேதுவான இந்த ராஜ்யத்தைத் தவிரப் பெற்றோமிறே" என்று தலைச் சுமையைப் பொகட்டுப் போவாரைப்போலே பொகட்டுப்போனார். ஸ்ரீ ப₄ரதாழ்வான், "போரவேணும்" என்று காலைக்கட்டி நிர்ப₃ந்தி₄க்க, அப்போதும், ஒருசெவ்வி மாலையைச் சூடி செவ்வி கழிந்தவாறே பொகட்டுப் போவாரைப்போலேயாயிற்றுப் போனபடி. (பொன்னகரம்) அத்தே₃ஶத்துக்குப் போலியாயிருப்பதொரு தே₃ஶமுண்டே; அதுவுமொரு தே₃ஶமே!

---

**ப₄ரதனுடைய கருத்து. (தாதை பணியால்) த₃ஶரத₂சக்ரவர்த்தியின் நெஞ்சில் நினைவை நோக்காமல், அவருடைய வாய்மொழியை மாத்ரமே கொண்டு காடுபுகுந்தார். (அரசொழிந்து) வாடின மாலையைக் கழற்றி எறிவாரைப்போலே தலைச்சுமையென்று கிரீடத்தைக் கழற்றினார்.**

---

* திருவாய் 3-6-8.

**பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு 47**
**மன்னும் வளநாடு கைவிட்டு மாதிரங்கள்**

***பொன் நகரம்***—அழகிய அயோத்₄யாபுரியிலுள்ளாரடங்கலும், ***பின்னே புலம்ப***—(நீ காட்டுக்குப் போகேல் என்று) பின்னால் அழுதுகொண்டே வந்தபோதிலும், ***வலம் கொண்டு***—தான் கொண்ட உறுதியை விடாமற்கொண்டு, ***வளம் மன்னும் நாடு கைவிட்டு***—செல்வம் மிகுந்த கோசலநாட்டை உபேக்ஷித்து விட்டு,

---

(பொன்னகரம்) பொன்னுலகுக்கு ஒக்குங்காணும் திருவயோத்₄யை. அதுக்குக் காரணம்-ராமஸம்ஶ்லேஷைக ரஸராயிருக்கை. **"अपि वृक्षाः परिम्लानाः सपुष्पाङ्कुरकोरकाः" (அபி வ்ருக்ஷா: பரிம்லாநாஸ் ஸபுஷ்பாங்குர கோரகா:)** என்கிறபடியே ஸ்த₂ாவரங்களுட்பட ராமகு₃ணைகத₄ாரகமாயிறே யிருப்பது. (பின்னே புலம்ப) பிரியில் த₄ரியாதே பின்னே

---

(பொன்னகரம் பின்னே புலம்ப) ஊராக, "காட்டேறப் போகில் பிழையோம்" என்று பின்னே கூப்பிட. **"इहैव निधनम्"** ***(இஹைவ நித₄நம்)*** இத்யாதி₃. உயிரைப்போகட்டு, கேவல ஶரீரத்தைக் கொண்டு த₄ரித்திருக்கவென்றால் எங்ஙனே யிருக்கும்படி என்றார்களிறே.

**"राममेवानुपश्यच्च(गच्छच्च)मश्रुतिं चापि गच्छत"** ***(ராமமேவாநு பஶ்யத்₄வ(க₃ச்ச₂த்₄வ)மஶ்ருதிம் வாபி க₃ச்ச₂த)*** என்று பெருமாளைச் சிறிதிடம் பின்னே தொடர்ந்துபோக, அவர்

---

(பொன்னகரம்) "பொன்னுலகு" [திருவாய் 6-9-1] என்று சொல்லப்படும் அப்ராக்ருதமான ஸ்ரீவைகுண்ட₂த்தை ஒத்திருக்கும் திருவயோத்திமாநகரம். அதற்குக் காரணம் —நித்யமுக்தர்களைப் போலே ராமனோடு கலப்பதையே இன்பமாகக் கொண்டிருப்பர் அயோத்திமக்கள். "அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குர கோரகா:" [ரா-அ 59-9] [பூ, முளை, மொட்டு ஆகியவற்றோடு கூடிய மரங்களும் (ராமனைப் பிரிந்து) வாடின] என்கிறபடியே அயோத்தியில் தாவரங்களுங்கூட ராமகு₃ணத்தைக்கொண்டேயன்றோ உயிர்த₄ரித்தன. (பொன்னகரம் பின்னே புலம்ப)' அயோத்தி மக்கள்

தொடர்ந்து கூப்பிட. "சுற்றமெல்லாம் பின்தொடர". (வலங் கொண்டு) நீர்மையிட்டுப் பேணின பெருமாள் போக வல்லரான மிடுக்கு வலம்-ப₃லம். (மன்னும்) இவர்களுக்கு

---

வழிமாற்றிப் போனவாறே, மீண்டுவந்து தந்தாம் க்₃ருஹங் களிலே புகுரப் புக்கவாறே இவர்களைப்பார்த்து, "'பெரு மாளைக் காட்டேறப் பொகட்டுப் பின்னையும் இருந்தவர்கள் ஸ்த்ரீகள்' என்று எங்களுக்கு ஒரு பழிவாராதே அவரை மீட்டுக் கொண்டுவருதல், அன்றியே, அவ்வழியே போய் உங்கள் பேரும் கேளாதொழியும்படியாதல் செய்யுங்கோள்" என்று முகத்திலே தள்ளிக் கதவடைத்தார்களிறே. **"पुत्रं प्रथमजं दृष्ट्वा (लब्ध्वा) जननी नाभ्यनन्दत"** *(புத்ரம் ப்ரத₂மஜம் த்₃ருஷ்ட்வா (லப்₃த்₄வா) ஜநநீ நாப்₄யநந்த₃த)* என்று 'முந்துறப் பிறந்தவனன்றோ, இவனும் காடேறப்போம் என்னும் நினை வாலே ப்ரத₂மஜனான புத்ரனைக் கண்ட தாய் உகந்திலள்' என்று இங்ஙனே சொல்லுவாருமுண்டு. "'பெருமாள் காட் டேறப்போனார். இனி ஆர்மடியிலே வைத்து உகக்கப்பிறந் தாய்' என்று தந்தாம் பிள்ளைகளை உகந்திலர்கள்" என்று ஜீயர் அருளிச்செய்வர்.

(வலங்கொண்டு) இவர்கள் இப்படிக் கூப்பிட்டுத் தொடராநிற்கச்செய்தேயும்; அதுகேட்டு இரங்காதே போன மிடுக்கு. (மன்னும் வளநாடு கைவிட்டு) க்ரமாக₃தமான

---

ராமபிரானைப்பிரிந்து த₄ரிக்கமாட்டாமல் அவர்பின்னே தொடர்ந்து, அழுதுகொண்டு கூப்பிட; "சுற்றமெலாம் பின்தொடரத் தொல்கானம் அடைந்தவனே!" [பெருமாள்-திரு 8-5] என்றாரன்றோ குலசேகரரும். (வலங்கொண்டு) நீர்மையை—ஸௌலப்₄ய மார்த்₃வாதிகு₃ணங் களை—வெளிப்படுத்தவென்றே பிறந்த பெருமாள், தனக்கு இனிய வர்களையெல்லாம் விட்டுப் போகவல்லவரான மனவுறுதியை வல மென்கிறது. வலம்—ப₃லம். (மன்னும் வளநாடு கைவிட்டு) முடி துறந்தானென்றாலும் நாட்டிலேயாவது இருந்தானோ? நாட்டையும் விட்டுக் காட்டுக்கன்றோ போனான். (மன்னும் வளநாடு) தனக்கு அரசநீதிமுறைப்படி உரியதாய், அயோத்தியிலும் இனிதான கோசலநாடு. (கைவிட்டு)

## மின்னுருவில் வெ(வி)ண்டேர் திரிந்து வெளிப்பட்டுக் 48
## கன்னிரைந்து தீய்ந்து கழையுடைந்து கால்சுழன்று

*மாதிரங்கள் மின் உருவில் வெண் தேர் திரிந்து*—திக்குகள் தோறும் மின்போன்ற கானலே பரவியிருக்கப் பெற்றதும், *வெளிப்பட்டு*—எல்லாம் ஶூந்ய ஸ்தூலமாகவுமிருக்கப்பெற்றதும், *கல் நிறைந்து தீய்ந்து கழை உடைந்து கால் சுழன்று*—கற்கள் நிறைந்து, (புற்கள்) கருகி, மூங்கில்கள் வெடித்து, சுழல் காற்று அடித்துக்கொண்டிருக்கப்பெற்றதும்,

---

க்ரமாகதமாய்,இவ்வூரில் இனிதான நாடு. "मम त्वश्वा निवृत्तस्य न प्रावर्तन्त वर्त्मनि। उष्णमश्रु विमुञ्चन्तो रामे संप्रस्थिते वनम्॥" (மம த்வஶ்வா நிவ்ருத்தஸ்ய ந ப்ராவர்த்தந்த வர்த்மநி। உஷ்ண மஶ்ரு விமுஞ்சந்தோ ராமே ஸம்ப்ரஸ்திதே வநம்॥) என்று இவையுமகப்பட நோவுபடப் போனபடி. "திரிந்தது வெம் சமத்துத் தேர்கடவி" இவனும் வநம்போவான்? இவனும்

---

யாலே ஸ்ப்ருஹைபண்ணக்கடவதாயிருக்கிற நாட்டை விட்டு. நித்யவிபூதியை விட்டுப் போந்தாற்போலேயோ? இத்தை விட்டால்,போய்ப் புகுகிற தேஶந்தான், இத்தோடு போலியா

---

"மம த்வஶ்வா நிவ்ருத்தஸ்ய ந ப்ராவர்த்தந்த வர்த்மநி।
உஷ்ணமஶ்ரு விமுஞ்சந்தோ ராமே ஸம்ப்ரஸ்திதே வநம்॥"

[(ராமனை விட்டுத்) திரும்பி வந்த என் குதிரைகள் வழியில் செல்லமாட்டாதவையாயின. ராமன் வனம் சென்றவளவில், அவையும் துன்பக் கண்ணீர் சொரிந்தன.] என்று சுமந்திரன் கூறிய படியே பிராணிகளும் துன்புறும்படியாகப் போனபடி.

"திரிந்தது வெஞ்சமத்துத் தேர் கடவி, அன்று
பிரிந்தது சீதையை மான் பின்போய்—புரிந்ததுவும்
கண்பள்ளி கொள்ள, அழகியதே நாகத்தின்
தண்பள்ளி கொள்வான் தனக்கு" [இர-திருவ-15]

என்ற பாடலிலே பூதத்தாழ்வாரைப் போன்ற பரிவுடையவர்கள்—இவனே காடுபுகுந்து சீதையைப் பிரிந்தான்!' 'ஶேஷஶயனனை

தரைகிடப்பான்? "எவ்வாறு நடந்தனை?" "கல்லணைமேல் கண் துயிலக் கற்றனையோ?" என்று வயிறு பிடிக்கும்படி. (மாதிரங்கள்) திக்குக்கள். (வெண்டேர்) பேய்த்தேர்; கானல். (வெளிப்பட்டு) கண்ணுக்கிட ஒரு பூண்டில்லாமை. தரை நிரந்தரமான கல்லாயிற்றுக்காணும்; சருகு போலே தீய்ந்துகிடக்கை. கழை-மூங்கில். கால்-சூறுவளி. அதாவது-சுழற்காற்று. (பேயே) மற்றொருவரில்லாமை.

---

யிருப்பதொரு தேசமாகப் பெற்றதோ?, — (மாதிரங்கள் மின்னுருவில் விண்டேர் திரிந்து) திக்குவிதிக்குக்களுடைய மின்னொளியோடொத்த ஒளியை உடைத்தாய்ப் பேய்த்தேரேயாய்க்கிடக்கும்.

(வெளிப்பட்டு) பேய்த்தேர் ஸஞ்சரிக்குமளவன்றிக்கே, கண்ணுக்கு விஷயமாய் ஓரிடத்தில் ஒதுங்க ஒரு சிறு தூறு மின்றிக்கே, கண்டவிடமெங்கும் வெளிநிலமாய். (கல் நிறைந்து) அவ்வளவன்றிக்கே, கற்களாலே நெருங்கி, அவை தான் கருநிலம்போலே ஓரிடங்களிலே வந்து திரளும்படி. (தீய்ந்து கழையுடைந்து) அங்குள்ள உஷ்ணத்தாலே பச்சை மூங்கில்கள் வெடித்தெரிய. (கால்சுழன்று) அடிக்கிறது சுழற்காற்றேயாய்; * "**रजो रणे**" (*ரஜோ ரணே*). (பின்னும் திரை

---

இவனோ தரையிலே கிடந்தான்!' என்று வயிறுபிடிக்கும் செயலன்றோ இது! "எவ்வாறு நடந்தனை எம்மிராமாவோ" [பெருமாள் திரு 9-2] "கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ காகுத்தா?" [பெருமாள் திரு 9-3] என்று அன்புடையாரனைவரும் வயிறெரியும்படியான காரியத்தையன்றோ செய்தது.

இனி, 'வெங்கானம்' என்பதுவரையில் காட்டுக்கு விசேஷணம். (மாதிரங்கள்) திக்குகளில். (மின்னுருவில் வெண்டேர்) மின்னல் போன்ற கானல்நீர். 'வெண்தேர்' என்றும், 'பேய்த்தேர்' என்றும் சொல்லப்படுவது கானல்நீர். (வெளிப்பட்டு) கண்டவிடமெல்லாம் ஒரு பூண்டில்லை; ஒரே வெளிநிலமாயிருக்கிறது. (கல் நிரைந்து) தரையெல்லாம் இடைவெளியில்லாமல் கல்நிரைந்து கிடக்கிறது. (கழை உடைந்து) மூங்கில்கள் வெப்பத்தாலே உடைந்து கிடக்கிறது. (கால் சுழன்று) சுழற்காற்று அடிக்கிறது. (பின்னும்) முன் சொன்ன

**பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக் 49**
**கொன்னவிலும் வெங்கானத் தூடு கொடுங்கதிரோன்**
**துன்னு வெயில்வறுத்த வெம்பரல்மேல் பஞ்சடியால் 50**
**மன்னன் இராமன்பின் வைதேவி யென்றுரைக்கும்**

***பின்னும்***—அதற்கு மேலும், ***திரை வயிறு பேயே திரிந்து***—(ஆஹாரமில்லாமையால்) உலர்ந்த வயிற்றையுடைய பேய்களே திரிந்து கொண்டிருக்கப்பெற்றதும், ***உலவா கொல் நவிலும்***-கொலையைப்பற்றின ஶப்₃த₃மே ஓயாது கிளம்பிக்கொண்டிருக்கப் பெற்றதுமான, ***வெம் கானத்தூடு***—வெவ்விய காட்டினுள்ளே, ***கொடு கதிரோன் துன்னு வெயில் வறுத்த வெம்பரல் மேல்*** — உஷ்ண கிரணனான ஸூர்யனுடைய வெய்யிலாலே வறுக்கப்பட்ட வெவ்விய பருக்கைக் கற்களின் மேலே (செல்லும்போது), ***வைதேவி என்று உரைக்கும்***—வைதே₃ஹீ என்று சொல்லப்பட்டவளாய்,

---

(உலவா) ஓவாதே "இன்னான் பட்டான், இன்னான் படாநின்றான்" என்னும் பேச்சேயாய்; அறக்கொடிதான காட்

---

வயிற்றுப் பேயே திரிந்துலவா) அங்கு ஸஞ்சரிக்கும் பேய்களானவை நினைத்தபடி ஜீவிக்கப்பெறாமையாலே நரம்புடைத்து, அவைதான் தன்னிலே பின்னி, பத்தெட்டு மட்டும் திரைந்து கிடக்குமாயிற்று. (பேயே திரிந்து) மநுஷ்யரும் கலந்து ஸஞ்சரிக்குமதின்றிக்கே, இப்படிப்பட்ட பேய்களே ஸஞ்சரிக்குமத்தனை. (உலவா) சிறிது காட்டிலேயோ? அப்பெருமாளும் பெருங்காட்டிலே போய்ப் புகாரென்னும்படி. (கொல்நவிலும்) அதுக்குமேலே "அவர் பட்டார்.

---

**தற்கு மேலே. (*திரை வயிற்றுப் பேயே திரிந்து*) உலர்ந்த வயிற்றையுடைய பேயே திரிந்துகொண்டிருக்கை. ஆஹாரமில்லாமையாலே பேய்களின் வயிறு உலர்ந்துகிடக்கை. 'பேயே' என்றதால் வேறு எந்த ஜந்துவுமில்லையென்கை. (*உலவாக் கொல் நவிலும்*) 'இவ்வனத்தில் புகுந்த இன்னான் இறந்தொழிந்தான்; இன்னான் உயிர் துடித்துக்கொண்டிருக்கிறான்' என்னும் பேச்சேயாயிருக்கிறது 'உலவா வெங்கானம்' என்றுமாம். ஓயாமல் நீளும் கொடுங்காடு**

டின் நடுவே. (கொடுங்கதிரோன்) கைகேயி பக்ஷத்தை ஆஸ்த்தாநம் பண்ணினான். வெய்யில் வறுத்த பரல் தானே எதிரிட்டு வெய்யில் வறுக்கவற்றாகை. ஆதித்யனை எற்றிவைத்து எரிக்கை.

(பஞ்சடி) மெத்தென்றிருந்த அடி. "**பத்மஸமப்ரபா**" (பத்ம ஸமப்ரபா). (மன்னன்) நாட்டுக்குச் சூடின முடி தவிர்ந்து இவளுக்கே சூடின முடி. சக்ரவர்த்தி தன்னை நீர்வார்க்கப்

---

இவர் பட்டார்" என்று கொலை சொல்லுகிற கூப்பீடேயா யிருக்கை. (வெம்கானத்தூடு) வெவ்விய காட்டூடே. [வெங் கானத்தூடு நடந்திலனே] என்று அந்வயம்.

(கொடுங்கதிரோன் துன்னு வெயில் வறுத்த) உஷ்ண கிரணனான ஆதித்யனுடைய நெருங்கின கிரணங்களை வறுக்கு மாயிற்று. (வெம் பரல்மேல்) அங்குண்டான வெவ்விய பரற் கற்களின்மேலே. (பஞ்சடியால்) அதிஸுகுமாரமான திருவடி களாலே. (மன்னன் இராமன் பின்) இக்காலைக்கொண்டு

---

"தே வநேஷு வாஸம் க்ருத்வா" [ரா-பா 1-30] என்றதன்றோ. (வெங்கானத் தூடு) மிகக்கொடியதான காட்டின் நடுவே (கொடுங்கதிரோன்) கைகேயியின் பக்ஷத்தைச் சார்ந்தவனானான். ராமபிரானைத் துன்புறுத்த வென்றே படைத்த கொடுங்கிரணங்களையுடையவனானான். (துன்னு வெயில்) நிறைந்த வெயில், (வெயில் வறுத்த வெம்பரல்) வெய்யில் பரல்கற்களை வறுக்கிறது; வறுக்க வறுக்க அது வெம்பரலாகி எதிரிட்டு வெய்யிலை வறுக்கவல்லதாகிறது; கடைசியில் சூரியனைக் கூட எதிரிட்டுக் கொளுத்தும் வெம்மையை உடையதாகிறது. (வெம் பரல்மேல்) அப்படிப்பட்ட வெம்பரல்மேலே

(பஞ்சடியால்) பஞ்சுபோலே மெத்தென்றிருக்கும் திருவடியாலே. "பத்மஸமப்ரபா" [ ] [தாமரைபோன்ற ஒளியையுடையவள்] என்கிறபடியே — ஒளி, மென்மை முதலிய குணங்களுக்குத் தாமரை, பஞ்சு முதலானவற்றையே உபமானமாகச் சொல்லவேண்டியிருக்கிற தன்றோ. (மன்னன்) நாடாகிய பூதேவியை ஆளச்சூடவிருந்த முடியை விட்டு, ஸ்ரீதேவியாகிய இவளையே ஆளக் காடுசென்றபடியாலே, இவளுக்கு மன்னனானது, காடுசென்றபோதே. "ஸ்ரீயமாநாம் ந து ததா,

**பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக்** 49
**கொன்னவிலும் வெங்கானத் தூடு கொடுங்கதிரோன்**
**துன்னு வெயில்வறுத்த வெம்பரல்மேல் பஞ்சடியால்** 50
**மன்ன னிராமன்பின் வைதேவி யென்றுரைக்கும்**

***பின்னும்***—அதற்கு மேலும், ***திரை வயிறு பேயே திரிந்து***—(ஆஹாரமில்லாமையால்) உலர்ந்த வயிற்றையுடைய பேய்களே திரிந்து கொண்டிருக்கப்பெற்றதும், ***உலவா கொல் நவிலும்***-கொலையைப்பற்றின ஶப்₃த₃மே ஓயாது கிளம்பிக்கொண்டிருக்கப் பெற்றதுமான, ***வெம் கானத்தூடு***—வெவ்விய காட்டினுள்ளே, ***கொடு கதிரோன் துன்னு வெயில் வறுத்த வெம்பரல் மேல்*** — உஷ்ண கிரணனை ஸூர்யனுடைய வெய்யிலாலே வறுக்கப்பட்ட வெவ்விய பருக்கைக் கற்களின் மேலே (செல்லும்போது), ***வைதேவி என்று உரைக்கும்***—வைதே₃ஹீ என்று சொல்லப்பட்டவளாய்,

---

(உலவா) ஓவாதே "இன்னான் பட்டான், இன்னான் படாநின்றான்" என்னும் பேச்சேயாய்; அறக்கொடிதான காட்

---

வயிற்றுப் பேயே திரிந்துலவா) அங்கு ஸஞ்சரிக்கும் பேய்களானவை நினைத்தபடி ஜீவிக்கப்பெறாமையாலே நரம்பு புடைத்து, அவைதான் தன்னிலே பின்னி, பத்தெட்டு மட்டும் திரைந்து கிடக்குமாயிற்று. (பேயே திரிந்து) மநுஷ்யரும் கலந்து ஸஞ்சரிக்குமதின்றிக்கே, இப்படிப்பட்ட பேய்களே ஸஞ்சரிக்குமத்தனை. (உலவா) சிறிது காட்டிலேயோ? அப்பெருமாளும் பெருங்காட்டிலே போய்ப் புகாரென்னும்படி. (கொல்நவிலும்) அதுக்குமேலே "அவர் பட்டார்.

---

தற்கு மேலே. (*திரை வயிற்றுப் பேயே திரிந்து*) உலர்ந்த வயிற்றையுடைய பேயே திரிந்துகொண்டிருக்கை. ஆஹாரமில்லாமையாலே பேய்களின் வயிறு உலர்ந்துகிடக்கை. 'பேயே' என்றதால் வேறு எந்த ஜந்துவுமில்லையென்கை. (*உலவாக் கொல் நவிலும்*) 'இவ்வனத்தில் புகுந்த இன்னான் இறந்தொழிந்தான்; இன்னான் உயிர் துடித்துக்கொண்டிருக்கிறான்' என்னும் பேச்சேயாயிருக்கிறது 'உலவா வெங்கானம்' என்றுமாம். ஓயாமல் நீளும் கொடுங்காடு

டின் நடுவே. (கொடுங்கதிரோன்) கைகேயி பக்ஷத்தை ஆஸ்த்தாநம் பண்ணினான். வெய்யில் வறுத்த பரல் தானே எதிரிட்டு வெய்யில் வறுக்கவற்றாகை. ஆதித்யனை எற்றிவைத்து எரிக்கை.

(பஞ்சடி) மெத்தென்றிருந்த அடி. "**पद्मसमप्रभा**" (பத்மஸமப்ரபா). (மன்னன்) நாட்டுக்குச் சூடின முடி தவிர்ந்து இவளுக்கே சூடின முடி. சக்ரவர்த்தி தன்னை நீர்வார்க்கப்

---

இவர் பட்டார்" என்று கொலை சொல்லுகிற கூப்பீடேயாயிருக்கை. (வெம்கானத்தூடு) வெவ்விய காட்டூடே. [வெங்கானத்தூடு நடந்திலனே] என்று அந்வயம்.

(கொடுங்கதிரோன் துன்னு வெயில் வறுத்த) உஷ்ண கிரணனான ஆதித்யனுடைய நெருங்கின கிரணங்களை வறுக்குமாயிற்று. (வெம் பரல்மேல்) அங்குண்டான வெவ்விய பரற்கற்களின்மேலே. (பஞ்சடியால்) அதிஸுகுமாரமான திருவடிகளாலே. (மன்னன் இராமன் பின்) இக்காலைக்கொண்டு

---

"தே வநேஷ வாஸம் க்ருத்வா" [ரா-பா 1-30] என்றதன்றோ. (வெங்கானத்தூடு) மிகக்கொடியதான காட்டின் நடுவே (கொடுங்கதிரோன்) கைகேயியின் பக்ஷத்தைச் சார்ந்தவனானான். ராமபிரானைத் துன்புறுத்த வென்றே படைத்த கொடுங்கிரணங்களையுடையவனானான். (துன்னு வெயில்) நிறைந்த வெயில், (வெயில் வறுத்த வெம்பரல்) வெய்யில் பரல்கற்களை வறுக்கிறது; வறுக்க வறுக்க அது வெம்பரலாகி எதிரிட்டு வெய்யிலை வறுக்கவல்லதாகிறது; கடைசியில் சூரியனைக் கூட எதிரிட்டுக் கொளுத்தும் வெம்மையை உடையதாகிறது. (வெம் பரல்மேல்) அப்படிப்பட்ட வெம்பரல்மேலே

(பஞ்சடியால்) பஞ்சுபோலே மெத்தென்றிருக்கும் திருவடியாலே. "பத்மஸமப்ரபா" [ ] [தாமரைபோன்ற ஒளியையுடையவள்] என்கிறபடியே — ஒளி, மென்மை முதலிய குணங்களுக்குத் தாமரை, பஞ்சு முதலானவற்றையே உபமானமாகச் சொல்லவேண்டியிருக்கிறதன்றோ. (மன்னன்) நாடாகிய பூதேவியை ஆளச் சூடவிருந்த முடியை விட்டு, ஸ்ரீதேவியாகிய இவளையே ஆளக் காடுசென்றபடியாலே, இவளுக்கு மன்னனானது காடுசென்றபோதே. "தீயமாநாம் ந து ததா,

**அன்ன நடைய வணங்கு நடந்திலளே** 51

***அன்னம் நடைய அணங்கு*** — அன்னத்தின் நடைபோன்ற நடையையுடையளான ஸீதாபிராட்டியானவள், ***மன்னன் இராமன் பின்***—அந்த ஸ்ரீராம மஹாராஜன் பின்னே, ***பஞ்சு அடியால்*** — பஞ்சுபோல் மெல்லிய திருவடிகளாலே, ***நடந்திலளே***—தானும் நடந்து செல்லவில்லையா ?

---

புக, 'ஐயர் வந்தார்?' என்ன அதிலே தோற்றாற்போலே ராஜ்யத்தைப் பொகட்ட வேண்டப்பாட்டிலே தோற்றபடி. (இராமன்) பெருமாள் பின்போவார்க்கு இக்காடு அன்றாகில் எது கொள்ளவேணும்? (வைதேவி) அவனுக்குப் பிறந்தாளென்னும் வேண்டப்பாடு. (அன்னநடைய) நடை கண்

---

போம்படியான மதிப்பையும் அழகையுமுடையவனுடைய பின்னே. (வைதேவியென்றுரைக்கும்) விதேஹராஜனுடைய

---

**ப்ரதிஜக்ராஹ ராகவ:, அவிஜ்ஞாய பிதுஶ் சந்தம்" [ரா-அ 118.51] [நீர்வார்த்துக் கொடுக்கவிருந்த என்னை, தந்தையின் கருத்தறியாமல் ஏற்றுக்கொள்ளவில்லை ராமபிரான்.] என்று பிராட்டிதானே அருளிச் செய்தபடியே, தன்னை நீர்வார்க்கப்புகுந்தவுடன், 'எந்தையசர் வந்தாரோ?' என்று ராமபிரான் கேட்க, அந்தப் பித்ருபாரவஶ்யத்தைக் கண்டு அதற்குத்தான் தோற்றதுபோலே, ராஜ்யத்தைக் கைவிட்ட பெருமைக்குத் தோற்றபடியைச் சொல்லுகிறது 'மன்னன்' என்னும் பதம். (இராமன்) அனைவரையும் ரமிக்கச்செய்யும் இராமனாகிற இவன்பின்னே போவதாகில், இக்காட்டுக்கு மாத்திரமல்லாமல் எவ்விடத்துக்கும் செல்லலாமே; நரகத்துக்குக் கூடச்செல்லலாமே. "யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா" [ரா-அ 30-18] [உன்னோடு கூடியிருக்குமிருப்பே சுவர்க்கமாகும்; உன்னைப் பிரிந்திருப்பதே நரகமாகும்,] என்று சொன்னாளன்றோ. (வைதேவி) "எரியும் மிதிலையில் என்னதொன்றுமில்லை" என்ற விதேஹராஜனுடைய பெண்ணாகையாலே, நாடுவிட்டுக் காடுசெல்ல வல்ல பெருமையுடையவள் இவளும். (என்றுரைக்கும்) ஸ்ரீராமாயண மெல்லாமுரைக்கும். "ஸீதாயாஶ் சரிதம் மஹத்" [பால 2-41] என்று ஸீதாசரிதமென்றானன்றோ வால்மீகியும். (என்றுரைக்கும்) பெண்களுக்குத் திலகமாக உலகமெல்லாம் உரைக்கும்படி நின்றவள் என்றுமாம். (அன்ன நடைய) இவளுடைய அன்னநடையைக்கண்டால்.**

டால் மடலூரவேண்டும்படியிருக்கை. (அணங்கு) இவனைக் குறித்து அவள் தைவமென்னவேண்டும்படியாயிருக்கை. (நடந்திலளே) அவளும் கூடப் போனாளில்லையோ?

---

பெண்பிள்ளை என்று சொல்லும்படியிருக்கிற. (அன்ன நடைய) **"अग्रतस्ते गमिष्यामि"** *(அக்₃ரதஸ்தே க₃மிஷ்யாமி)* என்று முன்னே யிட்டுப்போன நாலடியும் அவர்க்கிருந்தபடி. (அணங்கு **"देवताभिस्समा"** *(தே₃வதாபி₄ஸ்ஸமா)* **"त्रयाणां भरतादीनां भ्रातॄणां देवता च या"** *'(த்ரயாணாம் ப₄ரதாதீ₃நாம் ப்₄ராத்ரூணாம் தே₃வதா ச யா)* என்கிறபடியே பிள்ளைகள் நால்வர்க்குமொக்கும் தே₃வதையாயிருக்குமிருப்பு; அதில் மந: காந்தையாயிருக்கு மது பெருமாளுக்கேயாயிற்று. (நடந்திலளே) அவள்போக்கு அடிக்கழஞ்சுபெற்றதில்லையோ?.

(பின்னுமித்யாதி₃) ஒரு க₃ந்த₄ர்வஸ்த்ரீயை ஒரு க₃ந்த₄ர்வன் விவாஹம் பண்ணிக்கொண்டுபோக, அவளுடைய ப்₄ராதா வந்து யுத்₃த₄ம்பண்ணி மீட்கப்பார்க்க, அவனுக்கு மீளாதே

---

ஸ்ரீராமபிரான் தானும் மடலூர வேண்டும்படியாயிருக்கை. (அணங்கு) "குருமணங்கும் தெய்வப்பெண்ணே" என்று நிக₄ண்டு. "தஸ்ய பூ₄யோ விசேஷேண மைதி₂லீ ஜநகாத்மஜா தே₃வதாபி₄ஸ் ஸமா" [ரா-பா₃ 77-35] [ஜநகபுத்திரியான மைதி₂லி ராமபிரானுக்கும் விசேஷமாக தே₃வதைகளோடு ஒத்திருந்தாள்.] "த்ரயாணாம் ப₄ரதாதீ₃நாம் ப்₄ராத்ருணாம் தே₃வதா ச யா" [ரா-ஸு 55-26] [ப₄ரதன் முதலாகிய மூன்று ப்₄ராதாக்களுக்கும் எவள் தெய்வமோ] "சீதை யென்பதோர் தெய்வம்" [பெரியதிரு 10-2-5] என்கிறபடியே மற்றுள்ளாரோடு, ஸ்ரீராமபிரானோடு வாசியில்லாமல் அனைவர்க்கும் தெய்வமாயிருப்பவள். (நடந்திலளே) அப்படிப்பட்ட பெருமையுடையவளுமல்லவோ கூட நடந்து சென்றாள். ஸர்வலோக மாதாவான அவளே தன் ஸ்வரூபத்தை நோக்காமல், திர்ப்பூ₄ந்தி₃த்துக் காடு சென்றுளளவில், தம்மைப்போல்வார் அவளைப்பெறுதபோது மடலெடுப்பதில் தவறென்ன?

(பினனும்...புணர்ந்திலளே) "ஒரு க₃ந்த₄ர்வஸ்த்ரீயை ஒரு க₃ந்த₄ர்வன் விவாஹம் பண்ணிக்கொண்டுபோக, அவளுடைய ப்₄ராதா வந்து யுத்₃த₄ம் பண்ணி மீட்கப்பார்க்க, அவனுக்கு மீளாதே, அந்த

**பின்னுங் கருநெடுங்கண் செவ்வாய்ப் பிணைநோக்கின்
மின்னனைய நுண்மருங்குல் வேகவதி யென்றுரைக்கும்52**

***பின்னும்***—அது தவிரவும், ***கரு நெடு கண் செம் வாய் பிணை நோக்கின் மின் அனைய நுண் மருங்குல்***—கறுத்து நீண்ட கண்களையும், சிவந்த வாயையும், மான்போன்ற நோக்கையும், மின்போல் நுண்ணிய இடையையும் உடையவளாய், ***வேகவ்தி என்று உரைக்கும்***—வேகவதியென்று சொல்லப்படுபவளான,

(பின்னும்) பிராட்டியைப் பேசின வாயாலே பின்னையும் பேசலாவாளொருத்தி.

அந்த கந்தர்வனோடே போய்த் தானும் அவனுமாக அநுபவித்தாளென்று மஹாபாரதத்திலே ஒரு கதையுண்டு, அத்தைச் சொல்லுகிறது—(பின்னுமித்யாதி) முதலில் பிராட்டியைச்சொன்னால், பின்னைச்சொல்லுவாரின்றிக்கேயிருக்க. அநந்தரம் சொல்லலாம்படியான கீர்த்தியையுடையாளொருத்தியாயிற்று இவள். (கருநெடுங்கண்) அஸிதேக்ஷணை என்றிறே பிராட்டி திருக்கண்ணுக்கு ஏற்றம். அவளில் இவளுக்குக் கண்ணில் பரப்பு ஏற்றமாயிருக்கும். (செவ்வாய்) ரக்ஷகனையும் கூட, "जगत् सशैलं परिवर्तयाम्यहम्" (ஜகத் ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம்) என்னப்பண்ணின ஸ்மிதத்துக்குப் போலியா

கந்தர்வனோடேபோய்த் தானும் அவனுமாக அநுபவித்தாள் என்று மஹாபாரதத்திலே ஒரு கதையுண்டு; அதைச் சொல்லுகிறது" என்று அழகியமணவாளப்பெருமாள் நாயனார் தாமருளிச்செய்த பெரிய திருமடல் வ்யாக்யானத்திலே அருளிச்செய்வர். (பின்னும்) பிராட்டியைப் பேசின வாயாலே மறுபடியும் பேசத்தக்க பெருமையையுடையவளொருத்தி. (கருநெடுங்கண்) "அஸிதேக்ஷணா" [ரா-ஸு 16-5] "மையார் கருங்கண்ணி கமலமலர்மேல் செய்யாள்" [திருவாய் 9.4-1] என்று கருங்கண்ணையுடையவள் என்று பிராட்டிக்கு ஏற்றம். அவளைக்காட்டிலும் இவளுக்குக் கண்ணில் பரப்பு ஏற்றமாயிருக்கும். (செவ்வாய்) ஸர்வரக்ஷகனான அவனையும் "புரேவ மே சாருத்தீம்......ஜகத் ஸஶைலம் பரிவர்த்தயாம்யஹம்" [ரா-ஆ 64-76] [அழகிய புன்சிரிப்பையுடைய சீதையை முன்போலவே என்னிடம் ஒப்புவிக்கவில்லையாகில், மலைகளோடுகூடிய உலகைப் புரட்டிவிடு

(கன்னி) அநுப₄வித்தவளல்லள். பிராட்டியைப்போலே "समा द्वादश तत्राहं राघवस्य निवेशने। भुञ्जानामानुषान् भोगान् सर्वकामसमृद्धिनी॥" (ஸமா த்₃வாத₃ஶ தத்ராஹம் ராக₄வஸ்ய நிவேஶநே। பு₄ஞ்ஜாநாமாநுஷாந் பே₄ாக₃ாந் ஸர்வகாம

---

யிருக்கை. (பிணைநோக்கின்) அரைக்ஷணம் பேரநிற்கில், "न जीवेयं क्षणमपि" (*ந ஜீவேயம் க்ஷணமபி*) என்னப் பண்ணும் நோக்குக்குப் போலியாயிருக்கை. (மின்னனைய நுண் மருங்குல்) நாயகனுக்கு எப்போதும் துணுக்குத் துணுக்கென்று தன்னோடே பணி போரும்படியாயிருக்கை. "सुमध्यमा" (*ஸுமத்₄யமா*) என்கிறவளுக்குப் போலியாயிருக்கை. (வேகவதியென்றுரைக்கும்) வேக₃வதி என்று சொல்லுகிற. ஸ்ரீராமாயணமாகப் பிராட்டி வ்ருத்தாந்தம் சொன்னாற்போலே, மஹாபா₄ரதமாகத் தன்னைச்சொல்லும்படியிருந்தவள். (கன்னி) "समा

---

வேண்-] என்று பிரிவிலே உலகைத் தலைகீழாக்கச் செய்யும் 'சுரிகுழல்கனிவாய்த்திரு' [பெரியதிரு 5-7-7] ஆன அவளுடைய புன்சிரிப்புக்குப் போலியாயிருக்கை. (பிணை நோக்கின்) அரை க்ஷணம் பிரிந்துநின்றால், "ந ஜீவேயம் க்ஷணமபி" [ரா-ஸு 96-10] [ஒரு கணமும் பிரியேன்] என்னப்பண்ணும் 'மானமரும் மென்னோக்கி' [பெரியதிரு 11-5-1] ஆன அவளுடைய நோக்கை ஒத்திருக்கை. (மின்னனைய நுண்மருங்குல்) "மின்னனைய நுண்மருங்குல் மெல்லியல்" [பெரியதிரு 3-9-5] என்றும், "ஸுமத்₄யமா" [ரா-ஆ 11-1] என்றும் சொல்லப்படும் அவளைப்போலே நாயகனுக்கு எப்போதும் 'இற்று விழுந்து விடுமோ?' எனும் ப₄யஸந்தே₃ஹஸ்த₂ானமாயிருக்கும் இடையையுடையவள் என்கை. (வேகவதியென்றுரைக்கும்) வேக₃வதியென்று சொல்லுகிற. "ஸ்ரீராமாயணமாகப் பிராட்டி வ்ருத்தாந்தம் சொன்னாற்போலே, மஹாபா₄ரதமாகத் தன்னைச் சொல்லும்படியிருந்தவள்" என்று நாயனார் அருளினார்.

(கன்னி) பனிரண்டாண்டு கூடியின்புற்ற பிராட்டி பின்தொடர்ந்தது ஒரு பெரிதல்ல; நாயகனோடு கூடியறியாத கன்னியான இவள் தமயனையும் எதிரிட்டு நாயகன் பின்சென்றதே அருஞ்செயல்.

"ஸமா த்₃வாத₃ஶ தத்ராஹம் ராக₄வஸ்ய நிவேஶநே।
பு₄ஞ்ஜாநாமாநுஷாந் பே₄ாக₃ாந் ஸர்வகாமஸம்ருத்₃தி₄நீ॥
[ரா-ஸு 33-17]

**கன்னிதன் இன்னுயிராங் காதலனைக் காணாது
தன்னுடைய முன்தோன்றல் கொண்டேகத்
தான்சென்றங்கு 53
அன்னவனை நோக்காதழித்துரப்பி வாளமருள்
கன்னவில்தோள் காளையைக் கைப்பிடித்து
மீண்டும்போய்ப் 54**

***கன்னி***—ஒருபெண்பிள்ளை, ***தன் இன் உயிர் காதலனை காணாது***—தனது இனிய உயிர்போன்ற கணவனைத் தான் காணவொட்டாமல், ***தன்னுடைய முன் தோன்றல் கொண்டு ஏக***—தனது தமையன் (தடுத்துத்) தன்னைக்கொண்டுபோக. ***அங்கு***—அவ்வவஸ்தை2யிலே, ***அன்னவனை***—அந்தத் தமையனை, ***நோக்காது***-லக்ஷ்யம்பண்ணாமல், ***அழித்து உரப்பி***-இழிவான சொற்களைச்சொல்லி அவனை இகழ்ந்து, ***தான் சென்று***-தான் ப3லாத்காரமாகப் புறப்பட்டுப்போய், ***வாள் அமருள்***-பெரிய போர்க்களத்திலே, ***கல் நவில் தோள் காளையை***-மலைபோல் திண்ணிய தோளையுடையனும், காளைபோல் செருக்குற்றிருப்பவனுமான தனது காதலனை, ***கைப்பிடித்து***—பாணிக்3ரஹணம் செய்துகொண்டு ***மீண்டும் போய்***—அங்கிருந்து இருப்பிடம் போய்ச்சேர்ந்து,

---

ஸம்ருத்3தி4நீ ||) என்றாற்போலே அநுப4வித்தவளல்லள். (முன்தோன்றல்) தமையன் "ஒட்டேன்" என்று இவளைக்

---

द्वादश तत्राहम्" (ஸமா த்3வாத3ஶ தத்ராஹம்) என்று பன்னிரண்டாண்டு கலந்தவள் அக்காலத்தின் சுவடறிந்து பின்தொடர்ந்துபோன போக்கை முதலிலே புறப்பட்டுப் போனவள். (தன் இன்னுயிராம் காதலனைக் காணாது) காலைப் பிடித்துத்தலையளவும் செல்லக் காதலையிட்டு நிரூபிக்கவேண்டும்படியிருக்கிறவனைக் காணாமையாலே, (தன்னுடைய முன்தோன்றல்

---

[பெருமாள் திருமாளிகையிலே பனிரண்டாண்டு அப்ராக்ருதபோ4கங்களை அநுப4வித்துக்கொண்டு எல்லாக்காமங்களும் ஈடேறப்பெற்றவளாயிருந்தேன்] என்ற பிராட்டியைப்போலே கலவியின்பம் பெற்றிராத கன்னியாயிருந்தவள். **(தன் இன்னுயிராம் காதலனைக் காணாது)** தனக்கு உயிரினும் இனியனாய், காதலே வடிவானவனான அவனைக் காணாதபடி. **(தன்னுடைய முன்தோன்றல் கொண்டேக) தன்னோடு**

கொண்டுபோக. (அழித்துரப்பி) ஸ்வயம்வரமும் நாமேயோ என்ருள் (கன்னவில் தோள்) ப்ருந்துவர்க்கத்தை அடங்க விட்டுப் பற்றலான தோள். (காளை) தோள் மிடுக்கும் வேண்டாதே பருவமே அமைந்திருக்கை. (கைப்

கொண்டேக) தன் பின்பிறந்தவனை நியமித்தாலுமின்றிக்கே, தனக்கு முன்னே பிறந்தவனுய், தன்னை நியமிக்க உரியனுன வன் கொண்டுபோக, (தான் சென்று) தான்போய், (அங்கு அன்னவனை) தான் போகிறவள் எனக்கு அறிவியாதே போவதே! என்று மீட்கப்புக்க ஸ்நேஹத்தையுடைய தமயனை. (நோக்காது) தமயன் என்று பாராதே. (அழித்து) ''इत्युक्त्वा परुषं वाक्यं'' *(இத்யுக்த்வா பருஷம் வாக்யம்)* என்கிற படியே அழித்து. (உரப்பி) வேருேர் ஆஸ்ரயத்துக்கு ஆகாதபடி பண்ணி, ஸ்வயம்வரம் புறம்பன்றிக்கே என் பக்கலிலேயா யற்றதோ என்று. (வாளமருள்) மதிப்புடைத்தான பூசலிலே. (கல்நவில் தோள் காளையை) கல்லென்று சொல்லப்படாநின்ற திண்ணிய தோளையுடையனுய், மேல் விழுந்து அணைக்க வேண்டும்படியான பருவத்தையுடையனுனவனை. (கைப்

**ஒரு வயிற்றிலே பிறந்த தமயன் இவள் காதலனேடு செல்வதைப் பொறுக்காமல், காதலனிடமிருந்து இவளைப் பிரித்துச்செல்ல. (தான் சென்று) தானே அவனை விட்டுப்போய். (அங்கு அன்னவனை நோக்காது) 'தான் போகிறவள் என்னிடம் சொல்லாமலும் போவதே!' என்று மீட்கப்புகுந்த ஸஹோதரபாஸமுடைய அவனையும் பாராமல். (அழித்து) கடுஞ்சொற்களைப்பேசி அவன் ஸ்வரூபத்தையழித்து. (உரப்பி) என் அன்பரிடமிருந்து என்னை நீ பிரிப்பதைப் பார்த்தால், நாமிருவருமே ஸ்வயம்வரம் செய்துகொள்ளலாம் என்று நீ நினைப்ப தாகத் தோன்றுகிறது. உடன்பிறந்த என்னை நீயே பெண்டாள நினைத்தாயா சண்டாளா—என்றுற்போலே கடுஞ்சொல்பேசி. (வாள மருள்) காதலனுக்கும் தமயனுக்கும் உண்டான பெரும்போரிலே. (கன்னவில்தோள் காளையைக் கைப்பிடித்து) தமயன் கையை உதறித் தன் காதலனைக் கைப்பிடித்தாள் கன்னி வேகவதி; (கல்நவில் தோள்) தமயன் முதலான உறவினர் அனைவரையும் விட்டுப் பற்ற லாம்படியான கல்போல் உறுதியுள்ள தோள். (காளை) தோள்பல மில்லாது போனுலும், பருவமே போதுமானதாயிருக்கிறது, இவன் பின்னே செல்வதற்கு. (கைப்பிடித்து) தனக்காக யுத்தத்திலே**

**பொன்னவிலு மாகம் புணர்ந்திலனே—பூங்கங்கை**
**முன்னம் புனல்பரக்கும் நன்னாடன் மின்னாடும் 55**

***பொன் நவிலும் ஆகம்***—(அக்காதலனுடைய) பொன் போன்ற மார்பிலே, ***புணர்ந்திலனே*** — அணையப் பெற்றாளில்லையோ? ***பூ கங்கை புனல் முன்னம் பரக்கும் நல் நாடன்***—அழகிய கங்கா நதியின் தீர்த்தம் முன்னே பெருகப்பெற்ற சிறந்த நாட்டுக்குத் தலைவனும், ***மின் ஆடும்*** — ஒளியையுடையதும்,

---

பிடித்து) யுத்தத்திலே எல்லாரும் காணப் பிடித்து. (பொன்னவிலுமாகம் புணர்ந்திலனே) ரத்தத்தின் மேலே

---

பிடித்து) தனக்காகப் பூசலிலே அம்பேற்ற(பெடுத்த)வனைக் கையாலே சென்று பிடித்து. (மீண்டும் போய்) மீண்டு தன்னிருப்பிலே போய். (பொன்னவிலும் ஆகம் புணர்ந்திலனே) "भर्तारं परिषस्वजे" (பர்த்தாரம் பரிஷஸ்வஜே) என்கிறபடியே ஸ்ப்ருஹணீயமான மார்விலே அணைத்தாளில்லையோ?.

(பூங்கங்கை) இப்படி அப்ரஸித்தனாயிருப்பானொருவனுக்கோ இவள் மடலெடுத்தது,? இரண்டருகும் பூத்த சோலை

---

**அம்பெடுத்தவன் கையை அனைவரும் காணப்பிடித்து. (மீண்டும் போய்) தமயனிடமிருந்து மீண்டு சென்று; மீண்டும் தன் இருப்பிடம் சென்று என்னவுமாம். (பொன்னவிலும் ஆகம் புணர்ந்திலனே) "பர்த்தாரம் பரிஷஸ்வஜே" [ரா-ஆ 30-39] [கணவனைத் தழுவினாள்] என்று. பிராட்டி கரவதத்தின்போது அம்புகளாயிரம்பட்ட திருமார்பைத் தன் திருமுலைத்தடங்களாலே தழுவிப் புண்ணாற்றியதுபோலே, சண்டையிலே தனக்காக அம்பேற்று, செம்பொன்னெனச் சிவந்திருக்கும் நாயகனுடைய மார்பிலே ரத்தத்தின் மேலே விழுந்து தழுவிப் புண்களுக்கு ஒத்தடங்கொடுத்தாள்.**

**(பூங்கங்கை முன்னம்...கேட்டறிவதில்லையே) நாககன்னிகையான உலூபியென்பவள், தீர்த்தயாத்திரை செய்யும் அர்ஜுனனை கங்கையில் நீராடும்போது கண்டு காமுற்று, அவனை நிர்ப்பந்தித்து இழுத்துச் சென்று தன் ஆசையைக் கூச்சமில்லாமல் அவனிடம் சொல்லி, அவனை அனுபவித்தாள் என்று. மஹாபாரதம் ஆதிபர்வம் இருநூற்று முப்பத்திரண்டாமத்தியாயத்தில் கூறப்பட்ட இதிஹாஸத்தை அநுஸந்திக்கிறார். (பூங்கங்கை) முன்கூறப்பட்ட வேகவதியின் காதலனைப் போலே அப்ரஸித்தனான ஒருவனுக்காகவோ இவள்**

விழுந்து தழுவினாள். பிராட்டி கூ₃ரவத₃த்தினன்று தழுவினாற்போலே.

---

யாய், பூக்கள் உதிர்ந்து கிடக்கையாலே வந்த அழகைச் சொல்லுதல், அன்றிக்கே, a "நலம் திகழ் சடையான்" இத்யாதி₃ யில் சொல்லுகிறபடியே, ருத்₃ரன் ஜடையிலுண்டான கொன்றை மலரும், ஸர்வேஶ்வரன் திருவடிகளிலுண்டான திருத்துழாயும் கலந்து வருகிற ஜலத்தை உடைத்தாகையாலே வந்த ப்ரப₄ாவத்தைச் சொல்லுதல். சதுர்முக₂ன், நினைவின்றிக்கேயிருக்கச்செய்தே திருவடி சென்று கிட்டினவாறே பார்த்தான்; த₄ர்மதத்வம் உருகி நீராயிருந்தது; அத்தாலே திருவடிகளை விளக்குகையாலே உண்டாய், ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே பிறந்து, ருத்₃ரனுடைய ஜடையிலே தங்கி வந்ததாயிற்று. b [கங்கை கங்கை என்று] "गङ्गा गङ्गेति" (க₃ங்கா₃ க₃ங்கே₃தி) என்கிற உக்திமாத்ரத்தாலே, "अवश्यमनुभोक्तव्यम्" (அவஶ்யமநுபே₄ாக்தவ்யம்) என்கிறபடியே அநுப₄வவிநாஶ்யமான கர்மங்களை அடையப் போக்காநின்றத்தால் வந்த அழகைச் சொல்லுதல். c "அற்புத முடைய ஐராவத மதமும் அவரிளம் படியர் ஒண்சாந்தும் கற்பக மலரும் கலந்திழி கங்கை" d "கரைமரம் சாடி" e "வடதிசை மதுரை" f "சதுர் முகன் கையில் சதுப்புயன் தாளில்" g "கான்றடம் பொழில் சூழ்" g "மூன்றெழுத்து", (முன்னம் புனல் பரக்கும்) ஸஹ்யத்திலே

---

மடலெடுத்தாள். ஸுப்ரஸித்₃த₄ ராஜகுலத்தோன்றலான அர்ஜுனனுக்காகவன்றோ இவன் மடலெடுத்தது. (பூங்கங்கை) இரண்டுகரையிலும் சோலைகளாய் பூக்கள் உதிர்ந்துகிடக்கும் கங்கை. "கான்தடம் பொழில்சூழ் கங்கை" [பெரியாழ்திரு 4·7·10] "கரைமரம் சாடிக் கடுத்திழி கங்கை" [4-7-9] என்றாரன்றோ. அன்றிக்கே, "நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும் நாரணன் பாதத்துழாயும் கலந்திழி புனலால் புகர்படு கங்கை" [4-7-2] என்கிறபடியே சங்கரன் சடைமலரையும் சதுப்புயன் தாள்மலரையும் ஏந்திவருவதைச் சொல்லுவதாகவுமாம். "கற்பகமலரும் கலந்திழி கங்கை" [4-7-7] ஆகையாலே சொல்லுகிறதாகவுமாம். (முன்னம் புனல் பரக்கும்) இமய

---

a பெரியாழ்திரு 4-7-2. b ஷை 4-7-1. c ஷை 4-7-7. d ஷை 4-7-9. e ஷை 4-7-9. f ஷை 4-7-3. g ஷை 4-7-10.

**கொன்னவிலும் நீள்வேல் குருக்கள் குலமதலை**
**தன்னிகரொன் றில்லாத வென்றித் தனஞ்சயனைப் 56**
**பன்னக ராயன் மடப்பாவை பாவை தன்**
**மன்னிய நாணச்சம் மடமென் றிவையகலத் 57**

*கொல் நவிலும் நீள் வேல்*-கொலைத் தொழிலைக் கற்றதும்,நீண்டது மான வேலாயுதத்தைக் கையிலே உடையவனும், *குருக்கள் குலம் மதலை* — குருராஜ வம்சத்தில் தோன்றினவனும், *தன் நிகர் ஒன்று இல்லாத வென்றி*—ஒப்பற்ற வெற்றி பொருந்தின வனுமான, ***தனஞ்சயனை*** — அர்ஜுநனை, ***பன்னகராயன் மடம் பாவை***—கௌரவ்யனென்னும் ஸர்ப்பராஜனுடைய மடமை பொருந்திய பெண்ணான உலூபியென்பவள், ***பாவை தன் மன்னிய நாண் அச்சம் மடம் என்று இவை அகல***—பெண்மைக் குப் பொருந்தின நாணம், மடம், அச்சம் முதலிய குணங்கள் நீங்கப்பெற்று,

---

(மின் ஆடும்) ஒளியையுடைத்தாய், ப்ரதிபக்ஷங்களை கண்டபோதே வயிறு அழுகும் நீள்வேல். (தன் நிகர்) வீரத்

---

அல்பஜலம் உண்[illegible]னாலும் முந்துறப் பரம்புவது இங்கே யாயிற்று. (நல்நாட்டின்) நாட்டினுடைய அழகு. அதாவது—நீர்வாய்ப்புண்டாய், அழகியதாயிருக்கை. இது—நாடிருந்தபடி. இனி அவன் தன்படி சொல்லுகிறது. (மின்னாடும் கொன்ன விலும் நீள்வேல்) மின்போலே அசைந்து வாராநிற்பதாய்க் கொலையைச் சொல்லாநிற்பதாய்,"**अवष्टभ्य महद्धनुः**" ***(அவஷ்டப்ய மஹத்தநு:)*** என்கிறபடியே அடக்கியாள வல்லார் அரிதா யிருக்கிற வேலையுடைய. (குருக்கள் குலமதலை) இது எல்

---

**மலையிலே சிறிது ஜலம் உண்டானாலும், அது முதலில் பாய்வது இவன் நாட்டிலேயாகும். தலைமடையாயிருக்கை. நீர்வளம் சொல்லு கிறது. (தன்னுடன்) நிலவளம் சொல்லுகிறது. இனி, கோன்வளம் சொல்லுகிறது: (மின் ஆடும் கொல்நவிலும் நீள்வேல்) மின்னல் போல் ஒளியையுடையதாய், மிக விரைவாக ஸஞ்சரிப்பதாய். எதிரி கள் காணும்போதே வயிறழுகிப்போகும்படியாகக் கொலையைக் கோட் சொல்லுவதாய், எதிரிகள் எங்கிருந்தாலும் அழிக்கலாம்படியான நீளத்தையுடைய வேல். (குருக்கள் குலமதலை) குருராஜகுலத்**

துக்கு எம்பெருமானுமெதிரன்று. (தனஞ்சயனை) ஊர்வசியை "தாய்" என்னவல்லவன். (மடப்பாவை) நாகராஜாவின் பெண்பிள்ளை. (பாவை) அவன் மகள். பாவையென்கிறது-ஸ்த்ரீத்வத்துக்கு அவ்வருகில்லாமை. (தன்) கடல் வற்றினாற்போலே ஸஹஜமான குணங்கள் குடநீர் வழிந்து

லாக் குருக்களுக்கும் உபலக்ஷணம். லோகத்துக்காக இவர்கள் குருக்களாய்த் திரிவர்கள். அவர்களில் வைத்துக்கொண்டு, "இக்ஷ்வாகுநாதன்" என்கிறபடியே அவர்கள் குலத்துக்கு ப்ரதானனாய்த் திரியுமவன். (தன்னிகரொன்றில்லாத) தனக்கு ஒப்பாரொருவருமில்லாத. மநுஷ்யத்வே பரத்வம் கூடின போது ஒப்பாகில் ஒப்பாமித்தனை. (வென்றித்தனஞ்சயனை) க்ருஷ்ணனும் வெற்றியில் தனக்கு ஒப்பில்லாத தநஞ்ஜயனை. (பன்னகராயன்) "பன்னகராயன்" என்றத்தை நீட்டி, "பன்னகராயன்" என்று கிடக்கிறது. பன்னகராஜனுடைய பெண்பிள்ளை. (மடப்பாவை) நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடையவள். (மன்னிய நாணச்சம் மடமென்றிவையகல) பிறந்த பின்பு உண்டானதன்றிக்கே, தர்மிப்ரயுக்தமாயிருந்துள்ள லஜ்ஜை

தோன்றல்; உலகிற்கெல்லாம் குருக்களாயிருப்பார்கள் அவர்கள். அவர்களுக்குள் முக்கியனாயிருப்பவனிவன். (தன்னிகர் ஒன்றில்லாத) வீரத்துக்குக் கண்ணனும் எதிரன்று என்னும்படியிருக்கை. (வென்றித் தனஞ்சயனை) வெற்றியல்லதறியாத அர்ஜுனனை. (தனஞ்சயனை) அர்த்த காமங்களை வென்றிருப்பவனை. தன்னை ஆசைப்பட்ட ஊர்வசியையும் 'தாய்' என்று கருதினானன்றோ. (பன்னகராயன் மடப்பாவை) பந்நகம்—பத்ப்யாம் ந கச்சதீதி பந்நக: [காலால் செல்லாதது] என்று பொருள்படும் பாம்பு; 'பன்னகராயன்' என்பது 'பன்னகராயன்' என்று நீண்டு கிடக்கிறது; பாம்புகளுக்கு அரசனுடைய பெண்மைமிக்க பெண்பிள்ளை. (மடப்பாவை) பெண்மையில், இவளிலும் சிறந்தாரில்லையென்கை. (பாவை தன் மன்னிய நாணச்சம் மடமென்றிவையகல) பிறந்தபின்பு உண்டானதன்றிக்கே, இயற்கையிலேயேயுள்ள நாணம், அச்சம், மடம், என்னும் குணங்கள் கடல் வற்றினதுபோலே அழிந்துபோக. நாணம்-பெண்மைக்குத் தகாத செயலில் மனமொடுங்கி நிற்பது. அச்சம்-அச்செயலை நினைத்தாலும் மனம் நடுங்குதல்; மடம் - எல்லாமறிந்தும் அறியாது போலிருத்தல்; பயிர்ப்பு-பிற புருஷர்களின் ஆடை முதலியன தம் மேலே பட்டாலும்

**தன்னுடைய கொங்கை முகநெரியத் தானவன்றன்**
**பொன்வரை யாகந் தழீஇக்கொண்டு போய்த்தனது 58**
**நன்னகரம் புக்கு நயந்தினிது வாழ்ந்ததுவும்**
**முன்னுரையிற் கேட்டறிவதில்லையே—சூழ்கடலுள் 59**
**பொன்னகரஞ் செற்ற புரந்தரனோ டேரொக்கும்**

***தன்னுடைய கொங்கை முகம் நெரிய*** — தனது கொங்கையின் முகம் நெறிக்கப்பெற்று, ***தான்***—(வெட்கத்தைவிட்டுத்) தானாகவே, ***அவன் தன்***—அவ்வர்ஜுநனுடைய, ***பொன் வரை ஆகம்***—அழகிய மலைபோன்ற மார்பை, ***தழீஇக்கொண்டு போய்***—ஆலிங்கநஞ் செய்துகொண்டு சென்று, ***தனது***—தன்னுடைய, ***நல் நகரம் போய் புக்கு*** — அழகான ஸ்தாநத்திலே (நாகலோகத்திலே) போய்ச்சேர்ந்து, ***நயந்து***—கொண்டாடி, ***இனிது வாழ்ந்ததுவும்*** — ஆநந்தமாக வாழ்ந்தாளென்பதையும், ***முன் உரையில் கேட்டு அறிவது இல்லையே***—மஹாபாரதத்தில் நீங்கள் கேட்டறிந்ததில்லையோ? ***சூழ் கடலுள்***—பரந்த கடலிலுள்ள, ***பொன் நகரம் செற்ற*** — ஹிரண்யாஸுரனுடைய நகரங்களை அழித்தவனான, ***புரந்தரனோடு ஏர் ஒக்கும்***—தேவேந்திரனோடு ஒத்த பெருமையுடையனும்,

---

போகை. (நல் நகரம்) உங்களைப்போலன்றியே மடலெடுப்

---

தொடக்க மானவற்றை ஸங்யஸித்துப்போக. (தன்னுடைய கொங்கை (முகம் நெரிய) தன்னுடைய முலை முகம் நெரியும்படி தான் ஒருதலைக்காமமாக. (தான் அவன்தன் பொன் வரையாகம் தழீஇக்கொண்டுபோய்) அவனுடைய பொன் போலே ச்லாக்யமான மார்வைத் தான் தழுவிக்கொண்டு போய். நாட்டார் ஊர்வசீஸாலோக்யத்துக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுவர்களாகில், அவன் தான் வந்து உபஸ்தா

---

**அருவருப்புக்கொள்ளுதல். நான் காவதான பயிர்ப்பை, கற்புடைய எந்தப் பெண்ணும் விடமுடியாதாகையாலே, இதை எடுக்கவில்லை. (தன்னுடைய கொங்கை முகம் நெரிய) தன்னுடைய முலை முகம் நெரியும்படி தான் ஒருதலைக்காமமாக. (தான் அவன்தன் பொன்வரையாகம் தழீஇக்கொண்டுபோய்) அவனுடைய பொன்மலை போன்ற மார்பை அவனிஸையாதபோதும்**

பாரைக் கொண்டாடும் ஊர். (நயந்து) கொண்டாடி; நித்ய ஸம்ஶ்லேஷம்பண்ணி. (முன்னுரை) புண்யத்துக்காகிலும் மஹாபாரதம் கேட்டறிவதில்லையோ ?

---

நம் (உபஸர்ப்பணம்) பண்ணும்படியான மார்விறே இவனது. (தனது நன்னகரம்) தன்னுடைய நல்ல நகரம். இவ்வூருக்கு ப்ரத்யாஸத்தியையுடைய ஊர் அது. மடலெடுப்பாரை விலக்கு வாருமின்றிக்கே; மடலெடுத்துத் தொடர்ந்து வருவார் திரள் கண்டு உகக்கும் ஊர். (நயந்து) நிரவதிகஸம்ஶ்லேஷத்தைப் பண்ணி. (இனிது வாழ்ந்ததுவும்) பழிசொல்லுவார் புகழுவா ராகச் சேர, தானும் அவனுமாய் அநுபவித்ததுவும். (முன்னுரை யில் கேட்டறிவதில்லையே) *"न कामतन्त्रे तव बुद्धिरस्ति" *(ந காம தந்த்ரே தவ புத்திரஸ்தி)* என்று காமதந்த்ரமறிந்திலிகோ ளாகில் தவிருகிறிகோள்; பாபம் போகைக்குப் பாவந மென்றாகிலும் மஹாபாரதம் கேட்டறியீர்களோ?

(சூழ்கடலித்யாதி) கடலுக்குள்ளேயான ஹிரண்யபுர வாஸிகளான ஆஸுரவர்க்கங்களை அழியச்செய்த இந்த்ரனே

---

தான் தழுவிக்கொண்டுபோய். (பொன் வரையாகம்) உலகிலுள்ளார் ஊர்வசியையடைய நோன்பு நோற்க, ஊர்வசியானவள் தான் இதைத் தழுவ ஆசைப்பட்டாளன்றே. (தனது நன்னகரம்) மடலெடுப்பதைத் தடுத்துக்கொண்டு இவ்வூரிலிருக்கும் உங்களைப்போலன்றியே, மட லெடுப்பாரைக் கொண்டாடும் தன்னுடைய நல்ல நகரம். (புக்கு) புகுந்து. (நயந்து) கொண்டாடி. நெடும்போது கூடியின்புற்று. (இனிது வாழ்ந்ததுவும்) உங்களைப்போலே தடைசெய்வார் ஒருவருமில்லாமல் தோழிமாரனைவரும் அவனையடைய வழிசொல்லுவாரும் புகழுவாரு மாகையாலே, இனிமை தவிர வேறில்லாமல் வாழப்பெற்றதையும். (முன்னுரையில் கேட்டறிவதில்லையே) காமசாஸ்திரம் கற்காவிடிலும் போகிறது; புண்ணியத்திற்காக இதிஹாஸமான மஹாபாரதம் கூடக் கேட்டதில்லையோ ? அது கேட்டிருந்தாலும் மடலெடுப்பதின் பெரு மையை அறிந்திருக்கலாமே.

(சூழ் கடலுள்...பேரின்பமெய்தினன்) பாணாஸுரனுடைய மகள் உஷையென்பவள், கண்ணபிரானின் பேரன் அநிருத்தனைக்கவர்ந்து சென்று அநுபவித்தபடியைப் பேசுகிறது.

(சூழ்கடலுள் பொன்னகரம் செற்ற புரந்தரன்) கடலுக்குள்ளே ஹிரண்யபுரவாஸிகளான அசுரர்களை அழித்துப் புரந்தரன் என்று

---

 * ரா-கி 33-55.

மன்னவன் வாண னவுணர்க்கு வாள்வேந்தன் 60
தன்னுடைய பாவை யுலகத்துத் தன்னொக்குங்
கன்னியரை யில்லாத காட்சியாள் தன்னுடைய 61
இன்னுயிர்த் தோழியா லெம்பெருமா னீன்றுழாய்
மன்னு மணிவரைத்தோள் மாயவன் பாவியேன் 62

*மன்னவன்*—ராஜாதிராஜனாயும், *அவுணர்க்கு வாள் வேந்தன்*—அசுரர்களுக்கு ஒளிபெற்ற தலைவனாயுமிருந்த, *வாணன் தன்னுடைய பாவை*—பாணாஸுரனுடைய மகளாய், *உலகத்து தன் ஒக்கும் கன்னியரை இல்லாத காட்சியாள்*—எவ்வுலகத்திலும் தன்னோடொத்த மாதர்கள் இல்லையென்னும்படி அழகிற் சிறந்தவளான உஷையென்பவள், *தன்னுடைய இன் உயிர் தோழியால்* — தனது ப்ராண ஸகியான சித்ரலேகையென்பவளைக்கொண்டு, *மன்னு மணிவரை தோள் மாயவன்*—இனிய திருத்துழாய் மாலையணிந்த ரத்னபர்வதம்போன்ற திருத்தோள்களையுடைய ஆச்சர்யபூதனும்,

---

(மாயவன்) ப்ரஸங்காத் நினைக்க, தாம் ஈடுபட்டபடியாலே ஆச்சர்யபூதனென்கிறார். (பாவியேன்) தம்மை

---

டொப்பானாய்த் தான் ராஜாவான பேர் கிடக்க அஞ்சவேண்டும்படியிருப்பானாய், அஸுரவர்க்கத்துக்கு நிர்வாஹகனுமாய், (பாவை இத்யாதி) லோகத்தில் தன் பருவத்தில் பெண்களில் தனக்கொப்பாரில்லாத தர்சநீயவிஷயம். (தன்னுடைய இன்னுயிர்த்தோழியால்) "தன் கையாலே" என்னுமாபோலே தனக்கு நற்சீவனானவளாலே, (எம்பெருமான் ஈன் துழாய்) "நிர்குண

---

**பெயர்பெற்ற இந்திரன். (புரந்தரனோடு ஏர் ஒக்கும் மன்னவன் வாணன்) இந்திரனை ஒத்த பெருமையை உடைய அரசர்க்கரசனான பாணாஸுரன். (அவுணர்க்கு வாள் வேந்தன்) அசுரகுலத்தலைவன். (தன்னுடைய பாவை) அவனுடைய புத்ரி. (உலகத்துத் தன்னொக்கும் கன்னியரையில்லாத காட்சியாள்) உலகத்தில் தன்னைப்போன்ற பருவமுடைய பெண்களில் தனக்கு ஒப்பாரில்லாத அழகையுடையவள். (தன்னுடைய இன்னுயிர்த் தோழியால்) தனக்கு வலது கை போன்றவளாய், உயிரில் இனியவளான சித்ரலேகையென்னும் தோழியாலே. (எம்பெருமான் ஈன் துழாய்) "'நிர்க்குணம் வஸ்து' என்றவர்**

அணைத்த தோளை நினைத்துக் கிடையாமை. (பாவியேன்) வழிபோவார் அடித்தபடி. ஆழங்காலிலே ஈடுபட்டு "பாவி

---

வஸ்து" என்றவர்களுக்கு, "ஸகுணம்" என்று சொல்லிவிடு கையன்றிக்கே, குணங்களிலே கால்தாழ்க்கப்பார்க்கும் ப்ராஷ்ய காரரைப்போலே, போனபடிசொல்ல என்றுபுக்குச் சொல்லவும் விடவும் மாட்டாமையாலே அங்கே ஆழங்கால்படுகிறுள். (எம்பெருமான் ஈன் துழாய் மன்னு மணிவரைத்தோள் மாய வன்) கையும் மடலுமாய்க்கொண்டு புறப்படும்படி, என்னை அநந்யார்ஹையாக்கினவனுடைய நிரதிசயபோக்யமான திருத் துழாய் பொருந்தியிருப்பதாய், ரத்நபர்வதம் போலேயிருக்கிற தோளழகையுடைய ஆஸ்சர்யபூதன். (பாவியேன்) அவனு மொரு தோழியைப் படைத்தாள், நானுமொரு தோழியைப் படைத்திருக்கிறேன், கொடுவந்து சேர்க்கும் தோழியாயிருந்

---

களுக்கு, 'ஸகுணம்' என்று சொல்லிவிடுகையன்றிக்கே, குணங் களிலே கால் தாழ்க்கப்பார்க்கும் பாஷ்யகாரரைப்போலே போனபடி சொல்ல என்று புக்குச் சொல்லவும் விடவும் மாட்டாமையாலே அங்கே ஆழங்காற்படுகிறுர்" என்று அழகியமணவாளப்பெருமாள் நாயனுர் அருளிச்செய்தார். (எம்பெருமான்) கையும் மடலுமாகப் புறப்படும்படி என்னை ஈடுபடுத்தி எழுதிக்கொண்டவனுடைய. (ஈன் துழாய் மன்னுமணி வரைத்தோள் மாயவன்) மிகவினிய திருத்துழாய் பொருந்தியிருக்கப்பெற்றதாய், நீலரத்தினமலை போலிருக்கும் தோளையுடைய ஆஸ்சர்யபூதன். (மாயவன்) வெறுத்திருக்கும் போதும் ப்ராஸங்கிகமாக நினைக்க நேர்ந்தவுடன் ஈடுபடுத்துகையாலே 'ஆஸ்சர்யபூதன்' என்கிறுர். 'கையும் மடலுமாயிருக்கும்போதும் ஈடுபடுத்துவதே! என்னிது மாயம்?' என்கிறுர்.

(பாவியேன்) தம்மை அணைத்த தோளை நினைத்துக் கிடைக்கப் பெருமையாலே, 'பாவியேன்' என்று தன்னைத் தானே நொந்து கொள்ளுகிறுன். அன்றிக்கே, 'ஈடுபட்டவுடன் காதலனைக் கொண்டு வந்த தோழியையுடைய உஷையன்றோ பாக்யவதி! மடலெடுக்கும் போதும் விலக்கும் தோழியரைப் பெற நான் என்ன பாவம் செய் தேனே' என்பதாகவும் கொள்ளலாம். 'மடலூரும் நெடுந்தெருவிலே போவாரெல்லாம் என்னை விலக்கியடிக்கிறுர்களே! என்ன பாவம் செய்தேனே?' என்றுமாம். பகவத்காமமாகிற ஆழ்ந்த மடுவிலே

**என்னை யிதுவிளைத்த ஈரிரண்டு மால்வரைத்தோள்**
**மன்னவன்றன் காதலனை மாயத்தாற்**
**கொண்டுபோய்க் 63**
**கன்னிதன் பால்வைக்க மற்றவனோ டெத்தனையோர்**
**மன்னிய பேரின்ப மெய்தினள்—மற்றிவைதான் 64**

***பாவியேன் என்னை இது விளைத்த ஈர் இரண்டு மால் வரை தோள்***—பாவியான என்னை இப்பாடுபடுத்துகின்ற பெரிய மலைபோன்ற நான்கு தோள்களையுடைய, ***மன்னவன்***—ராஜாதிராஜனுமான, ***எம்பெருமான் தன்***—கண்ணபிரானுடைய, ***காதலனை***—அன்புக்குரியவனான (பௌத்திரனான) அநிருத்தாழ்வானை, ***மாயத்தால் கொண்டுபோய் கன்னி தன்பால் வைக்க***—மாயத்தினால் எடுத்துக் கொண்டுவந்து தன்னிடத்தில் சேர்க்கப்பெற்று, ***மற்றவனோடு***—அநிருத்தனோடே, ***எத்தனை ஓர்***—பலவிதமாய் ஒப்பற்ற, ***மன்னிய பேர் இன்பம் எய்தினள்***—நிலைநின்ற பெரிய ஆனந்தத்தை அநுபவித்தாள்;

---

யேன்" என்கிறாள். (என்னையிது விளைத்த) இப்படி மடலெடுக்கப் பண்ணின. (ஈரிரண்டு) இவள் இப்படி படப்பட அவனுக்குத் தோள் பணைத்தபடி. (மன்னவன்றன் காதலனை) எம்பெருமானுடைய ஸ்நேஹத்தை ஒரு வடிவாக வகுத்த

---

தான் அவள். விலக்குமவர்களாயிருந்தார்களிவர்கள். (என்னை இது விளைத்த) இப்படி கையும் மடலுமாய்ப் புறப்படும்படி என்னைப் பண்ணின. (ஈரிரண்டு மால்வரைத்தோள்) இத்தலை மடலெடுக்கப்புக்கபின்பு அத்தலை பல்கினபடி. (மன்னவன் தன் காதலனை) புத்ரனிற்காட்டிலும் பௌத்ரன்பக்கலிலே

---

**அகப்பட்டுக் கரையேறி மடலூரமுடியாமல் 'பாவியேன் என் செய்வேன்?' என்பதாகவும் கொள்ளலாம். (என்னை இது விளைத்த) இப்படிக் கையும் மடலுமாக என்னைப் புறப்படும்படி செய்த. (ஈரிரண்டு மால் வரைத்தோள்) தான் படும் பாட்டைக் காணக்காண அவன்தோள்கள் பெருகிப் பணைக்கின்றன. (மன்னவன்) ''நாகணை மிசை நம்பரர் செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம்'' [நாச்-திரு 10-10] (மன்னவன் தன் காதலனை) புத்திரனிற்காட்டிலும், பேரனிடத்தில் அன்பு**

தென்னும்படியிருக்கும் பேரனான அநிருத்₃த₄ாழ்வான். (மாயத்தால்) "பெண்கள் களவு காண்பார்கள்" என்று காவலோடே கண்வளர்ந்தருளுகிறவனைப் பீட்கன்றுபோலே படுக்கையோடே கொடுபோந்தபடி. (கன்னி தன்பால் வைக்க) உஷை ஸ்வப்நத்திலே கண்டவனைச் சித்ரலேகை₄ எழுதிக்காட்டி, இவள் பக்கல் அவனை அவன்தானறியாமே கொடுவந்து வைத்தபடி. (எத்தனையித்யாதி₃) விலங்கிட்டு

---

ஸ்நேஹம் இரட்டித்திருக்குமிறே. (மாயத்தால் கொண்டுபோய்க் கன்னிதன்பால் வைக்க) நாட்டில் ஒருவரையொழியாமே எழுதிக்காட்ட, "இதுவன்று, இதுவன்று" என்றுபோந்து, க்ருஷ்ணன்பக்கலிலே வந்தவாறே, "இவனொரு பார்வையாயிருந்தான்" என்று, பின்பு அநிருத்₃த₄னைக்கண்டவாறே, "இவனிறே" என்ன, "இவனாகில் அரியனோ?" என்று அப்போதே யோக₃ப₃லத்தாலே போய்ப் படுக்கையோடே பீட்கன்றாக எடுத்துக்கொண்டுவந்து வைத்தாள். (மற்றவனோடு) இவளுக்கு ஸ்வப்நத்தில் கண்டு பிறந்த ஸ்நேஹமெல்லாம் அவனுக்கு இவளைக் கண்டவாறே பிறந்தது. (எத்தனையோர்

---

இருமடங்காயிருக்குமன்றோ. எம்பெருமானுடைய அன்பே ஒருவடிவெடுத்ததோ என்று நினைக்கும்படியான அநிருத்₃த₄ாழ்வானை. (மாயத்தால் கொண்டுபோய்) கனவிலே அநிருத்₃த₄னைக் கண்டாள் உஷை. தோழியிடம் சொன்னாள். உலகிலுள்ள அரசர்களையெல்லாம் சித்திரமாக எழுதிக்காட்டினாள் தோழி சித்திரலேகை₄. 'இவனன்று' 'இவனன்று' என்று கழித்தாள் அவள். கிருஷ்ணனை எழுதிக்காட்டினாள். 'ஒருவிதத்தில் இவனை ஒத்திருந்தான்; ஆனால் இளம் வயது' என்றாள்; அநிருத்₃த₄னை எழுதினவுடன் இவனேயென்றாள். உடனே யோக₃ப₃லத்தால் துவாரகை சென்று, "பெண்கள் களவாடி விடுவார்களோ" என்று காவலோடு கண்வளருமவனைப் படுக்கையோடே அன்றீன்ற இளங்கன்றைக் கொண்டுவருவதுபோலே அநாயாஸமாகக் கொண்டுவந்தாள். (கன்னிதன்பால் வைக்க) கனவில் கண்டவனையே நினைந்துருகும் கன்னியிடம், அவனுமறியாமல் அவனைக் கொண்டுவந்து வைக்க. (மற்றவனோடு) இவளுக்குக் கனவிலே அவனைக்கண்டு பிறந்த காதல், அவனுக்கு நேரிலே இவளைக் கண்டதும் பிறந்தது. (எத்தனையோர் மன்னிய பேரின்ப மெய்தினான்)

**என்னுலே கேட்டீரே ஏழைகா ளென்னுரைக்கேன்**
**மன்னு மலையரையன் பொற்பாவை வாணிலா 65**
**மின்னு மணிமுறுவல் செவ்வா யுமையென்னும்**

*ஏழைகாள்* — அறிவிலிகளே! *மற்று இவைதான் என்னுலே கேட்டீரே* — இன்னும் இப்படிப்பட்ட உதாஹரணங்களை என்னைக்கொண்டே கேட்கவிருக்கிறீர்களோ? *என் உரைக்கேன்* — (உங்களுக்கு) எவ்வளவு சொல்லுவேன்? (இன்னும் ஒரு உதாஹரணம் சொல்லுகிறேன் கேளுங்கள்:) *மன்னு மலை அரையன் பொன் பாவை*—அசைவிக்கவொண்ணுமல் நிலைநின்ற பர்வதராஜனான ஹிமவானுடைய சிறந்த பெண்ணாய், *வாள் நிலா மின்னு மணி முறுவல் செம் வாய்*— ஒளிபொருந்திய நிலாப்போல் விளங்குகின்ற அழகிய புன்னகையையுடைய சிவந்த அதரத்தையுடையளாய்,

---

வைத்ததும் கூடவாகையாலே அளவில்லாத ஸ்ஹஜமான பெரிய இன்பத்தை புஜித்தாள். (என் உரைக்கேன்) இவ்

---

மன்னிய பேரின்பமெய்தினள்) இருவர் காலிலும் விலங்கிட்டு வைக்கவும் அநுபவிக்கப்பெற்றிலர்களோ?

(மற்றிவைதான்) மடலூரவென்று ஒருப்பட்டு அது தானும் மாட்டாதபடி துர்பலையாயிருக்கிற என்னைக்கொண்டு இவை கேட்கவிருக்கிறிகோளிறே, (ஏழைகாள்) உங்கள் அறிவுகேடு இருந்தபடியென்! (என்னுரைக்கேன்?) நான்

---

**விஷயமறிந்த வாணன் அநிருத்தனை விலங்கிட்டு வைத்தபோதும், உஷையோடு கூடவே வைத்தபடியாலே, அளவற்றதாய், ஒப்பற்றதாய், இயற்கையானதாய், பெரியதான இன்பத்தை அவனோடு கூடி அடைந்தாள்.**

**(மற்றிவைதான் என்னுலே கேட்டீரே) மடலூர முற்பட்டு, அதற்கும் சக்தியற்று நிற்கும் என்னிடமிருந்தா இவைபோன்ற ஆயிரமாயிரம் கதைகளைக் கேட்க நினைத்திருக்கிறீர்கள்? (ஏழைகாள்) அறிவிலிகளே! இவளால் இது சொல்லி முடியாதென்பதையும் அறியவில்லையே நீங்கள். (என்னுரைக்கேன்) மடலெடுத்ததற்கு உதாஹரணங்களை**

வுதா₃ஹரணம் என்ஞல் சொல்லமுடியுமோ? (என்னுரைக் கேன்) என்ஞல் எவ்வளவு சொல்லலாவது? ஆகிலும் தவிர வொண்ணுதொன்று சொல்லக் கேளுங்கோளென்கிருள்.

(மன்னுமலேயரையன்) நாட்டுக்கு மச்சமாகப் பெண் பிள்ளை பெற்ற ப₄ாக்₃யவான். (வாணிலா) ஒளியையுடைய

---

வருந்திப் பாசுரமிட்டுச்சொல்ல ஒருப்பட்டேன் என்று பாசுர மிட்டுச்சொல்லுகிருள்.

(மன்னுமித்யாதி₃) அவன் மகளன்ருே? வடிவில்லேயோ? என்கிருள். 'லோகத்தில் மடலூர்ந்தார் ஆர்?' என்ருல், அவர் கள் இன்னுரென்று நிர்தே₃ஶிக்கலாம்படி பிள்ளைபெற்றுத்தந்த ஸ்ரீமான் கிடீர். (மன்னுமலேயரையன் பொற்பாவை) அடியில்லா தாள் ஒருத்தியோ மடலூர்ந்தாள்? அவன்மகளன்ருே? பெரியா ளொருத்தியன்ருே? (அரையன் பொற்பாவை) ஒரு நிர்வாஹ கன் பெண்பிள்ளையன்ருே? (பொற்பாவை) அதிஶ்லாக்₄யை யாய் நிருபாதி₄கஸ்த்ரீத்வத்தையுடையவள். (வாள் நிலா மின்னு மணி முறுவல்) வெறும் பாவை(பிறப்பே)யாய் வடி வழகுதான் இன்றிக்கேயிருக்கிறதோ? ஒளியையுடைத்தான

---

என்ஞல் சொல்லி முடியுமோ? எவ்வளவுதான் சொல்லுவேன்? ஆயி னும் கடைசியாக விடவொண்ணுத ஒருத₃ாஹரணம் சொல்லு கிறேன் கேளுங்கள் என்கிருள்.

(மன்னு மலேயரையன்) பொன்னின் மாற்றை அறிந்து கொள் வதற்காக மச்சப்பொன் எடுத்துவைப்பதுண்டு. அதுபோலே, உலகில் பெண்களுக்கெல்லாம் உதா₃ஹரணமாகத் திகழும் பெண்ணைப்பெற்ற ப₄ாக்₃யஶாலி. மடலூரும் பெண்களுக்கு எடுத்துக்காட்டாயிருக்கும் பெண்ணைப்பெற்ற ப₄ாக்₃யவான். (மன்னு மலேயரையன் பொற் பாவை) ஊர்பேர் தாய்தந்தை தெரியாத யதா₂ஜாதையொருத்தியோ மடலூர்ந்தாள்? உலகெல்லாமறியும் அவன் பெண்ணன்ருே. (அரையன் பொற்பாவை) ராஜகுலத்தில் பிறந்தவள் கிடீர்! (பொற் பாவை) மிகச்சிறந்தவளாய், பெண்மையால் நிரம்பியிருப்பவள். (வாணிலாமின்னு மணிமுறுவல்) பிறப்பாலும் கு₃ணத்தாலும் வந்த பெருமையேயாய், வடிவழகில்லாதவளோ மடலூர்ந்தாள்? ஒளி

**அன்ன நடைய வணங்கு நுடங்கிடைசேர்** 66
**பொன்னுடம்பு வாடப் புலனைந்தும் நொந்தகலத்**

***உமை என்னும்***—'உமா' என்னும் பெயரையுடைய, ***அன்னம் நடைய அணங்கு*** — அன்னநடையையுடையளான (பார்வதி யென்கிற) தெய்வப் பெண்ணானவள், ***தன்னுடைய கூழை***—தனது மயிர் முடியை, ***சடாபாரம் தான் தரித்து***—தானே ஜடாமண்டலமாக்கி தரித்துக்கொண்டு, ***நுடங்கு இடைசேர் பொன் உடம்பு வாட*** — துவண்ட இடையோடு சேர்ந்த அழகிய உடம்பு வாடவும், ***புலன் ஐந்தும் நொந்து அகல***—இந்திரியங்கள் ஐந்தும் வருந்தி நீங்கவும்,

---

நிலாப்போலே விளங்காநின்றுள்ள ஸ்ப்ருஹணீயமான

---

நிலாவைப் புறப்படவிடாநிற்பதாய், அழகியதாயிருந்துள்ள தந்த பங்க்தியையுடையளாய்; நிலாப்போலே மின்னாநின்ற முறுவலென்னவுமாம், நிலாப்போலேயும் மின்போலேயும் என்னவுமாம். (முறுவல்) இவளுடைய மந்தஸ்மிதத்துக்கு இலக்கானால் பிக்ஷுகனுடைய தாரித்ர்யம் போம்படியாயிருக்கை. (செவ்வாய்) இவ்வெண்மைக்குப் பரபாகமான அதரத்தில் பழுப்பையுடையளாயிருக்கை. (உமையென்னும்) இப்படி ப்ரஸித்தையாயிருப்பாளாய். (அன்ன நடைய) முன்னே

---

**பொருத்திய நிலாவைப்போலே மின்னும் (விளங்கும்) அழகிய முறுவலை யுடையவள்; வாண்நிலா மின்னு முறுவல்—பல்வரிசையில் வெண்மைமிக்க ஒளியைக்காட்டுகிறது. மணி முறுவல்-மணிபோல் ஆசைப்படத்தக்கது; அழகியது. நிலா—சந்திரன். நிலாவென்று சந்த்ரிகையை (சந்திரனின் ஒளியைக்) குறிப்பதாகக்கொண்டு, ஒளி பொருந்திய தொரு நிலவையே வெளிவிடும் முறுவல் என்றும் கொள்ளலாம். நிலாவைப்போலேயும், மின்னல்போலேயும், மணிபோலேயும் உள்ள பல்வரிசை என்றுமாம். (செவ்வாய்) பல்வரிசையின் வெண்மைக்குப் பரபாகச்சுவையை (வர்ணச்சேர்த்திரஸத்தை) அளிக்கும் சிவந்த வாயையுடையவள். (உமையென்னும்) இப்பெயராலே உலகெங்கும் பிரசித்திபெற்று விளங்குமவள். (மலையரையன் பொற்பாவை உமை யென்னும்) "உமாம் ஹைமவதீம்" [கேநோபநிஷத்] [இமவானின் புத்திரியான உமையை] என்று உபனிஷத்திலும் பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவளாக ஓதப்படுமவள். (அன்ன நடைய அணங்கு)**

முறுவல். (நொந்தகல) 'நாம் பட்டதோ!' என்று அகல.

---

நாலடி நடந்து காட்டினால், காந்தனுடைய ஸகலதாபங்களும் அறும்படியாயிருக்கை. (அணங்கு) தே₂வதையாக ப்ரஸித்₃தை₄. (நுடங்கிடைசேர்) பே₄ாக்தாவுக்கும் துணுக்குத் துணுக்கு என்னும்படியான இடையையும், அழகையும் உடையளாய். (பொன்னுடம்பு வாட) அவனுக்கு ஶ்லாக்₄யமான உடம்பானது ஆஶ்ரயத்தையிழந்த தளிர்போலே வாட. "வாடினேன்" என்று ஸ்வரூபாநுரூபமான வாட்டமன்றே. இரண்டும் விஷயாலாப₄த்தாலேயிறே. ஒன்று ப்ராக்ருதம்; ஒன்று அப்ராக்ருதம்: (புலன் ஐந்தும் நொந்தகல) இந்த்₃ரியங்கள் ஐந்தும் நொந்து, மீண்டு 'நாம் பட்டதோ!' என்று போக.

---

முன்னிலையில் நாலடி நடந்தால். நாயகனுடைய தாபங்களெல்லாம் தீரும்படியான அன்ன நடையாளன்றோ அவனுக்காக இப்பாடுபட்டாள். (அணங்கு) தேவஸ்திரீயன்றோ இதுபட்டது.

(நுடங்கிடைசேர் உடம்பு) துவண்ட இடையையுடைய உடம்பை யுடையவள். நாயகனுக்கும், 'ஒடிந்து விழுந்துவிடுமோ' என்னும் ப₄யத்தை விளைக்கும் இடையழகையுடையவள். (பொன்னுடம்பு வாட) அவனும் தன் உடம்பிலே பாதியாக்கிக் கொள்ளவேண்டும் பெருமையையுடைய அழகிய உடம்பு, அவனைப் பெருமையாலே மரத்தைப் பிரிந்த தளிர்போலே வாட. (புலன் ஐந்தும் நொந்தகல) இவளுடைய இந்திரியங்கள் ஐந்தும், 'கடுந்தவம்புரியும் இவளுடம் பிலே இருந்து இனி நம்மால் இப்பாடுபடமுடியாது' என்றெண்ணி இவளுடம்பை விட்டு அகல. உலகில் கடுந்தவம்புரிவாரும் சருகிலை முதலான சிலவற்றைத் தின்று ஶரீர இந்திரியங்களை த₄ரிக்கச் செய் வார்கள். இவள் அதுவும் வேண்டாதே தவம் செய்து 'அபர்ணை' [இலையும் வேண்டாதவள்] என்று பெயர்பெற்றாள்.

> "ஸ்வயம் விஶீர்ணத்₃ரும பர்ண வ்ருத்திதா
> பரா ஹி காஷ்ட₂ா தபஸஸ் தயா புந:।
> தத₃ப்யபாகீர்ணமத: ப்ரியம்வத₃ாம்
> வத₃ந்த்யபர்ணேதி ச தாம் புராவித₃:॥"

[குமாரஸம்ப₄வம் 5-28]

**தன்னுடைய கூழைச் சடாபாரந் தான்தரித்தாங்கு 67**
**அன்ன வருந்தவத்தி னூடுபோய் ஆயிரந்தோள்**

***அன்ன அரு தவத்தின் ஊடுபோய்***-அப்படிப்பட்ட அருமையான தபஸ்ஸைச் செய்து முடித்து (என்ன பயன்பெற்ருளெனில்)

---

(தன்னுடைய கூழைச் சடாபாரம் தான்தரித்து) பெருமாள் திருமுடியைப் புனைந்தாற்போலே ஜடை. (அரும் தவம்)

---

நாட்டில் தபஸ்ஸு பண்ணுவாரெல்லாம் ஶரீர த₄ாரணார்த்த₂மாகச் சருகு இலையை ப₄க்ஷித்தாயிற்று தபஸ்ஸு பண்ணுவது, அதுவேண்டா, இவள் அபர்ணையாகையாலே. இவள் அத்தையும் தவிருகையாலே இந்த்₃ரியங்களானவை போரநொந்து கூப்பிட்டு, இனி இவ்விடம் நமக்கு ஆஶ்ரயமல்லவென்று அகல. (தன்னுடைய கூழைச் சடாபாரம் தான் தரித்து) போ₄க்தாவானவனுடைய முன்பே ஒரு கால் குழலையலைத்தால், அவனுடைய ஸகல க்லேஶங்களும் தீரும்படியாயிருக்கிற மயிரை ஜடையாகத் தானே த₄ரித்து. (தான் தரித்து) வேறு சிலரன்றிக்கே தானே த₄ரித்து. (ஆங்கு) அவ்வவஸ்தை₂யில். (அன்ன) அப்படிப்பட்ட; இவளுடைய தபஸ்ஸின் க்ரௌர்யத்தை அநுஸந்தி₄த்து அப்படிப்பட்ட என்கிருள். இவளும். (அருந்தவத்தினூடு போய்) அப்படிப்பட்ட தபஸ்ஸென்னு

---

[தானாக விழும் சருகிலைகளைத் தின்று தவம் செய்வதே கடுந்தவமாகிறது. பார்வதியோவெனில் அதையும் வேண்டாதவளானுள். ஆகையினுல் முன்னேர்கள் அந்த இன்மொழியாளை 'அபர்ணு' என்று கூறுகின்றனர்] என்ருனன்றே காளிதா₃ஸன். இப்படி தவம் செய்ததால் புலனைந்தும் நொந்தகன்றதில் ஆச்சரியமென்ன? (தன்னுடைய கூழைச் சடாபாரம் தான் தரித்து) கூழை-மயிர்முடியைத் தானே சடையாக த₄ரித்துக்கொண்டு. வனம் சென்றபோது ராமபிரான் சடைத₄ரித்ததுபோலே த₄ரித்துக்கொண்டாள். (அன்ன அருந்தவம்) அப்படிப்பட்டது என்பதொழிய வேறு சொல்லலாவதொன்றில்லை; அப்படிச்சொல்லியும் திருப்தியில்லாமல் 'அருந்தவம்' என்கிறது. இத்தவத்தின் தன்மையைச் சொல்லப்புக்கால் வாய் வெந்துவிடும்; நினைத்தால் நெஞ்செரியும். (தவத்தினூடுபோய்) தவத்தின் நடுவிலே

"தபஸ்ஸு" என்ன வாய் வேண்டும். (ஊடுபோய்) அப்படிப் பட்ட தபஸ்ஸை முடிய நடந்து. (ஆயிரம் தோள்) இத்தலை இப்பாடுபட அத்தலை வளர்ந்தபடி. **"नैव दंशान्न मशकान्"** **(நைவ தம்ஶாந்ந மஶகாந்)** என்கிற ச்லோகத்தின்படியே

---

மதுக்கு மேற்பட வேறு பாசுரமின்றிக்கேயிருக்கப் பின்னையும், "அரும் தவம்" என்கிறாளிறே. (ஊடுபோய்) அந்த தபஸ்ஸு தன்னிலும் உபக்ரமித்ததாய் நின்றமாத்ரமோ? அதினுடைய முடிவளவும் போய். கையும் மடலுமாய்ப் போகாநின்றால், அவன் எதிரே வந்தாலும், "நான் தொடங்கினது தலைக்கட்டி யல்லது விடுவதில்லை" என்று எல்லையளவும் போய்; சென்றாங் கணைந்திலளே என்று அந்வயம். இவள் இப்படி அபிநி விஷ்டையாய் மடலெடுத்துக்கொண்டு புறப்படாநின்றாளாகில், காந்தனானவன் **"नैव दंशान्न मशकान्"** *(நைவ தம்ஶாந் ந மஶகாந்)* என்றிருந்தபடி எங்ஙனே! (ஆயிரம் தோள்) மஹிஷி இப்படி நோவுபடாநின்றால், தானும் ஆசைப் பாடாய் நோவுபடுகையன்றிக்கே, "நம்மைச் சிலர் ஆசைப் படப்பெற்றோம்" என்று தோள்கள் பணையாநிற்கும். தான் ஆசைப்படாநின்றால் அவனும் ஆசைப்பட்டு மேல் விழ வேண்டாவோ? இப்படி நொந்தால்தான் அவனுடம்பை

---

நாயகனைப்பெற்று, அதை நிறுத்த முடிந்ததோ? தவத்தை முழுவ தும் நடத்தினாள்.

இவள் இப்பாடுபட, அவனிருந்த நிலையைச் சொல்லுகிறது இனி: (ஆயிரம் தோள்) இவள் படப்பட அவன் பெருகிவளர்ந்தான்.

"நைவ தம்ஶாந் ந மஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந்।
ராகவோऽபநயேத் காத்ராத் தத்கதேநாந்தராத்மநா ॥"
[ரா-ஸு 36-42]

[சீதையினிடம் நெஞ்சு செலுத்தியிருக்கையாலே ராமபிரான், ஈக் களையும், கொசுக்களையும், புழுக்களையும், பாம்புகளையுங்கூடத் தன் திருமேனியிலிருந்து அகற்றுவதில்லை.] என்று சில நாட்கள் பிரிந் தால் படாதபாடு படும் அவனைப் போன்றவனல்லன். (மன்னு

**மன்னு கரதலங்கள் மட்டித்து மாதிரங்கள் 68**
**மின்னி யெரிவீச மேலெடுத்த சூழ்கழற்கால்**
**பொன்னுலக மேழுங் கடந்தும்பர் மேற்சிலும்ப 69**
**மன்னு குலவரையும் மாருதமுந் தாரகையும்**
**தன்னி னுடனே சுழலச் சுழன்றாடும் 70**

***ஆயிரம் தோள் மன்னு கரதலங்கள் மட்டித்து***—(சிவன் தனது) ஆயிரம் புஜங்கள் பொருந்திய கைகளைத் திசைகளிலே வ்யாபிக்கச்செய்து, ***மாதிரங்கள்***—திக்குகள், ***மின்னி எரி வீச***—மின்னி நெருப்புப்பொறி கிளம்பும்படியாக, ***மேல் எடுத்த***—மேற்புறமாகத் தூக்கின, ***கழல் சூழ் கால்***—வீரக்கழலணிந்த ஒரு பாதமானது, ***பொன் உலகம் ஏழும் கடந்து*** — அழகிய மேலுலகங்களையெல்லாம் தாண்டி, ***உம்பர் மேல் சிலும்ப***—மேலே மேலே நீளும்படியாக (ஒற்றைக்காலை உயரத் தூக்கி), ***மன்னு குலம் வரையும் மாருதமும் தாரகையும் தன்னினுடனே சுழல***—நிலையாக நிற்கிற குலபர்வதங்களும், காற்றும், நக்ஷத்திரங்களும் தன்னோடு கூடவே சுழன்றுவர, ***சுழன்று ஆடும்***—தான் சுழன்று நடனமாடுபவனும்,

---

படுமவனல்லன் என்கை. (மட்டித்து) திக்குக்களிலே

---

அணையப்பெற்றதோ? (மன்னுகரதலங்கள் மட்டித்து) இவன் ஆடுகிறபோது தோள்களாயிரமும் திக்குக்களிலே சென்று அறையும். (மாதிரங்கள் மின்னி யெரிவீச) அப்போது அந்த திக்குக்கள் பொறியும் புகையுமெழுந்து நெருப்பைப் புறப் படவிடாநிற்கும். (மேலெடுத்த இத்யாதி) ஆடுகிறபோது மேலேயெடுத்த வீரக்கழலாலே சூழப்பட்ட கால், திக்குக்க ளெங்கும் வ்யாபரியாநிற்கும். மஹிஷியானவள் தன்னை

---

**கரதலங்கள் மட்டித்து) இவன் ஆடுகிறபோது கைகளாயிரமும் திக்குகளிலே சென்று மோதின. (மாதிரங்கள் மின்னி எரி வீச) அதனாலே திக்குகள் எங்கும் தீப்பொறியும் புகையுமெழுந்து நெருப்பை வெளிவிடுகின்றன. (மேலெடுத்த சூழ் கழல்கால்) ஆடும் போது மேலே தூக்கப்பட்டதும், வீரக்கழலால் சூழப்பட்டதுமான கால். நாயகியானவள் தன்னை விரும்பி நோவுபட, தான் காலி**

செல்ல. (பொன்னுலகம்) திருவுலகளந்தருளின தே₃ஶமெல்லாம் உபஹதமாகும்படி. (சிலும்ப) கிடந்தவிடத்தில் கிடவாதொழிகை. குலவரையுள்ளிட்ட பதா₂ர்த்த₂ங்கள் எல்லாம் புன்னைப் பூப்போலே சுழன்றுவா. (கொல் நவிலும்)

---

ஆசைப்பட்டு நோவுபடாநிற்க, தான் காலேபிடித்துத் தலையளவும் செல்ல ஆப₄ரணமணியும். (சூழ் கழற்கால்) சுற்றின கால் என்னவுமாம். (பொன்னுலகமித்யாதி₃) ஶ்லாக்₄யமான பே₄ாக₃பூ₄மிகளேழையும் கடந்து. (உம்பர்மேல் சிலும்ப) மேலுள்ள தே₃வஜாதி 'என்னாய் விளைகிறதோ?' என்று அஞ்சும்படி. (மன்னு குலவரையும்) பூ₄மிக்கு ஆணியடித்தாற்போலே நிற்கிற குலபர்வதங்களும். (மாருதமும்) ப்ரஜைகள் இருந்தவிடத்தே தான் சென்று நோக்கும் பிதாவைப்போலே ஸர்வ ப்ராணி ப்ராணந ஹேது பூ₄தமான காலும். (தாரகையும்) மநுஷ்யருடைய நன்மை தீமைகளை அறிவியாநிற்பதான நக்ஷத்ர தாராக₃ணங்களும். (தன்னினுடனே) இவனாடுகிறபோதை வேக₃த்தாலே இவையடையப் பறந்தாற்போலே சுழன்று வருமாயிற்று. புரிந்தவிடத்திலே ஒக்கப்புரியுமாயிற்று. (கொல்நவிலும் இத்யாதி₃) (மூவிலை

---

விருந்து தலைவரை ஆப₄ரணமணிந்து ஆநந்த₃க் கூத்தாடுகிறபடி. (சூழ் கழற் கால்) உலகெங்கும் சுற்றிவரும் கால் என்னவுமாம். (பொன்னுலகமேழும் கடந்து) திரிவிக்கிரமன் திருவுலகளந்தருளிய தே₃ஶமனைத்தையும் கடந்து. (உம்பர் மேல் சிலும்ப) ஓரிடத்தில் நில்லாமல் தே₃வருலகங்களில் இங்குமங்கும் ஆடிவருகை; உம்பர்- தே₃வருலகம். "மேலுள்ள தே₃வஜாதி 'என்னாய் வருகிறதோ?' என்று அஞ்சுகிறபடி" என்று நாயனார் வியாக்கியானம். உம்பர்- தே₃வர். (மன்னு குலவரையும்) பூ₄மிக்கு ஆணியடித்தாற்போல் நிலையாயுள்ள குலபர்வதங்களும். (மாருதமும்) சுழற்காற்றும். (தாரகையும்) அளவிறந்த நக்ஷத்ரக₃ணங்களும். (தன்னினுடனே சுழலச் சுழன்றாடும்) தானாடும்போது மேலே த₄ரித்துள்ள புன்னைப் பூமாலை சுழன்றுவருவதுபோலே — குலபர்வதங்கள், சுழற்காற்று, நக்ஷத்திரங்கள் முதலியவையும் தானாடும் வேக₃த்தாலே சுழன்று வரும்படியாகக் கூத்தாடுகிறபடி. (கொல் நவிலும்) கொலையைச் சொல்லும். ஸம்ஹாரத்தையே, ஸம்ஹாரகர்த்தாவான அவனுக்கும்

**கொன்னவிலும் மூவிலைவேற் கூத்தன் பொடியாடி**
**அன்னவன்றன் பொன்னகலஞ் சென்றங்**
**கணைந்திலனே 71**

*கொல் நவிலும் மூஇலை வேல்*-கொலைத்தொழில் புரிகின்ற மூன்று இலைகளையுடைத்தான சூலத்தையுடையவனும், *கூத்தன்*—கூத்தாடியென்று பிரஸித்₃த₄னும், *பொடியாடி*—ப₄ஸ்மத₄ாரியென்று பிரஸித்₃த₄னுமான, *அன்னவன் தன்*—அப்படிப்பட்ட சிவபிரானுடைய, *பொன் அகலம் ஆங்கு சென்று அணைந்திலனே*—அழகிய மார்பைக்கிட்டி ஆலிங்க₃னஞ் செய்துகொள்ளவில்லையா?

---

ஆசைப்பட்டாரும் வயிறு பிடிக்கும்படியிருக்கை. (மூவிலை) கண் மூன்றுனாற்போலேயிருக்கிறதன்றோ!

---

வேல்) அவன் த₄ரிக்கும் ஆயுத₄ம். a "கருப்பூரம் நாறுமோ கமலப் பூ நாறுமோ" என்று கேட்கலாயிருக்கிறதோ? b"அருளார் திருச்சக்கரம்" என்றும், c"அறமுயலாழி" என்றும் எப்போதுமொக்க வ்ருத்₃த₄ மந்த்ரிகளைப்போலே அறத்திலே முயலச்சொல்லுகிற திருவாழியன்றே; "ஸர்வகாலமும் கொலையிலே முயலவேணும்" என்று எப்போதும் சொல்லாநிற்பதாய், அவனுக்கு ஶ்லாக்₄யமான ஆயுத₄மிறே. (கூத்தன்) d"தூய நடம் பயிலும்" என்று இனிதாயிருக்கிறதோ? (பொடியாடி)

---

ஸர்வகாலமும் உபதே₃ஶித்துவரும் ஆயுத₄ம். "அருளார் திருச்சக்கரம்" [திருவிரு-33] "அறமுயலாழி" [திருவாய் 2-10-5] எனப்படும் ஆயுத₄மன்று. ஆசைப்பட்டவர்களும் இதைக்கண்டவுடன் ப₄யத்தாலே வயிறுபிடிக்கவேண்டும்படியிருக்கை. (மூவிலைவேல்) விரூபாக்ஷனை அவனுக்குக் கண் மூன்றுனாற்போலே இதுவும் விரூபமாயிருக்கை. (கூத்தன்) "தூய நடம் பயிலும் சுந்தர" [பெரியாழ்திரு 1-6-6] என்னும் சுந்தர நடனமோ? பேய்க்கூத்தாயன்றோ உள்ளது.

(பொடியாடி) அவனைப்பெற்றுத்தான் இவள் அடையப்போகும் பே₄ாக₃மிருந்தபடி காணீர். சாம்பலைச் சந்த₃னமாகப் பூசியிருக்கிறபடி. இதையடையவன்றோ இப்பாடுபட்டாள். (அன்னவன்) இன்னம் இது

---

a நாச்-திரு 7-1. b திருவிருத்தம் 33. c திருவாய் 2-10-5.
d பெரியாழ்திரு 1-6-6.

(பொடியாடி) போ₄க₃த்துக்குச் சந்த₃னம் பூசினபடி. (அன்னவன்) முகத்தைச் செல்லவைத்துப் பேசுகிறாள், இன்னுமிப்புடையிலுள்ளன. (பொன் அகலம்) அவள் பக்ஷத்தாலே. (சென்றாங்கு) இவ்வளவிலும் அவன் வந்திலன். இவள் தானே சென்றவத்தனை. ஓரஞ்ஜலி பண்ண மேல்விழுந்ததுமன்று என்கை.

---

அவனுடைய அங்க₃ராக₃மிருந்தபடி. (அன்னவன்) இப்புடைகளிலே — ஊமத்தை, எருக்கு, அஸ்தி₂ என்றாற்போலே இவற்றாலே அலங்க்ருதனாயிருக்கிற இருப்பை அநுஸந்தி₄த்து, அத்தைத் தன் வாயாலே சொல்ல மாட்டாமையாலே "அன்னவன்" என்கிறாள். a "வெந்தாரென்பும்" b "ஆறும்பிறையும்" c "அக்கும்புலியினதளுமுடை" d "பொடிசேரனற்கங்கை" e "நீற்றான்" என்று அவன்படிகள் சொல்லிற்றிறே. (பொன்னகலம்) தமக்கு த்யாஜ்யமாயிருக்கச்செய்தேயும், அவளுக்கு ஸ்ப்ருஹணீயமாயிருக்கிற ஆகாரத்தாலே சொல்லுகிறது. அவன் மேல் விழத் தானிருந்தாளோ? என்னில்—(பொன்னகலம் சென்றாங்கணைந்திலளே) ஒருதலைக் காமமாய், தானே சென்று அத்த₃ஶையிலே ஸம்ஶ்லேஷித்திலளோ? தான் இப்படி அவன் பக்கலிலே அபி₄நிவிஷ்டையாகை(அது)க்கு /ஸ்த₂விரகாரி; அவனே

---

போலவே, 'ஊமத்தை, எருக்கு, எலும்பு, புலித்தோல்' என்றாற்போலே இவனை அலங்கரிக்குமவற்றைத் தன் வாயாலே சொல்லமாட்டாமல், கண்ணாலும் காணமாட்டாமல், முகத்தைத் திருப்பிக்கொண்டு 'அப்படிப் பட்டவன்' என்கிறாள், (தன் பொன்னகலம்) இவற்றையுடைய அவன் மார்பையே பரம போ₄க்₃யமாக நினைந்திருக்கிறாள் ஸதியாகையாலே. (சென்றாங்கணைந்திலளே) இவ்வளவு தவம் செய்தும் அவன் வந்தானோ? ஒரு தலைக்காமமாய், தானே சென்று அந்த நிலையிலும் அவனை அணையப்பெற்றாளன்றோ. *ஓரஞ்ஜலி செய்தவுடன் நீர்ப்பண்டமாயுருகி மேல் விழும் அகாரவாச்யனல்லனோ அவன். அவனையடையவன்றோ அவள் அப்பாடுபட்டது. இவனையடைய நான் மடலெடுப்பது விந்தையோ?

---

* "அம் ஜலயதீதி அஞ்ஜலி:" [அகாரவாச்யனான விஷ்ணுவை நீராயுருக்குகிறதாகையால் அஞ்ஜலியெனப்படுகிறது] என்பது அஞ்ஜலிஶப்₃த₃வ்யுத்பத்தி. / ஸ்த₂விரகாரீ-முன்னோடி.

---

a பெரியதிரு 1-5-8 b டி 6-7-9 c டி 9-6-1 d முதல்திருவ 97 e டி 74

**பன்னி யுரைக்குங்கால் பாரதமாம்—பாவியேற்கு
என்னுறுநோய் யானுரைப்பக் கேண்மின்—இரும்
பொழில் சூழ் 72**

*பாவியேற்கு* — பாவியான நான், *பன்னி உரைக்குங்கால்* — (இப்படிப்பட்ட உதாஹரணங்களை இன்னும்) விரிவாகச் சொல்லுகிற பக்ஷத்தில், *பாரதம் ஆம்*—ஒரு மஹாபாரதமாய் முடியும்; *என் உறு நோய்*-எனக்கு நேர்ந்த நோயை, *யான் உரைப்ப கேண்மின்*—நானே சொல்லக் கேளுங்கள்; (என்னவென்றால்), *இரு பொழில் சூழ்*—பெரிய சோலைகள் சூழப்பெற்றதும்,

---

(பன்னியுரைக்குங்கால்) இப்பரப்பு என்றால் பேசி முடியாது. வ்யாஸபராசராதிகள் பேசுமத்தனை. (பாவியேற்கு) உங்களுக்குச் சொல்லப்பிறந்தேனோ?.

---

யொழியச்செய்தாளென்று பேராகவேணுமென்றன்றோ தானே சென்று அணைந்தது. (பன்னி இத்யாதி) இவற்றைப் பரக்க விருந்து உபபாதிக்கப்புக்கால் ஓரளவில் தலைக்கட்டுவதொன்றன்று. (பன்னியுரைக்குங்கால்) பரக்கச் சொல்லப்புக்கால். (பாரதமாம்). மஹாபாரதம்போலே ஸபாதலக்ஷக்ரந்தத்துக்குப் போரும். (பாவியேற்கு) பாவியேன், கேட்கிற இவர்களுக்குப் பரக்கச் சொல்லலாம்படி இட்டுப்பிறந்திலேன். பரக்கச் சொல்லுமது கேட்கவேண்டில் அவ்யாஸாதிகள் பக்கலிலே சென்று கேட்டுக்கொள்வது.

நாட்டார் படிகொண்டு கார்யமென் எனக்கு? (என்னுறு நோய் யானுரைப்பக் கேண்மின்) நான் பட்ட பாடு சொல்ல வேணுமாகில் கேளுங்கோள் என்கிறாள். என் அபிமத விஷயத்தை அணைத்தல்லது தரிக்கமாட்டாத நான் கொண்ட

---

**(பன்னியுரைக்குங்கால் பாரதமாம்) இவ்விஷயத்தை விரிவாகப் பேசிமுடிக்க என்றால் முடியாது. வியாஸர் முதலானோரே பேச வேணும். அவர்கள் பேசினாலும் பாரதம்போலே விரியுமேயொழியச் சுருங்கச் சொல்லமுடியாது. (பாவியேற்கு) வியாஸர் முதலானோரைப் போலே விரிவாகச் சொல்லவும் வல்லமையில்லாத மஹாபாபியான எனக்கு. பன்னியுரைக்குங்கால் பாவியேற்கு பாரதமாம் என்று அந்வயம்.**

(என்னுறுநோய்) நம்பியழகிலே அகப்பட்ட; ஸ்ரீப₄ரதாழ்வான் நோவுபோலே. (கேண்மின்) இத்தனையுஞ் செய்ய வேணும். "शोकक्षोभे च हृदयं प्रलापैरेव धार्यते" (ஶோகக்ஷோபே₄ ச ஹ்ருத₃யம் ப்ரலாபைரேவ த₄ார்யதே) என்னும்படியாலே தான் பிழைக்கைக்காக.

---

நோவை நீங்கவும் கேளுங்கோள். (என் உறு நோய்) மறு பாடுருவக் கொண்ட நோய். (யானுரைப்பக் கேண்மின்) நோய் கொண்ட நான் சொல்லக் கேளுங்கள். வேறொருவர்க்கு நிலமல்ல என் நோய். இதின் தலையைப்பற்றி அலையுமதிலும் இந்நோய்தானே உத்₃தே₃ஶ்யமாயிருக்கை. (யானுரைப்ப) நோய்கொண்டாரிருக்க, வேறே சிலர் சொல்லப்புக்கால், பட்டதெல்லாம் தெரியாமையாலே உள்ளதெல்லாம் சொல்லப் போகாதிறே. இவள் நோயென்றால் சாதுர்த்திகமாயிராதிறே; ஸ்ரீப₄ரதாழ்வான் நோய்போலே. (கேண்மின்) செவிபடைத்த ப்ரயோஜநம் பெறக் கேளுங்கள். பரத்வஜ்ஞாநத்தாலே ப₄க₃வத்

---

(என்னுறு நோய் யானுரைப்பக் கேண்மின்) சொல்லிமுடியாததென்பது ஒருபுறமிருக்கட்டும்; அவர்கள் பட்ட பாட்டை விரிவாகச் சொல்லவேண்டிய அவசியமுமில்லை எனக்கு. நான் பட்ட பாட்டை நானே சொல்லக் கேட்டால் அத்தனையும் சொன்னதாய் முடியும்; கேளுங்கள். பரோக்ஷமாகத் தெரிந்ததைச் சொல்லக் கேட்பது கிடக்கட்டும். ப்ரத்யக்ஷமாக நான் படுவதைக் கேளுங்கள். (என் உறு நோய்) என்னை நன்கு உற்றடைந்த நோய், என்னை ஊடுருவி நிற்கும் நோய். "தெய்வ நன்னோய்" [திருவிரு 53] என்றாற்போலே நறையூர் நம்பியைப் பிரிந்துபடும் எனக்கு உறுதுணையாய் உத்₃தே₃ஶ்யமாயிருக்கும் நோய்; ஸ்ரீராமபிரானழகிலே ஈடுபட்ட ஸ்ரீப₄ரதாழ்வான்நோவுபோலே. (யானுரைப்பக் கேண்மின்) நோய் கொண்ட நான் சொல்லக் கேளுங்கள். வேறொருவரால் சொல்லவொண்ணாததாகையால் நானே சொல்லவேணும். (கேண்மின்) தயவுசெய்து கேளுங்கள்; என் உயிர் த₄ரிக்கவேண்டுமெனில் கேளுங்கள்.

"பூரோத்பீடே₃ தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா ।
ஶோகக்ஷோபே₄ ச ஹ்ருத₃யம் ப்ரலாபைரேவ த₄ார்யதே ॥"
[உத்தாராமசரிதம்]

**மன்னு மறையோர் திருநறையூர் மாமலைபோல்**
**பொன்னியலு் மாடக் கவாடம் கடந்துபுக்கு 73**

*மறையோர் மன்னும்* — வைதி₃கர்கள் வாழப்பெற்றதுமான, *திருநறையூர்*—திருநறையூரில், *மா மலைபோல் பொன் இயலும் மாடம் கவாடம் கடந்து புக்கு*—பெரிய மலைபோன்றதும், பொன் போன்றதுமான ஸந்நிதி₄யின் திருக்கதவை ஒருவாறு தாண்டிச் சென்று,,

---

(இரும்பொழில்) பெண்களுக்கு மடலெடுக்கும்படி பனைமிக்க பொழில். (மன்னுமறையோர்) "மடலெடுக்கை ஶாஸ்த்ரார்த்த₂ம்" என்று உபபாதி₃க்குமவர்கள் மன்னும்

---

தத்வத்தை அறிந்தவர்களன்றோ க்ரமப்ராப்தியறிந்து ஆறியிருப்பார்; உகந்தருளின நிலங்களிலே புக்குக் கண்ணுரக்கண்டு அநுப₄விக்கப்பெற்ற நான் ஆறியிருப்பனோ ?

(இரும்பொழில் சூழ்) பரப்பையுடைத்தான ஶ்லாக்₄யமான பொழிலாலே சூழப்பட்டிருப்பதாய், எங்குமொக்கச் சோலையும் பனையுமாய்க் கிடக்குமித்தனையிறே. (மன்னுமறையோர் திருநறையூர்) மறையோர் மன்னும் திருநறையூர். வேத₃வாக்யங்களெல்லாம் உபாஸநத்தையே விதி₄க்கிறதென்று அறுதியிட்டிருக்கிறவர்கள் வர்த்தியாநிற்கிற திருநறையூர். "மடலெடுக்கை நியதகர்த்தவ்யம்" என்றிருக்கிறவர்கள்

---

[குளம் நீர் நிரம்பினால் வடிகாலை வெட்டிவிடுவதே கரை உடையாமல் தடுக்கும் வழியாகும்; (அவ்வண்ணமே) துன்பத்தால் கலங்கினபோது, வாய்விட்டு அழுவதாலேயே நெஞ்சு த₄ரித்துநிற்கிறது.] என்கிறபடியே நான் பிழைப்பதற்காகக் கேளுங்கள். (கேண்மின்) செவி படைத்த பயன்பெறக்கேளுங்கள் என்றுமாம்,

(இரும்பொழில் சூழ்) பரப்பையுடைய சிறந்த சோலைகளாலே சூழப்பட்ட திருநறையூர். என்னைப்போலே பிரிந்து படுவார்க்கு மடலெடுக்கலாம்படி பனைமரங்கள் மிக்க பொழில். (மறையோர் மன்னும் திருநறையூர்) மடலெடுப்பதே ஸகலவேத₃தாத்பர்யம் என்று நிரூபிப்பவர்கள் நிலைநிற்கும் ஊர். மடலெடுப்பது வேத₃தாத்பர்யமாவது எப்படி ? எனில்: "ப்ரஜ்ஞாம் குர்வீத" "த்₄யேய:" "ஸோऽந்

தே₃ஶம். அங்ஙனுண்டோ? என்னில்: **"व्यवसायादृते ब्रह्म नासादयति तत् परम्"** ( வ்யவஸாயாத்₃ருதே ப்₃ரஹ்மந்நாஸாத₃யதி தத்பரம் ) என்று உண்டாகையாலே. (மாமலை) **"सुभगश्चित्रकूटोऽसौ"** (ஸுப₄க₃ஶ் சித்ரகூடோऽஸௌ) என்னுமாபோலே. ப₄க்தியின் உயர்த்தியாலே உயர்ந்து தோற்றினபடி. (கடந்து) வழிபறிக்கும் தே₃ஶத்தைக் கடந்து. ப₃லஹானி

---

நித்யவாஸம்பண்ணுமவர். **"निदिध्यासितव्यः"** *(நிதி₃த்₄யாஸிதவ்ய:)* என்கிற வாக்யத்தைப் பற்றியிருப்பார் வர்த்திக்கும் தே₃ஶம்.

(மாமலைபோல்) மலையைக்கொடுவந்து நெருங்கவைத்தாற்போலேயாய். (பொன்னியலும் மாடம்) அதிஶ்லாக்₄யமாய் ஸ்ப்ருஹணீயமான மாடங்களிலுண்டானு. (கவாடம் கடந்து

---

**வேஷ்டவ்ய:" "த்₄யாயீத" "உபாஸிதவ்ய:" "நிதி₃த்₄யாஸிதவ்ய:" என்று ஸ்வரூபவிருத்₃த₄மான ஸ்வப்ரவ்ருத்தியைச் செய்தாகிலும் பரமபுருஷனைப் பெறவேண்டும் என்று வேத₃மெங்கும் கோ₄ஷிக்கப் பட்டுள்ளதன்றோ. மடலூர்வதும் அதுவேயன்றோ. "வ்யவஸாயாத்₃ ருதே ப்₃ரஹ்மந் நாஸாத₃யதி தத் பரம்" [அந்தணரே! தன் முயற்சி யில்லாமல் பரம்பொருளை அடையமுடியாது] என்று மறைமுடிவு கண்ட முனிவர்களும் உரைத்தனரன்றோ. (மாமலைபோல் மாடம்) பெரிய மலைபோலுயர்ந்துள்ள கோயில்.**

"ஸுப₄க₃ஶ் சித்ரகூடோऽஸௌ கி₃ரிராஜோபமோ கி₃ரி: ।
யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த₂: குபே₃ர இவ நந்த₃நே ॥" 
[ரா-அ 98-12]

**[திருமாலிருஞ்சோலைமலையையொத்த இந்தச் சித்ரகூடமலை மங்கள மானது. (ஏனெனில்) குபே₃ரன் நந்த₃னவனத்திலிருப்பதுபோல் இதில் காகுத்தன் வாழ்கிறான்.] என்றாற்போலே பரமபுருஷன் வாழ்கையாலே. கி₃ரிராஜன் எனப்பட்ட மாலிருஞ்சோலைமலையைப்போலே 'மாமலை' எனப்படுகிறது. திருநறையூர்க் கோயில் சிறிய கல்லின்மேல் அமைந் திருந்தபோதிலும், இவருடைய ப₄க்தியின் உயர்த்தியாலே இவருக்கு உயர்ந்ததாய் மாமலையாய்த்தோற்றுகிறது. (பொன்னியலும் மாடம்) பொன்போலே சிறந்ததாய், அனைவரும் ஆசைப்படும் தன்மையதான கோயில். (கவாடம் கடந்து புக்கு) கதவை ஒருவாறு தாண்டி உள்புகுந்து. கடந்து - சிரமப்பட்டுத் தாண்டி. கதவின் அழகு வழி**

**என்னுடைய கண்களிப்ப நோக்கினேன் நோக்குதலும்**
**மன்னன் திருமார்பும் வாயு மடியிணையும் 74**

***என்னுடைய கண் களிப்ப நோக்கினேன்*** — எனது கண்கள் களிக்கும்படி கண்டேன்; ***நோக்குதலும்*** — பார்த்தவளவில், ***மன்னன்***—நம்பியுடைய, ***திரு மார்பும்***—பிராட்டியுறையும் மார்வும், ***வாயும்***—(புன்முறுவல் நிறைந்த) திருவாயும், ***அடி இணையும்***—இரு திருவடிகளும்,

---

அவன் காண்கை. அவ்வாழங்காலைத் தப்பினபடி. பலஹாநிக்கு முன்னே புகுமித்தனை. என்னுடைய படபாமுகாக்நி குளிர. (களிப்ப) "கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன்" என்னுமாபோலே, நெடுங்காலம் பட்டினிவிட்ட கண்கள் வயிறு நிரம்பும்படி.

---

புக்கு என்னுடைய கண் களிப்ப நோக்கினேன்) "கண்களாரளவும்" என்னுமாபோலே படபாமுகாக்நி தெகுட்டினாற்போலே விடாய்த்த கண்கள் குளிரும்படி நோக்கினேன்.

---

**பறிப்பாரைப்போலே கண்களைக் கொள்ளைகொள்ளுமாகையாலே, அதைக் கடப்பது மிகவும் சிரமமென்று கருத்து. (கடந்து புக்கு நோக்கினேன்) அவனைக் கண்டுவிட்டால் பிறகு, "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" [பெரியதிருவ-34] என்கிறபடியே பலக்குறைவு ஏற்பட்டுவிடும்; ஆழ்த்திவிடும் சுழல்போன்ற அதற்குத் தப்பினபடியாலே பொன்னியலும் மாடக்கவாடத்தைக் கடந்து புகமுடிந்தது; அவனைக் காண்கையாகிற பலக்குறைவுக்கு முன்னே புகலாமேயொழிய, கண்டபின் கடந்து புகமுடியாது என்று கருத்து. (என்னுடைய கண் களிப்ப நோக்கினேன்) அவனைப் பெருமையாலே உருவி, கடல் நீரையும் வற்றச்செய்துகொண்டு எரியும் படபாமுகாக்னிபோலே என் கண்ணீரையும் வற்றவடித்துக்கொண்டு எரியும் கண்கள் குளிரும்படியாக. (களிப்ப) "கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன்" [பெரியதிரு 7-10-9] என்று இவரே அருளிச்செய்தபடியே நெடுங்காலம் பட்டினிகிடந்த கண்கள் வயிறுநிரம்பும்படி நோக்கினேன். (நோக்கினேன்) "தனுகினம் தாமே" [திருவாய் 1-1-3] என்கிறபடியே மிகத்தாழ்ந்த நான் மிகச்சிறந்த பொருளை நோக்கினேன்.**

"நணுகினமம்நாமே". **"मन्ये प्राप्ताः स्म तं देशं भरद्वाजो यमब्रवीत्" (மந்யே ப்ராப்தா: ஸ்ம தம் தே₃ஶம் ப₄ரத்₃வாஜோ யமப்₃ரவீத்)**

(நோக்குதலும் மன்னன்) நான்கண்டபோதே எழுதிக் கொண்டான். வாளும் பலகையும் பொகட்டு, கண்டபோதே மடலெடுக்கப்பண்ணினவன். (நோக்குதலும் மன்னன்) கண்டபோதே தான் என்னலாம்படியிருக்கை. **"राजाधिराजः सर्वेषां" (ராஜாதி₄ராஜஸ் ஸர்வேஷாம்).** (திருமார்பும்) அதொரு ப்ரதாபமும். (நோக்குதலும் மன்னன்) **"दृष्ट एव हि नः शोकमपनेष्यति राघवः"** *(த்₃ருஷ்ட ஏவ ஹி ந: ஶோகமபநேஷ்யதி ராக₄வ:)* என்னும்படியே நோக்கினவநந்தரம், **"ममेदं"** ***(மமேத₃ம்)*** என்கிற ப்ரதிப₃ந்த₄கமடங்கப்போய், அவ்விஷயத்தை அநுப₄விக்கப்பெற்றிலேன். மமேத₃மடங்கலும் போயிற்று; அநுப₄வம் மடலேயாய்விட்டது.

(மன்னன் திருமார்பும்) பற்றுசான பிராட்டிக்கு இருப்பிடமான திருமார்வும். அவள் ஸம்ப₃ந்த₄ங்கொண்டிறே ராஜாவாவது. "திருக்கண்டேன்" என்றிறே கண்டவர்கள் சொல்லு

---

**"மந்யே ப்ராப்தா: ஸ்ம தம் தே₃ஶம் ப₄ரத்₃வாஜோ யமப்₃ரவீத்"** **[ரா-அ 69-9]**

**[ப₄ரத்₃வாஜர் சொல்லிய இடத்தை அடைந்துவிட்டோமென்று நினைக்கிறேன்.] என்றுற்போலே, ஆசார்யோபதி₃ஷ்டமான என் லட்சிய ஸித்₃தி₄யைப் பெற்றேன். (களிப்ப நோக்கினேன்) "த்₃ருஷ்ட ஏவ ஹி ந: ஶோகமபநேஷ்யதி ராக₄வ:" [ரா-அ 8-4] [கண்டவுடன் நம் துன்பங்களைத் தீர்ப்பான் ராக₄வன்] என்று சொல்லப்பட்டதன்றோ.**

**(நோக்குதலும் மன்னன்) நான் கண்டவுடன் எனக்கு மன்னனானான்; என்னை அடிமையோலை எழுதிக்கொண்டான். வாளும் பலகையும் கொண்டு பிறரைக் கொள்ளையடிக்கும் திருமங்கைமன்னனாயிருக்கும் நிலைகழிந்து, கண்டவுடன் மடலெடுக்கும் பரகாலநாயகியாகப் பண்ணினவன். (நோக்குதலும் மன்னன்) "ராஜாதி₄ராஜ: ஸர்வேஷாம்" [ப₄ார-ஆஶ்வ] [அனைவர்க்கும் அரசர்க்கரசனாயிருப்பவன்] என்கிறபடியே கண்டவுடன் இவனே ஸர்வலோகசக்ரவர்த்தி என்னும்படியிருக்கை. (மன்னன் திருமார்பும்) புருஷகாரபூ₄தையான பிராட்டி**

**பன்னு கரதலமும் கண்களும் பங்கயத்தின்
பொன்னியல் காடோர் மணிவரைமேல் பூத்ததுபோல் 75**

*பன்னு கர தலமும்*—கொண்டாடத்தக்க திருக்கைகளும், *கண்களும்* — திருக்கண்களும், *ஓர் மணி வரை மேல் பொன் இயல் பங்கயத்தின் காடு பூத்ததுபோல்*—ஒரு நீலரத்ந மலையின்மேல் பொன்மயமான தாமரைக்காடு மலர்ந்தாற்போல் (விளங்க),

---

தமக்குப் பற்றுசு. விரஹ ஸ்ரமஹரமான மார்வுதன்னைக் கணிசிக்கை. வ்ரீளையாலே முகம்பாராதே மார்வைப் பார்த்தானென்றுமாம். திருமார்வென்ன, "வாயும்" என்பானென்னென்னில்; பிராட்டிபக்கல் ப்ரேமத்தாலே அவளைப்பார்த்து முறுவல்பண்ணியிருக்கும் அவ்வழியாலே முறுவலைக் கண்டபடி. (வாயும்) அகப்படுத்தும் முறுவல். (அடியிணையும்) அம்முறுவலுக்குத் தோற்று விழும் திருவடி

---

வதும். "**मातृदेवो भव**" *(மாத்ருதே₃வோ ப₄வ)* முற்படக்கண்டது திருமார்வாயிற்று. (வாயும்) அவன் முன்னகைப் பற்றினரை, "**माशुचः**" *(மாஶுச:)* என்னும் திரு ஆஸ்யமும். (அடியிணை

---

**யிருக்குமிடமாகையாலே இவருக்கு அவலம்ப₃மாய் (பற்றுமிடமாய்) இருக்கையாலே முதலில் முகங்காணாமல் மார்பைக்காண்கிறார். விரஹதாபத்தை அணைத்துத் தணிப்பதாகையாலே மார்வை முதலிற் காண்கிறாராகவுமாம். வெட்கத்தாலே முகத்தைப் பாராமல் மார்வைப் பார்த்தாரென்றுமாம். (மன்னன் திருமார்பும்) "இருவிருந்த பக்கம் திறவிது" "அபாங்கா₃ பூ₄யாம்ஸோ யது₃பரி பரம் ப்₃ரஹ்ம தத பூ₄த்" [பிராட்டியின் திருக்கடைக் கண்ணோக்குகள் அதி₄கமாக விழுந்தவிடம் பரம்பொருளாயிற்று.] என்கிறபடியே இவள் ஸம்ப₃ந்த₄த்தால் அவன் மன்னனுகை. (வாயும்) திருமார்பென்றவுடன் வாயைச் சொல்வதேன்? எனில்: மார்பிலுள்ள பிராட்டி பக்கல் அன்பினாலே அவளைப்பார்த்து முறுவல் செய்திருக்குமவ்வழியாலே மார்பிலிருந்து வாயைக் காண்கிறார். "வாய்" என்று இவரை ஈடுபடுத்தும் முறுவலைச் சொல்லுகிறது. அவன்முன்னகைப் பற்றினரை "மா ஶுச:" [வருந்தாதே] என்று ஆறுதல் கூறுவதாகையாலே வாயைச் சொல்லுகிறாராகவுமாம். (அடியிணையும்) மார்வுக்கும் முறு**

கள். (பன்னு கரதலமும்) திருவடிகளிலே விழுந்தாரைத் திருக்கையாலே ஸ்பர்ஶித்தால், "ஒரு கையே!" என்று வாய்புலர்த்தும் கை. (கண்கள்) நோக்கும் கண்கள். நின்றவிடத்தே நின்று ஸ்பர்ஶிக்கும் கண். ஒருகால் நோக்கினால், ஆலங்கட்டி விட்டெறிந்தாற் போலேயிருக்கை. (பொன்னியல்) பொற்றாமரைக்காடு—நீலகிரியிலே பரப்பு

---

யும்) அம்மார்வுக்கும் ஸ்மிதத்துக்கும் தோற்றார் விழுவனவான திருவடிகளும். (பன்னு கரதலமும்) திருவடிகளிலே விழுந்தாரை எடுத்தணைத்தால் "இதொரு ஸ்பர்ஶவைலக்ஷண்யமே!" என்று இடைவிடாதே கூப்பிடப்பண்ணும்படியாயிருக்கிற திருக்கைகளும்; பன்னுதல்—இவனை எடுத்தணைக் கையாலே, "தோள்களாயிரத்தாய்" என்கிறபடியே பணைத்த லென்றுமாம். **"सोप्येनं ध्वजवज्राब्जकृतचिह्नेन पाणिना। संस्पृश्याकृष्य च प्रीत्या सुगाढं परिषस्वजे ॥"** *(ஸோப்யேநம் த்₄வஜவஜ்ராப்₃ஜ க்ருதசிஹ்நேந பாணிநா। ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகா₃ட₄ம் பரிஷஸ்வஜே ॥)*. (கண்களும்) ஸ்பர்ஶத்துக்குத் தோற்றாரைக் குளிர நோக்குகிற திருக்கண்களும். உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்களிறே.

---

வலுக்கும், வார்த்தைக்கும் தோற்றுவிழும் திருவடிகளைச் சொல்லுகிறார். (பன்னு கரதலமும்) திருவடிகளிலே விழுந்தாரைக் கையாலெடுத்து அணைத்தால் 'இதுவும் ஒரு கையே!' என்று வாய்வெருவுகை. பன்னுகரதலம்—அடியாரால் வாய்வெருவப்படும் கை. அன்றிக்கே, பன்னுகரதலம் என்று இவரை அணைக்கையாலே ஒன்று பத்து நூறுயிரமாகப் பணைக்கும் திருக்கைகள் என்பதாகவுமாம். "தோள்களாயிரத்தாய்" [திருவாய் 8-1-10] என்கிறபடியே. (கண்களும்) கையினணைப்பிலே ஈடுபட்டவர்களைக் குளிர நோக்கும் திருக்கண்களும். "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்" [பெரியதிரு 7-1-9] எனப்பட்டதன்றோ. கை நீண்டு வந்து தொடுகின்றதென்றால், கண் இருந்த விடத்திருந்தே தொடுகின்றது. ஒருகால் நோக்கினால் ஆலங்கட்டியை விட்டு எறிந்தாற்போலே ஆளை வீழ்த்தும்படியிருக்கை. (பங்கயத்தின் பொன்னியல் காடு ஓர் மணிவரைமேல் பூத்ததுபோல்) பொற்றாமரைக்காடு நீலமலையிலே எங்கும் பூத்ததுபொலே திருமேனியிலுள்ள திருமார்பு, திருவாய், திருவடி,

(மின்னி மழைதவழும் வேங்கடத்தெம் வித்தகனை) மேகமானது மின்னுகிற கைவிளக்கைக்கொண்டு குச்சி வழியேபுக்குத் திருவாராதநம் பண்ணவிருக்கிற ஆஶ்சர்ய பூதனை. (மன்னனை இத்யாதி) நாட்டுக்கு ராஜா, தமக்கு மணாளன். (கொன்னவிலும் ஆழிப்படையானை) நமுசி

---

வழியே தன் வடிவில் இருட்சிக்குக் கைவிளக்காக மின்னோடே புக்கு மேகமும் ஸஞ்சரிக்கிற திருமலையிலே நின்றருளினவனை. "தன்னுகத் திருமங்கை தங்கிய" என்றும், "மின்னொத்த நுண் மருங்குல் மெல்லியலைத் திருமார்பில் மன்னத்தான் வைத்துகந் தான்" என்றும், "அலர்மேல் மங்கை உறை மார்வன்" என்றும் சொன்ன இவற்றுக்கு, மின்னையும் மேகத்தையும் த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார். * "மின்னார் முகில்சேர் திருவேங்கடம்" "மின்னு மாமுகில் மேவுதண்திருவேங்கடம்" (மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை) எனக்கு ராஜாவாய், திருமலையிலே வந்து நின்றருளி என் வல்லபனானவனை. மன்னனை - மன்னனாகவுமாம். (கொல் நவிலும் ஆழிப்படை

---

**(மின்னி மழைதவழும் வேங்கடத்தெம் வித்தகனை) அசேதன மான மேகமும் திருமலையிலே திருக்காப்பிட்ட பின்பும், தன் வடிவில் இருட்சிக்குக் கைவிளக்காக மின்னலாகிற ஒளிவிளக்கைக்கொண்டு திறவுகோல் துவாரத்தின் வழியே தவழ்ந்துசென்று திருவாராதனம் செய்யும்படியிருக்கும் ஆஶ்சர்யபூதனை, அன்றிக்கே, "வேங்கடத்துத் தன்னுகத் திருமங்கை தங்கிய சீர் மார்வற்கு" [நாச்-திரு 8-4] "மின்னொத்த நுண்மருங்குல் மெல்லியலைத் திருமார்வில் மன்னத் தான் வைத்துகந்தான்" [பெரியதிரு 6-9-6] "அலர்மேல்மங்கை யுறை மார்வா-திருவேங்கடத்தானே" [திருவாய் 6-10-10] என்கிற படியே ஹிரண்யவர்ணையான பிராட்டியோடு கூடிய கரிய திருமேனி யையே "மின்னி மழைதவழும்" என்கிறாராகவுமாம். நீலதோயதமத்ய ஸ்தையான வித்யுல்லேகையென்று பண்டைமறையும், "நீல முண்ட மின்னன்ன மேனி" என்று தமிழ்மறையும் குறித்தனவன்றோ இத்திருமேனியை. (மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை) மாலிருஞ் சோலையிலே என்னைக் கைப்பிடித்தவன் நாட்டுக்கெல்லாம் அரசன் கிடீர்! அரசரென்ற மதிப்பாலேயே என்னை அனுக்ரிப்பது என்று கருத்து. (கொன்னவிலும் ஆழிப்படையானை) 'நமுசி' முதலானவர்**

---

* பெரியதிருமொழி 1-10-6. / ஷை 2-1-10.

**அன்ன வுருவி லரியைத் திருமெய்யத்து**
**இன்னமுத வெள்ளத்தை யிந்தளூ ரந்தணனை** 126
**மன்னு மதிட்கச்சி வேளுக்கை யாளரியை**
**மன்னிய பாடகத்தெம் மைந்தனை—வெஃகாவில்** 127

***அன்ன உருவில் அரியை*** — அப்படிப்பட்ட (விலக்ஷணமான) திருமேனியையுடைய நரஸிம்ஹமூர்த்தியாய், ***திரு மெய்யத்து***— திருமெய்யமலையில், ***இன் அமுதம் வெள்ளத்தை***—இனிதான அம்ருதக்கடல்போல் பரமபோக்யனாய், ***இந்தளூர்***—திருவிந்தளூரில், ***அந்தணனை***—பரமகாருணிகனாய், ***மன்னு மதிள்***— பொருந்திய மதிள்களையுடைய, ***கச்சி***—காஞ்சீ நகரத்தில், ***வேளுக்கை ஆளரியை*** — வேளுக்கையென்கிற தலத்திலுள்ள நரசிங்கனாய், ***பாடகத்து மன்னிய எம் மைந்தனை***—திருப்பாடகத்தில் நித்யவாஸம் பண்ணுகிற எமது யுவாவாய், ***வெஃகாவில்***—திருவெஃகாவில்,

---

ப்ரபூருதிகளை "வாய் வாய்" என்னப்பண்ணும் திருவாழியையுடையவனை. (கோட்டியூர் அன்னவுருவில்அரியை) *முரியும்

---

யானை) ப்ரதிபக்ஷநிரஸநத்துக்கிடான பரிகரத்தையுடையவனை. (கோட்டியூர் அன்ன உருவிலரியை) திருக்கோட்டியூரிலே நரஸிம்ஹரூபியாய் நின்றருளின நிலை, தம்முடைய பேச்சுக்கு நிலமன்றிக்கேயிருக்கையாலே 'அப்படிப்பட்ட உரு' என்னும்படியான வடிவழகையுடையவனை.

---

**களைக் கொலை செய்யத் துடிக்கையாலே, அஞ்சவைக்கும் சக்கரப் படையை உடையவனை. (கோட்டியூர் அன்னவுருவில் அரியை) திருக்கோட்டியூரிலே 'அப்படிப்பட்டது' என்றே சொல்லலாம்படியாய் வாசாமகோசரமான வடிவழகையுடைய நரசிங்கருபியாய் எழுந்தருளியிருப்பவனை. (கோட்டியூர் அரியை) இரணியனைக் கொல்ல உபாயம் தேட கோஷ்டி கூடிய இடமாகையாலே கோட்டியூராயிற்று. "திருக்கோட்டியூர் நாதனை நரசிங்கனை" [பெரியாழ் திரு 4-4-6] என்றார் பெரியாழ்வாரும். (அரியை) "தெற்காழ்வார்" "கோளரியாழ்வார்" என்னும் திருநாமங்களுடன் எழுந்தருளியிருக்கும் அத்புத நரகேஸரி ரூபங்களைக் குறிக்கிறது. (அன்னவுருவில் அரியை) இராமபிரானைக் கவிபாடப்புக்கு, "முரியும் வெண்திரை முதுகயம் தீப்பட முழங்கழல்**

வெண்டிரை பாடினவர்க்கு நிலமன்றியே இருக்கிறவனை. (திருமெய்யத்து இன்னமுத வெள்ளத்தை) நினைக்க, விடாய் கெடும்படி இருக்கிறவனை. (இந்தளூர் அந்தணனை) 'அந்தணனை — ஆந்ருஶம்ஸயமுடையவனை. (மன்னும் மதிள்) வீரம் தோற்றாதே அழகே தோற்றி பயப்பட்டு மதிளிட வேண்டும்படி நிற்கிறவனை. (மன்னிய பாடகத்தெம் மைந்தனை) அர்ஜுனனுக்கு ஸாரத்யம்பண்ணினபடி தோற்ற இருக்கிறவனை.

---

(திருமெய்யத்து இன்னமுதவெள்ளத்தை) நடுவழியிலே விடாய்த்தார்க்கு விடாய் கெட, ஒரு அம்ருதஸாகரத்தைத் தேக்கினாற்போலேயிருக்கிறவனை. (இந்தளூரந்தணனை) திருவிந்தளூரிலே நிற்கின்ற பரமபாவனனை. (மன்னுமதின் கச்சி வேளுக்கையாளரியை) திருவேளுக்கையிலே நித்யவாஸம் பண்ணுகிற நரஸிம்ஹவேஷத்தையுடையவனை. மன்னும் மதிள்—ப்ரளயத்திலும் அழியாத மதிள். (மன்னிய பாடகத்து

---

**எரியம்பின் வரிகொள் வெஞ்சிலை வளைவித்த மைந்தனும்" [பெரிய திருமொழி 8-5-6] என்னும் அத்புத கவியைப் பாடிய இவருக்கும் கவிபாட இயலாமல் 'அப்படிப்பட்ட உரு' என்னும்படியிருக்கிறவனை. (திருமெய்யத்து இன்னமுத வெள்ளத்தை) திருக்கோட்டியூர்க்குப் போகிற வழியிலே விடாய்த்தவர்களுக்கு விடாய்தீரும்படியான இனிய அமுதக் கடலாயிருப்பவனை. (இன்னமுதம்) அவ்வமுதம் குடித்தால் விடாய்தீர்க்கும். இவ்வமுதம் நினைத்தாலும் நெஞ்செல்லாம் இனித்து விடாய்தீர்க்கும். (இந்தளூர் அந்தணனை) இந்தளூரிலே எழுந்தருளியிருக்கும் இரக்கமுடையவனை. அந்தணன் - அழகிய தண்மையை (இரக்கத்தை) உடையவன். "அந்தணர் என்பர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலால்" என்ற குறள் காண்க. பரிசுத்தனை என்றுமாம். (மன்னும் மதிட்கட்சி வேளுக்கை ஆளரியை) வேளிருக்கை வேளுக்கையாயிற்று. வேள் - மந்மதமந்மதனென்னத்தக்க அழகையுடையவன். ஆளரி - ஆள் அரி — நரசிங்கம். "உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும்" என்னத்தக்க வீர்யபலங்களை உடையவனாயிருந்தும், வீரம் தோற்றாமல் அழகே தோற்றி பயப்பட்டு, அடியார் மதிளிட்டிருக்கும் திவ்யதேஶத்திலே நிற்கும் நரசிங்கனை. (மன்னும் மதிள்) "ப்ரளயத்திலும் அழியாத மதிள்" என்று நாயனார். (மன்னிய பாடகத்தெம் மைந்தனை) திருப்பாடகத்திலே பாண்டவ**

**உன்னிய யோகத் துறக்கத்தை ஊரகத்துள்**
**அன்னவனை யட்ட புயகரத்தெம் மானேற்றை** 128
**என்னை மனங்கவர்ந்த வீசனை வானவர்தம்**
**முன்னவனை மூழிக் களத்து விளக்கினை** 129

***உன்னிய யோகத்து உறக்கத்தை*** — விழிப்புடனே யோகநித்திரை செய்பவனுய், ***ஊரகத்துள் அன்னவனை*** — திருவூரகத்திலுள்ள மிகச்சிறந்தவனுய், ***அட்ட புயகரத்து எம்மான் ஏற்றை***—அட்டபுயகரத்திலுள்ள எந்தையர் தலைவனுய், ***என்னை மனம் கவர்ந்த ஈசனை***—எனது நெஞ்சைக் கொள்ளைகொண்ட பூர்ணனுய், ***வானவர் தம் முன்னவனை***—தேவர்க்கு முதியவனுய், ***மூழிக் களத்து விளக்கினை***—திருமூழிக்களத்தில் விளங்குபவனுய்,

---

(வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை) ஆஶ்ரிதர் இட்ட வழக்காயிருக்கிறவனை. அதாவது - திருமழிசைப் பிரான் “கிட” என்னக் கிடந்து நிற்கிறபடி. (ஊரகத்துள்

---

எம் மைந்தனை) திருப்பாடகத்திலே எழுந்தருளியிருக்கிற நவ யௌவந ஸ்வபாவனை.

(வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை) திருவெஃகாவிலே ஆஶ்ரித ஸம்ரக்ஷணத்துக்குப் பாங்கான அநுஸந்தானத்தோடே திருமழிசைப்பிரானுக்காகப் படுக்கைமாறிப் படுத்தவனை. (ஊரகத்துள் அன்னவனை) திருவூரகத்திலே

---

தூதனாய் அர்ஜுனனுக்கு தூத்யஸாரத்யங்களைச் செய்தமை தோற்ற நித்யவாஸம் செய்பவனை. (மன்னிய மைந்தனை) நித்யயுவாவா யிருப்பவனை என்றுமாம்.

(வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை) திருவெஃகாவிலே விழிப்பும் உறக்கமுமாயிருப்பவனை. அதாவது,—திருமழிசைப்பிரான் ''பைந்நாகப்பாய் சுருட்டிக்கொள்'' என்றால் விழித்தெழுந்தும், ''பைந்நாகப்பாய் விரித்துக்கொள்'' என்றால் படுத்துறங்கியும் போருகிறவனை. ஆஶ்ரிதர் இட்டவழக்காயிருப்பவனை என்று கருத்து. (உன்னிய யோகத் துறக்கத்தை) ஆஶ்ரிதரக்ஷண சித்தையோடு விழிதுயிலமர்ந்திருப்பவனை என்றுமாம். (ஊரகத்துள் அன்னவனை)

அன்னவனை ) தமக்குங்கூட மேல்நோக்கி முடியப் பார்க்கவொண்ணாதபடியிருக்கிறவனை. (அட்டபுயகரத்தெம் மானேற்றை) ஆச்ரிதர்க்காகத் தன்னையழியமாறுமவனை. என்னை மனங்கவர்ந்த ஈசனை) ஸர்வஸ்வாபஹாரம்பண்ணிப் பூர்ணனாயிருக்கிறவனை.

( வானவர்தம் முன்னவனை ) நித்யஸூரிகளுக்குங்கூட அநுபவித்து முடியவொண்ணாதபடி இருக்கிறவனை. (மூழிக்

திருவுலகளந்தருளின செவ்வி தோற்ற வந்து நிற்கிற நிலை. பேச்சுக்கு நிலமன்றிக்கே நிற்கிற நிலையழகையுடையவனை. ( அட்டபுயகரத்தெம்மானேற்றை ) திருவட்டபுயகரத்திலே ஆனைக்கு அருள்செய்த வடிவைக் காட்டிக்கொண்டு பெரிய மேன்மைப்புத்தோற்ற நிற்கிறவனை. (என்னை மனம் கவர்ந்த ஈசனை) "यस्य सा जनकात्मजा" (யஸ்ய ஸா ஜநகாத்மஜா) என்னுமா போலே என்னுடைய நெஞ்சை அபஹரித்து, அத்தாலே வந்த மேன்மை தோற்ற இருக்கிறவனை.

(வானவர் தம் முன்னவனை) அயர்வறுமமரர்களுக்கு எல்லா வகையாலும் தன்னை அநுபவிப்பித்துக்கொண்டு நிற்கிறவனை.

திருவூரகத்திலே திருவுலகளந்தருளின வடிவைக்கொண்டு தீர்க்கதர்சியான தமக்கும் மேலே நோக்கி முழுதும் பார்க்கமுடியாத பெரிய திருமேனியோடே எழுந்தருளியிருப்பவனை. 'அன்னவன்' என்பதொழிய முடியக் காணலாவதில்லை. (அட்டபுயகரத்தெம்மானேற்றை) திருவட்டபுயகரத்திலே, அடியசனான கஜேந்திரனுக்காகத் தன்னை அழியமாற்றி அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து அருள்செய்த வடிவைக் காட்டிக்கொண்டு மதிப்புத்தோற்ற நிற்கிறவனை. (என்னை மனம் கவர்ந்த ஈசனை) என் உள்ளமுள்ளிட்ட அனைத்தையும் கொள்ளைகொண்டு, அத்தாலே தன்னை நிறைவு பெற்றவனாக நினைத்திருப்பவனை.

(வானவர்தம் முன்னவனை) எக்காலத்திலும் ஜ்ஞானக்குறைவு இல்லாத நித்யஸூரிகளுக்குங்கூட அநுபவித்து முடிக்கவொண்ணாத படி இருக்கின்றவனை. வேதமும் ஆநந்தவல்லியில் படிப்படியாகச் செல்லும் ஒவ்வொரு பர்யாயத்திலும் "ஶ்ரோத்ரியஸ்ய சாகாம

**அன்னவனை யாதனூ ராண்டளக்கு மையனை**
**நென்னலை யின்றினை நாளையை நீர்மலைமேல் 130**
**மன்னு மறைநான்கு மானானைப் புல்லாணித்**
**தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில் 131**

***அன்னவனை*** — இப்படிப்பட்டவனென்று சொல்லமுடியாதவனாய், ***ஆதனூர்***—திருவாதனூரில், ***ஆண்டு அளக்கும் ஐயனை***— ஸகல காலங்களையும் அளவுபடுத்தும் ஸ்வாமியாய், ***நென்னலை இன்றினை நாளையை*** — நேற்று இன்று நாளை என்னும் முக்காலத்துக்கும் நிர்வாஹகனாய், ***நீர்மலை மேல் மன்னும்***—திருநீர்மலையிலெழுந்தருளியிருக்கிற, ***மறை நான்கும் ஆனானை*** — சதுர்வேத₃ ஸ்வரூபியாய், ***புல்லாணி***—திருப்புல்லாணியிலெழுந்தருளியிருக்கிற, ***தென்னன் தமிழை வடமொழியை*** — தென்மொழி வடமொழிகளால் சொல்லப்படுமவனாய், ***நாங்கூரில்*** — திருநாங்கூரில்,

---

களத்து விளக்கினை) உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. (அன்னவனை ஆதனூர் ஆண்டளக்குமையனை) காலத்ரயத்தையும்

---

(மூழிக்களத்து விளக்கினை) திருமூழிக்களத்திலே மிகவும் விளங்காநின்றுள்ளவனை. "வளத்தினை" என்று பாட₂மான போது—ஸம்பத்தானவனை என்றுமாம். (அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை) திருவாதனூரிலே இப்படிப்பட்ட

---

**ஹுதஸ்ய" என்று நித்ய முக்தரின் ஆனந்த₃த்தைச்சொல்லி, மேன்மேலே ப்₃ரஹ்மத்தின் ஆனந்த₃த்தை ஏற்றிக்கொண்டுபோய் "யதோ வாசோ நிவர்த்தந்தே" [எந்த ப்₃ரஹ்மத்திடமிருந்து வாக்குகள் திரும்புகின்றனவோ] என்று உத்₃கோ₄ஷித்ததன்றோ. "பூர்வோ யோ தே₃வேப்₄ய:" [பு-ஸூ] [எவன் நித்யஸூரிகளுக்கும் முன்னவனோ] என்றது புருஷஸூக்தமும். (மூழிக்களத்து விளக்கினை) திருமூழிக்களத்திலே அவதரித்தவுடன் முன்னிலும் விளங்கிநிற்பவனை. "ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:" [பிறந்த பின்பே பெருமை பெறுகிறான்] என்றது பழமறை. "பலபிறப்பாய் ஒளிவரும் முழுநலம்" [திருவாய் 1-3-2] என்றது தமிழ்மறை. 'வளத்தினை' என்று பாட₂மானபோது, மூழிக்களத்தின் செல்வமாயிருப்பவனை என்று பொருள். (அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை) வாய்க்கு நிலமல்லாத அழகை**

பரிச்சே₂தி₃க்குமவனை. (நென்னலை இத்யாதி₃) பரிச்சே₂தி₃த்தபடியைப் பேசுகிறார்.

(நீர்மலை மேல் மன்னுமறை நான்குமானனை) வேத₃த்தாலே அறியப்படுமவனை. (புல்லாணித் தென்னன் தமிழை) "காவார் மடல்பெண்ணை" "தன்னை நைவிக்

---

அழகையுடையனாய், காலத்துக்கு நிர்வாஹகனாய்க்கொண்டு நின்றருளின ஸ்வாமியை. (நென்னலை இன்றினை நாளையை) அக்காலந்தன்னை பூ₄தப₄விஷ்யத்₃வர்த்தமானமாகப் பரிச்சே₂தி₃க்கலாம்படி அதுக்கு நிர்வாஹகனாய் நின்றவனை.

(நீர்மலைமேல் மன்னுமலற நான்குமானனை) திருநீர்மலையிலே வந்து ஸந்நிஹிதனாய், நித்ய நிர்தோ₃ஷமான வேத₃ங்களாலே ப்ரதிபாதி₃க்கப்பட்டிருக்கிறவனை. (புல்லாணித் தென்னன் தமிழை வடமொழியை) தென்னனதான திருப்

---

புடையவனும், வருஷத்தால் உபலக்ஷிக்கப்பட்ட காலத்தை அளவு படுத்தும் ஸ்வாமியாயும் இருப்பவனை. (ஆண்டு அளக்கும்) ப்ராக்ருதமான பொருள்களைக் காலம் அளவுப்படுத்தும்; இவன் காலத்தை அளவுபடுத்துவான். "காலம் ஸ பசதே" [வி-பு 5-20-54] [காலத்தை அவன் சமைக்கிறான்.] என்றது விஷ்ணுபுராணம். எப்படி அளவு படுத்துகிறான் என்பதைப் பேசுகிறார் மேலே (நென்னலை இன்றினை நாளையை) நேற்று, இன்று, நாளை எனப்படும் சென்றகாலம், நிகழ் காலம், வருங்காலம் என்னும் மூன்று பிரிவாக்கிக் காலத்தை நிர்வஹிப்பவனை என்றபடி. "வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாய் உலகை ஒருங்காக அளிப்பாய்" [திருவாய் 3-1-5] "சென்று செல்லாதன முன்னிலாம் காலமே" [திருவாய் 3.8-9] என்றார் நம்மாழ்வாரும்.

(நீர்மலைமேல் மன்னும் மறைநான்கும் ஆனானை) நீர்மலைமேல் எழுந்தருளியிருப்பவனாய், நித்யமாய் குற்றமற்று விளங்கும் நாலு வேத₃ங்களாலும் சொல்லப்படுமவனை. "வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃ய:" [கீ₃தை 15-15] [வேத₃ங்களனைத்தினாலும் அறியப் படுமவன் யானே] என்றான் கீ₃தையில் கண்ணன். (புல்லாணித் தென்னன் தமிழை) பாண்டி₃யனுடையதான திருப்புல்லாணியிலே தமிழ்மறையான "காவார் மடல் பெண்ணை" [பெரியதிரு 9-4]

**மன்னு மணிமாடக் கோயில் மணாளனை**
**நன்னீர்த் தலைச்சங்க நாண்மதியை நான்வணங்கும் 132**
**கண்ணனைக் கண்ண புரத்தானைத் தென்னறையூர்**
**மன்னு மணிமாடக் கோயில் மணாளனைக் 133**

*மணிமாடக்கோயில் மன்னு மணாளனை*—மணிமாடக் கோயிலில் நிலைநிற்கும் மணவாளப் பிள்ளையாய், *நல் நீர் தலைச்சங்கம் நாண்மதியை* — நல்ல நீர் சூழ்ந்த தலைச்சங்காட்டிலுள்ள நாண்மதியப் பெருமானாய், *நான் வணங்கும் கண்ணனை*— நான் வணங்கத்தக்க கண்ணனாய், *கண்ணபுரத்தானை*—திருக்கண்ணபுரத் துறைவானாய், *தென் நறையூர் மணிமாடக் கோயில் மன்னு மணாளனை*—திருநறையூர் மணிமாடமென்று ப்ரஸித்$_3$த$_4$மான ஸந்நிதி$_4$யில் எழுந்தருளியிருக்கிற மணவாளனாய்,

---

கிலெலன்" என்கிற திருமொழிகள் தானேயாயிருக்கிறவனை. (வடமொழியை) ஸ்ரீ ராமாயணாதி$_3$கள். (நாங்கூரில் மன்னு

---

புல்லாணியிலே ஸம்ஸ்க்ருதரூபமாயும். த்$_3$ராவிட$_3$ரூபமாயுமுள்ள வேத$_3$மென்ன, வேத$_3$ஸாரமான திருவாய்மொழியென்ன, இவற்றுக்கு நிர்வாஹகனாய், இவற்றுக்கு ப்ரதிபாத்$_3$யனாயுள்ளவனை. வடமொழி என்று-ஸ்ரீராமாயணத்துக்கு ப்ரதிபாத்$_3$யனென்னவுமாம். தென்னன் தமிழென்று-அக$_3$ஸ்த்யருடைய தமிழுக்கு ப்ரதிபாத்$_3$யனென்றுமாம். "வடமொழியை நாங்கூரில்" என்று மேலே கூட்டவுமாம். (நாங்கூரில் மன்னு மணிமாடக்கோயில் மணாளனை) திருநாங்கூரில் திருமணி மாடக்கோயிலிலே விடாதே நின்றருளி அடிமை கொண்டு

---

**"*தன்னை நைவிக்கிலெல்*" [பெரியதிரு 9-3] என்னும் *திருப்புல்லா ணித் திருமொழிகளாலே* பாடப்படுமவனை. (*தென்னன் தமிழை*) *அகத்தியரின் தமிழால்* பாடப்படுமவனை என்றுமாம். (வடமொழியை) *ஸ்ரீராமாயணாதி$_3$களான* வடமொழி *சாஸ்திரங்களாலே* சொல்லப் படுமவனை. *த$_3$ர்ப்ப$_4$ஶயன* ராமனன்றோ *திருப்புல்லாணியில்* இருப்பவன். (*நாங்கூரில்* மன்னுமணிமாடக்கோயில் மணாளனை) *திருநாங்கூரில் மணிமாடக்கோயிலிலே நிலைநின்று* எனக்கு வேறொருவன்று கோலில்லாதபடி என்னை எழுதிக்கொண்ட மணவாளப்**

மணிமாடக்கோயில் மணாளனை) என்னை மறுமுட்டுப் பெருத படி பண்ணினவனை. (நன்னீர்) தூர்ஶநீயனாயிருக்கிறவனை.

(நான்வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை) "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேனொருவர்க் குரியேனோ?" என்னும்படியாயிருக்கிறவனை. (தென்னறை யூர்) மடலெடுக்கப் பண்ணினவனை. ஆணைசெல்லாத தேஶம்.

---

அத்தாலே நாயகனானவனை. (நல்நீர்த் தலைச்சங்க நாண்மதியை) நல்ல ஜலஸம்ருத்தியையுடைத்தான தலைச்சங்காட்டிலே, கடலிலே சந்த்ரன் உதித்தாற்போலே பரிபூர்ணனாய்க்குளிர்ந்து நிற்கிறவனை.

(நான் வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை) "கண்ண புரமொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்குரியேனோ?" என்னும்படி அநந்யார்ஹையாக்கின வடிவைக்கொண்டு நின்றருளினவனை. (தென்னறையூர் மன்னுமணிமாடக் கோயில் மணாளனை) இவையெல்லாவற்றுக்குமடியாகத் திருநறையூரிலே வந்து நின்றருளின வடிவழகைக் காட்டி, என் கையிலே மடலைக்கொடுத்து மணிமயமான கோயிலிலே நிரதிஶய போக்யமான வடிவைக்காட்டி என்னைத் தோற்பித்து அத்தாலே எனக்கு நிர்வாஹகனாய் நின்றருளினவனை.

---

பின்னையை. (நன்னீர்த் தலைச்சங்க நாண்மதியை) நல்ல நீர்ப் பெருக்கையுடைய தலைச்சங்காட்டிலே கடலிலே பௌர்ணமிதினத் தன்று உதித்த சந்திரன்போன்று அழகாக விளங்குமவனை.]

(நான் வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை) "கண்ணபுர மொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ" [பெரியதிரு 8-9-3] என்று என்னை அநந்யார்ஹையாக்கிக்கொண்டு கண்ண புரத்திலே எழுந்தருளியிருக்கும் சௌரிராஜனாகிற கண்ணனை. (தென்னறையூர் மன்னுமணிமாடக் கோயில் மணாளனை) அழகியதான திருநறையூரிலே விளங்கும் மணிமாடக்கோயிலில் என்னை மடலெடுக் கப்பண்ணின மணவாளப்பின்னையை. (மணாளனை) நாச்சியார் ஸேவி லாகையாலே பிராட்டியின் ஆணையேயாய்த் தன் ஆணை செல்லாத மணவாளப்பின்னை என்றுமாம்.

**கன்னவில்தோள் காளையைக் கண்டாங்குக் கைதொழுது**
**என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான் 134**

*கல் நவில் தோள் காளையை* — மலையென்று சொல்லத்தக்க தோள்களையுடைய யுவாவாயுள்ளவனை, ***ஆங்கு கண்டு கை தொழுது*** — அத்திருநறையூரிலே கண்டு ஸேவித்து, ***என் நிலைமை எல்லாம் அறிவித்தால்***—எனது அவஸ்தைகளையெல்லாம் விண்ணப்பஞ் செய்துகொண்டால், (அதுகேட்டு) ***எம் பெருமான்***—அப்பெருமான்,

---

(கன்னவில்தோள்) பூண்கட்டின. கண்டன்றி விடேன். (தொழுது) அவனைக்கெடுத்தபடி. ராஜமஹிஷி உஞ்சவ்ருத்திபண்ணுமோபாதி இவனுக்கு அஞ்ஜலியும். "ஓதி நாமம்

---

(கல்நவில் தோள் காளையை) "ஓரபலையை வென்றோம்" என்று தோள்வலியைக் கொண்டாடியிருக்கிறான் என்னுதல். அன்றியே, "ஒரு ஸ்த்ரீயை மடலெடுப்பித்துக் கொண்டோம்" என்று தன் பருவத்தைக் கொண்டாடியிருக்கிறவனை. தோளையும் பருவத்தையும் கொண்டாடியிருக்கிறவனை. (கண்டு) காணவேணும் என்னுமாசை கண்டல்லது நிற்கவொட்டாதிறே. "என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்" என்று முதல் நோக்கிலேயிறே ஆசை கைவளர்ப்புண்டது. இன்னமும் இவ்வாசைக்கீடாகக் கண்டல்லது மீளேன். (ஆங்குக் கை தொழுது) கண்டவிடத்தே அவர்க்குச் செய்யக்கடவ

---

இனி, மடலெடுக்கச்செய்த திவ்யதேசத்தைச் சொன்ன பின்பு, வேறு ஒரு திவ்யதேசத்தைத் தொடாமல் தன் உறுதியைத் தெரிவிக்கிறார் மேலே.— (கன்னவில்தோள் காளையை) ஓர் அபலையை வென்றோம் என்று கல்லொத்துப் பூண்கட்டின தோள்வலியைக் கொண்டாடியிருப்பவனை. (காளையை) மடலெடுக்கப் பண்ணின தன் பருவத்தை மதித்திருப்பவனை. (கண்டு) "என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்" என்று தொடங்கினபடியே முடியக் கண்டல்லது விடேன். (ஆங்குக் கைதொழுது) அவன் திருமுன்பே அவனைப் பெறுவதற்காக அவனைத் தொழுது அவன் ஸ்வரூபத்தைக் கெடுத்து, மடலெடுப்பித்தற்கு முதற்படி இது. ராஜபத்னி பிச்சையெடுப்பதுபோன்றது இவனுக்கு ஸ்த்ரீஜனப்ருத்திலே செய்யப்படும் அஞ்ஜலி. "ஓதி நாமம் குளித்து உச்சிதன்னால் ஒளிமா

குளித்துச்சிதன்னுல் ஒளிமாமலர்ப்பாதம் நாளும் பணி வோம்'' (என்னிலைமை) மடலிலே துணிந்தபடி. (தன்

---

தொன்றுண்டு : தம்மையன்றேவென்று தொழக்கடவேன். "நம் கண்களாற்கண்டு தலையில் வணங்கவுமாங்கொலோ" என்று உபாத்யாயன் அவனிறே. "**कौसल्या लोकभर्तारम्**" ***(கௌஸல்யா லோகப₄ர்த்தாரம்)*** இத்யாதி₈. (என் நிலைமை யெல்லாமறிவித்தால்) என்னுடைய ஸ்த்ரீத்வத்தையும் குலைத்து மடலூருகை தவிரேன் என்கிற என்னுடைய துணிவை அறிவித்தால். "உன்னைக் காண்பதோராசையினுல்" என்று, * தாயே தந்தையிலாசைப்பட்டபடியும், "ஆகிலும் ஆசை விடாளால்" என்று பிறர்சொல்லும்படி அவ்வாசை முடிய நடந்தபடியும், "என் சிந்தனைக்கு இனியையாம்படி புகுந்த உன்னைப் போகவொட்டேன்" என்று கால்கட்டத் தாம் போய்த் திருவாலியிலே தூதுவிட இருந்தபடியும், "ஆயர்

---

மலர்ப்பாதம் நாளும் பணிவோம்" [பெரியதிரு 9-3-9] என்ற இவ் வாழ்வார். அடுத்தபடியாக அது அவனுடைய நெஞ்சுக்குத் தண் ணீர்த் துரும்புபோன்றது என்பதை "நமக்கே நலமாதலில்" [பெரிய 9-3-9] என்ற பகுதியில் ஏகாரத்தாலே உணர்த்தினர். "தொழுது மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு எழுதும் என்னுமிது மிகையாதலின்" [திருவாய் 9-3-9] என்றார் நம்மாழ்வார். (கண்டு ஆங்கு கை தொழுது) மடலெடுக்கத் துணிந்த நம்மாழ்வாரும். "நம் கண்களால் கண்டு தலையில் வணங்கவும் ஆங்கொலோ தையலார் முன்பே" [திருவாய் 5-3-7] என்று பலர் முன்பே அவன் ஸ்வரூபத்தை அழிக்க ஆசைப்பட்டார். பெருமான்மேலே விழிய பிசாட்டியும் "தம் மமார்த்தே₂ ஸ்நுஷே ப்ருச்ச₂ ஶிரஸா சாபி₄வாத₃ய" [சா-ஸு 39-55] [அவரை எனக்காக க்ஷேமம் விசாரிப்பாய்; (எனக்காகத்) தலையால் வணங்குவாய்] என்றான். (என் நிலைமை எல்லாம் அறிவித்தால்) மடலெடுக்கும்படியானதுவரையிலுள்ள என்னுடைய எல்லா நிலைகளை யும் அறிவித்தால்: அவைதான் எவையென்னில்; "தாயே தந்தை" [பெரியதிரு 1-9] என்னும் பதிகத்தில் "உன்னைக் காண்பதோ ராசையினுல் வந்தடைந்தேன்" [1-9-1] என்று ஆசைப்பட்டபடியை யும். "ஆகிலும் ஆசைவிடாளால்" [2-7-1] என்று தாயார் சொல்லும்படி அவ்வாசையே தொடர்ந்து வந்ததையும், "என் சிந்தனைக்கினியாய்" [3-5-1] "புகுந்தாயைப் போகவொட்டேன்" [3-5-6] என்று கால்கட்டிய நிலையையும், அடுத்த பதிகத்தில்

## தன்னருளு மாகமும் தாராளேல் தன்னைநான்

***தன் அருளும் ஆகமும் தாரான் ஏல்***—தனது திருவருளையும் திரு மார்பையும் எனக்குத் தந்தருளானாகில், ***தன்னை***—அவ்வெம் பெருமானை, ***நான்***—(அவனது செயல்களையெல்லாமறிந்த) நான்,

---

னருள்) த₄ர்மத்துக்குத் தண்ணீர்வார்க்கை. (ஆகம்) நெஞ்சோடு கலந்தவன்று தே₃ஹ த₃ாரகமாமத்தனே.

---

மாதர் கொங்கை 'புல்கு செண்டன்" என்று தம்முடைய ப்ரண யித்வத்தை அநுஸந்தி₄த்துச் சொல்லவென்று ஒருப்பட்டு மோஹங்க₃தையாய், பார்த்தன்பள்ளியிலே பரிசழிந்தபடி யும், திருவிந்தளூரிலே அயலாரும் ஏச உம்மைக்காணுமாசை யென்னும் கடலில் வீழ்ந்து அறிவித்தபடியும், * வெருவா தாளிலே "தாதாடு வனமாலை தாராளோ" என்று வாய் வெருவிக் கோயில் திருவாசலிலே முறையிட்டபடியும், சினவில் செங்கணிலே திருநறையூரிலே கணக்கண்டபடியும், * தந்தைகாலில் பெருவிலங்கிலே திருவழுந்தூரிலே * என்னைம் புலனும் எழிலுங்கொண்டு – பொன்னம் கலைகள் மெலிவெய் தப்போனபடியும், * தெள்ளியீர் தேவரிலே, * கண்ணபுர மென்று பேசியுருகி வாய் வெருவினபடியும், * கரையெடுத்த

---

**திருவாலியிலே தூதுவிட்டபடியையும், "ஆயர் மாதர்கொங்கை புல்கு செண்டன்" [4-8-3] என்றும், "கொல்லையானாள் பரிசழிந் தாள்" ல[4-8-4] என்றும் பார்த்தன்பள்ளியிலே பரிசழிந்தபடியை யும், "உம்மைக் காணும் ஆசையென்னும் கடலில் வீழ்ந்து" [4-9-3] என்கிறபடியே அயலாருமேசத் திருவிந்தளூரிலே ஆசைக் கடலில் வீழ்ந்தபடியையும், "வெருவாதாள்" [5-5] என்னும் திரு மொழியிலே "வாய் வெருவிவேங்கடமே வேங்கடமே" என்றும், "அடியேனை வேண்டுதியோ வேண்டாயோ" என்றும், "தாதாடு வனமாலை தாராளோ" என்றும் கதறியபடியையும், "சினவில் செங் கண்" [7-3] என்னும் திருமொழியிலே கணக்கண்டபடியையும், "தந்தைகாலில்" [7-5] திருமொழியிலே, "என்னைம்புலனும் எழி லும்கொண்டு பொன்னங்கலைகள் மெலிவெய்த" என்னும் நிலையை அடைந்ததையும், "தெள்ளியீர் தேவர்" [8-2] திருமொழியிலே கண்ணபுரமென்று பேசி உருகி உள்மெலிந்தபடியையும், "கரை யெடுத்த" [8-3] திருமொழியில் வளையிழந்து "தந்தைகாலில்" [8-5]**

மெய்போலே பூ்ாவித்துப் பொரிபுறந்தடவியிருக்கிற தன்னை. (நான்) அவையெல்லாம் வெளியிடப்புகுகிற

---

விலே வளையிழந்தபடியும், * தந்தை காலிலே, நெஞ்சு தாரி ஞைசயில் போகத்துணையற்று, * நாழிகை ஊழியில் பெரிதானபடியும், *காவார் மடலிலே திருப்புல்லாணியிலே பொய் சொல் விப்போனபடியும், * தவள இளம் பிறையிலே தரைக்கிடைக் கிடந்தபடியும், * மூவரில் முன் முதல்வனிலே திருமலையிலே கூட ஆசைப்பட்டுக் கிடையாமே, * திருத்தாய் செம்போத்திலே நிமித்தம் பார்த்திருந்தபடியும். (எம்பெருமான்) தன்னை அழியமாறியும் பெறவேண்டும்படியன்றோ அத்தலையில் வைலக்ஷண்யம். அவன் வருந்தனையும் பார்த்திருக்கலாம்படியோ என் தசை? என்கிருள். (தன்னருளும் ஆகமும் தாராளேல்) தன்பேருக க்ருபை பண்ணித் தன்னுடம்போடே வந்து என்னை அணையாளுகில்.

---

திருமொழியிலே நெஞ்சம் தாசிஞைசயால் போகப்பெற்று நாழிகை ஊழியில் பெரிதானபடியையும், "காவார் மடல்" [9-4] திருமொழியிலே புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்து சிந்தைநோய் கொண்டு, அந்துகிலும் நில்லாமல், எழில்நிறமும் சங்குமிழந்து உறங்காதிருந்தபடியையும், "தவள இளம்பிறை" [9-5] என்னும் திருமொழியிலே தரைக்கிடை கிடந்தபடியையு "மூவரில் முன் முதல்வன்" [9-9] திருமொழியிலே திருமாலிருஞ்சோலையில் கூட ஆசைப்பட்டுக் கிடையாமல், "திருத்தாய் செம்போத்து" [10-10] திருமொழியில் சகுனம் பார்த்தபடியையும், இப்போது மடலெடுக்கவிருக்கிற நிலையையும் ஆக இந்த நிலைகள் எல்லாவற்றையும் சொல்லுகிறது. (எம்பெருமான்) என் ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டும் பெறவேண்டும்படியன்ளே எனக்கும் அவனுக்குமுள்ள உறவிருப்பது; அவன் வரும்வரை பார்த்திருக்கமுடியுமோ? என்கிறர். (தன் அருளும் ஆகமும் தாராளேல்) தா்மத்துக்குத் தண்ணீர்ப்பந்தல் வைப்பாளரைப் போலே தன் பேருகக் கருணைத் தண்ணீரை வார்த்து, என் மார்வோடு தன்நெஞ்சை அணைத்து என்னை உயிர்பெறச் செய்யவில்லையாகில்; இது செய்யாவிடில் உடலில் உயிர் இல்லையாகிவிடும் என்று கருத்து.

(தன்னை) புறத்தில் (மேலே) வெல்லம் தடவியிருக்கையாலே இனிப்பதாய், உண்மையில் இனிப்பற்றதாகிய பொரியைப்போலே, அன்புள்ளவன்போலே நடிப்பவனும், உண்மையில் அன்பு சிறிதும்

**மின்னிடையார் சேரியிலும் வேதியர்கள்**
**வாழ்விடத்தும் 135**
**தன்னடியார் முன்பும் தரணி முழுதாளும்**
**கொல்லவினும் வேல்வேந்தர் கூட்டத்தும்**
**நாட்டகத்தும் 136**

*மின் இடையார் சேரியிலும்*—ஸ்த்ரீகள் இருக்கும் திரள்களிலும், *வேதியர்கள் வாழ்வு இடத்தும்*—வைதிகர்கள் வாழுமிடங்களிலும், *தன் அடியார் முன்பும்*-அவனது பக்தர்கள் முன்னிலையிலும், *தரணி முழுது ஆளும் கொல்நவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும்*-பூமண்டலம் முழுவதையும் ஆள்கின்றவராயும் கொடிய படைகளையுடையவராயுமிருக்கிற அரசர்களுடைய ஸபைகளிலும், *நாடு அகத்தும்*—மற்றும் தேசமெங்கும்,

நான். (மின்னிடை) தான் ப்ரணயத்துக்குச் சமைந்து "உங்களிடையல்லதறியேன்" என்றிருக்கிறவிடம்; ரஸிக

(தன்னை) ஸர்வத்ர மடலெடுத்தாகிலும் பெறவேண்டும் படியான வைலக்ஷண்யத்தையுடைய தன்னை. (நான்) ஏதேனும் செய்தாகிலும் அபேக்ஷிதம் பெற்றல்லது மீளுவதில்லை என்னும் துணிவையுடைய நான். (மின்னிடையார் சேரியிலும்) அல்லாதவிடம் செய்தபடி செய்ய, என்னோடொட்ட ஸஜாதீயர்க்கு முந்துற அறிவிக்கத்தட்டில்லையிறே. தான் ரஸிகனாய் ப்ரணயித்வம் கொண்டாடியிருப்பது அவர்கள் பக்கலிலேயிறே,

இல்லாதவனான தன்னை; மடலெடுத்தாகிலும் பெறவேண்டிய பெருமையுடைய தன்னை என்றுமாம். (நான்) மெய்யன்போலே நடிக்கும் அப்பொய்யனுடைய பொய்களையெல்லாம் வெளியிடப்போகிற நான். இருவர் ஸ்வரூபத்தையும் அழித்தாகிலும் அவனைப் பெற்றல்லது விடேன் என்றிருக்கும் நான் என்றுமாம். (மின்னிடையார் சேரியிலும்) முதலில் என்னைப்போலே அவனிடத்திலே மனத்தைப் பறிகொடுத்த பெண்களிடத்தில் சென்று, "என்னிடம் 'உன்னையல்லது அறியேன்' என்று கூறி மறந்து நிற்கிறான்; உங்களிடம் காதல் கொண்டவன்போல் பாவித்து 'உங்களுடைய மின்னிடையல்லது வேறொன்றுமறியேன்' என்று சொல்லியிருக்கும் வார்த்தையும் எத்தகையது என்று அறிந்து கொள்ளுங்கோள்" என்கிறேன். (மின்னிடையார்)

த்வம் விலை செல்லுகிறவிடம் என்றுமாம். (வேதியர்கள்) ப்ரமாண கோடிகளாலே தன்னை அறிந்து ஸமாராதநமான யாகாதிகள் பண்ணுமிடத்திலும்; ஆந்ருஶம்ஸ்யம் விலை செல்லுமிடம். (தன்னடியார் முன்பும்) தன்னைப் பற்றாசாக நினைத்திருக்கிற ஆஶ்ரிதர் முன்பும்; குணம் விலைசெல்லுமிடமென்றுமாம். (தரணியித்யாதி) தன் வீரப்பாடு பேசும்

மின்னிடையாரென்று-ஆண்டாள் போல்வார் கோஷ்டியிலும் திருக்குரவை கோத்த பெண்கள் திறங்களிலும், 'இதுவேயன்றோ அவனுடைய ரஸிகத்வமிருந்தபடி' என்று என்னுடம்பைக் காட்டி "ஸ்தரீகாதுகன்கிடிகோள்" என்கிறேன். (வேதியர்கள் வாழ்விடத்தும்) உபாஸகாக்ரேஸரரான வ்யாஸாதி கோஷ்டியிலும். வேதியரென்ற - பெரியாழ்வார் வர்த்திக்கிற தேசங்களிலுமென்னவுமாம். (தன்னடியார் முன்பும்) "குணைர்தாஸ்யமுபாகத:" (குணைர் தாஸ்யமுபாகத:) என்றாற்போலே குணஜ்ஞாநத்தாலே ஜீவித்துக்கிடப்பார் சிலருண்டிறே - நம்மாழ்வார் போல்வார். அவர்கள் ஸந்நிதியிலும்; அவர்கள் முன்பே "இதுகிடிகோள் அவன்குணமிருந்தபடி" என்று என் வடிவைக்காட்டி, "ந்ருஶம்ஸன்" என்னக்கடவேன். (தரணி முழுதாளும் கொல் நவிலும் வேல்வேந்தர்

ஆண்டாள், குரவைகோத்த ஆய்ச்சியர் முதலானோர். இவர்கள் கோஷ்டியிலே 'அழகை ரஸிக்கும் பரமரஸிகன்' என்றல்லவோ பெயர் வாங்கியிருப்பது; 'என் அழகை ரஸித்தபடி காணீர்' என்று கூறி அப்பெயரை அழிக்கிறேன் என்றுமாம். (வேதியர்கள் வாழ்விடத்தும்) ஶ்ருதி முதலான ப்ரமாணங்களாலே 'இவனே பரதேவதை' என்று அறிந்து, உபாஸனம், யாகம், ஶரணவரணம் மங்களாஶாஸனம் முதலானவை செய்யும் வியாஸர், பராஶரர், பெரியாழ்வார் போல்வார் வாழுமிடத்திலும்; 'பரமதயாளு இவன்' என்று பறைசாற்றிக்கொண்டிருக்கும் அவர்கள் கூட்டத்திலே சென்று 'இவனுடைய இரக்கமிருந்தபடியைப் பாரீர்' என்று என் உடம்பைக் காட்டுகிறேன். (தன்னடியார் முன்பும்) குணத்துக்குத் தோற்றுத் தம்மை எழுதிக்கொடுத்திருக்கும் இளையபெருமாள் நம்மாழ்வார் போல்வாருடைய கூட்டங்களிலே சென்று 'இவனுடைய குணமிருந்தபடியைக் காணுங்கோள்' என்கிறேன். 'வேதியர்கள்' என்று வேதத்தில் மிகுந்து காணப்படும் ஸாத்யோபாயங்களில் ஊன்றியவரையும், 'தன் அடியார்' என்று அடியைப்பற்றிய ஸித்தோபாயநிஷ்டரையும் குறிக்கிறதாகவுமாம். (தரணி முழுதாளும் கொன்ன

**தன்னிலைமை யெல்லா மறிவிப்பன் தான்முனநாள்**
**மின்னிடை யாய்ச்சியர்தம் சேரிக் களவின்கண் 137**

***தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன்***—அவன் தன்மைகளையெல்லாம் வெளிப்படுத்தி விடுவேன்; ***முனம் நாள்***—முற்காலத்தில் (கிருஷ்ணாவதாரத்தில்), ***மின்னிடை ஆய்ச்சியர்தம் சேரி***—மின்போல் நுண்ணிய இடையையுடைய இடைச்சிகளின் சேரியிலே, ***களவின்கண்*** — திருட்டுத்தனமாக,

---

ராஜாக்கள் முன்பும்; ஆபிஜாத்யமும் ஜகத்ரக்ஷணமும் விலைபெறுமிடமென்றுமாம். (நாட்டகத்தும்) நாலெந்திடத்திலே சொல்லி விடாநின்றேனே? ஸர்வேஶ்வரனாக

---

கூட்டத்தும்) ஒவ்வொரு நாடுகளுக்குக் கடவராயிருப்பார் இவன் வீரவாசியைச் சொல்லிக் கொண்டாடி நிற்பர்களிறே; அவ்விடங்களிலே "இதுகிடிகோள் அவன் ரக்ஷகனாயிருக்கிறபடி" என்று அபலையான என் வடிவைக் காட்டுகிறேன். (வேல்வேந்தர்) ஸ்ரீகுலசேகரப்பெருமாள், தொண்டைமான் சக்ரவர்த்திபோல்வாரிறே. இங்ஙனே பிரித்துச் சொல்லுகிறதென்? (நாட்டகத்தும்) லோகமடங்கத் திரண்ட இடங்களிலே சென்று, "ஸேஶ்வரம் ஜகத்து" என்று ப்ரமித்திருக்கிறவர்களை, "நிரீஶ்வரம் ஜகத்து" என்று இருக்கும்படி பண்ணுகிறேன். (நாட்டகத்தும்) மற்றும் விலக்ஷணர் வர்த்திக்கும்

---

விலும் வேல்வேந்தர் கூட்டத்தும்) ஒவ்வொரு நாட்டை ஆள்கையாலே அரசர்களென்று பெயர் படைத்து பூமியிலிருக்கும் நற்குடிப் பிறப்புள்ள ஶௌர்ய வீரர்களான குலசேகரர், தொண்டைமான் சக்ரவர்த்தி போல்வாரான அரசர்களனைவரும் அரசர்க்கரசனான இவனுடைய வீரத்தையும் ரக்ஷகத்வத்தையும் கொண்டாடியிருப்பார்களன்றோ; அவர்கள் குழுவிலே சென்று "இக்ஷ்வாகுகுலத்தில் பிறந்த ஶௌர்யவீரனான இவன் அபலையான என்னிடம் காட்டிய வீரத்தைக் காணுங்கோள்; ஸர்வரக்ஷகனான இவன் என்னை ரக்ஷித்தபடியைப் பாருங்கோள்" என்று கூறி வீரத்தையும் ரக்ஷகத்வத்தையும் அழிக்கிறேன். (நாட்டகத்தும்) இப்படி நாலெந்திடத்திலே சொல்லி விட்டு விடப்போகிறேனோ? ஸர்வேஶ்வரனாகக் கொடிநாட்டியிருக்கும் இடமெல்லாம் சென்று சொல்லுகிறேன். தன் வீரத்தைப் பேசுவார்

ப்ராவிக்கிற இடமெங்கும்; தன் வீரப்பாடு பேசுமிடமெங்கும். (தன் நிலைமை) என்னுடம்பைக் காட்டுகிறேன்.

(தான் முனநாள்) அன்று தான் இடைச்சேரியிலே வெண்ணெய் திருடி உரலோடே கட்டுண்டு விட்டுப் புறப்பட்டதும். (மின்னிடை) நீ களவுகாண்கிறது பெண்

---

திவ்ய தேசங்களிலும். (தன்னிலைமையெல்லாம் அறிவிப்பன்) இவ்வடிவைக்காட்டி ஆற்றாமையை விளைத்து மடலெடுக்கும்படிபண்ணி, "என்னுடைய உடம்பு கொடுப்பதில்லை" என்றிருக்கிற தன் துணிவையெல்லாம் அறிவிப்பன். நான் ஆகாது என்றிருந்தானத்தனை யென்கிறாள். இனி அதுக்கு உனக்கென்? என்ன; லோகமடையக் கைவிடும்படியாகப் பண்ணக்கடவேன்; பொரிபுறம்தடவி, தன்னை 'ஈச்வரன்' என்றிருப்பார் பக்கல் அவனிருக்குமிருப்பை நாட்டிலே வெளியிடக்கடவேன்.

இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணின் குணஹாநியை உபபாதிக்கிறார் மேல்,—(தான்) இது செய்தானாய் மேனாணித்திருக்கிற தான். (முனநாள்) செய்த நாள் பழகிற்றென்றிருக்கிறானோ? (மின்னிடையாய்ச்சியர்தம் சேரிக் களவின்கண்) அகங்கள்

---

உன்னுமிடமெல்லாம் சென்று பறைசாற்றுகிறேன். (தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன்) தன் வடிவைக்காட்டிப் பிரிந்து, ஆற்றாமையை விளைத்து, மடலெடுக்கச் செய்து, அப்படியும் தன்னைக் காட்டாதே என்னை வருத்தியதையெல்லாம் அறிவிப்பேன். அவன் என்னொருத்தியே ஆகாதென்றிருக்கையாலே, நான் அவனொருத்தனை உலகனைத்துக்கும் ஆகாதவனாக்குகிறேன். அவனுடைய துர்க்குணங்களை யெல்லாம் பறைசாற்றுகிறேன்.

இனி, தம்மையுள்ளிட்ட ஆழ்வார்களனைவரும் 'எத்திறம்' என்று மயங்கும் திவ்யசேஷ்டிதங்களை இழிதொழில்களாக நிரூபித்துப் பேசப் போகிறேன் என்னும் தம் துணிவை வெளியிடுகிறார் ப்ரபந்தகோஷத்தாலே. (தான் முனநாள்...பெற்றிமையும்) முன்னொரு நாள் இடைச்சேரியிலே வெண்ணெய் திருடி உரலோடே கட்டுண்டிருந்து விடுபட்ட பெருமையை ஊரறியச் செய்கிறேன். (தான்) இச்செயலைச் செய்து விட்டு 'தான்' என்ற மதிப்போடிருப்பதே! (முனநாள்) சிறுவயதிலேயேயன்றோ இத்தொழிலில் புகுந்தது! நீண்ட நாட்கள் ஆகிவிட்டதால் உலகினர் மறந்திருப்பார்கள் என்றிருக்கிறானோ? (மின்னிடை) களவு

**துன்னு படல்திறந்து புக்குத் தயிர்வெண்ணெய்**
**தன்வயிறார விழுங்கக் கொழுங்கயற்கண்** 138
**மன்னு மடவோர்கள் பற்றியோர் வான்கயிற்றால்**

***துன்னு படல் திறந்து***—நெருக்கமாகக் கட்டிவைத்த படலைத் திறந்து, ***புக்கு***—புகுந்து, ***தயிர் வெண்ணெய்***—தயிரையும் வெண்ணெயையும், ***தன் வயிறு ஆர தான் விழுங்க***—தனது வயிறு நிறையும்படி வாரி அமுது செய்தவளவில், ***கொழு கயல் கண்***—நல்ல கயல் மீன்போன்ற கண்களையுடைய, ***மன்னு மடவோர்கள்***—ஆயர்மாதர், ***பற்றி***—பிடித்துக்கொண்டு, ***ஓர் வான் கயிற்றால்***—ஒரு அழகிய கயிற்றால்,

---

களிடை காணக்கிடாய். (ஆய்ச்சியர் தஞ்சேரி) என்ன பட்டணத்தே புக்கான்? இடைச்சேரியன்றோ? என்ன மகுடப$_4$ங்க$_3$ம் பண்ணினன்? துன்னுபடலன்றோ? என்ன ப்ரதிமையெடுத்தான்? வெண்ணெயன்றோ? என்ன திருப்பணி செய்தான்? தன் வயிறு வளர்த்தானத்தனையன்றோ?

---

தோறும் தனித்தனியே கண்ட களவு, சேரிக்களவென்று - தான் ஒரு சேரியாகவன்றே களவுகண்டது. களவு கண்டு ஓடப்புக்கால் தொடருகிற பெண்களுடைய இடையினுடைய நுடங்குதல் காண்கைக்காகவன்றோ செய்தது. (துன்னு படல் திறந்து புக்குத் தயிர் வெண்ணெய்) நெருங்கின படலை

---

**செய்த தன்னைப் பிடிக்க ஓடிவரும்போது ஆய்ச்சியருடைய மின்னிடை நுடங்குவதைக் காணவன்றோ களவு செய்தது! (மின்னிடை ஆய்ச்சியர் தம்) களவுசெய்ததுதான் செய்தான்; என்னைப்போலே வீரபுருஷர்களிடமும்; புருஷோத்தமனிடமும் களவுசெய்தானோ? அப$_3$லைகளான பெண்களிடமன்றோ களவு செய்தான்! (ஆய்ச்சியர்தம் சேரிக் களவின்கண்) என்னைப்போலே, ஒன்பது நீண்ட தெருக்களும் கட்டுக்காவல் மிகுந்த வாசல்களுமுடைய நாக$_3$பட்டணத்திலேயோ களவிட்டான்? இடையர்களும், இடைச்சிகளும் வாழும் காவலில்லாத குடிசைகளுடைய இடைச்சேரியிலன்றோ களவிட்டது! (துன்னு படல் திறந்து புக்கு) என்னைப்போலே, பு$_3$த்$_3$த$_4$விஹாரத்தின் விமானமகுடத்தை இடம்புரி வலம்புரிதிருப்பி மகுடப$_4$ங்க$_3$ம்செய்து புகுந்தோ களவிட்டது? ஆயர்கள் நெருங்கின படலையிட்டு அதை அடைப்பதற்காக அதன்மேலே ஒரு மரத்தையிட்டுத் திருகிவைக்கிருப்பார்கள்; இந்த மகுடத்தை**

(சேரி) ஒழுகு ஒன்பதும் (துன்னு) மேலே படலிருக்கக் கீழே நுழைந்ததும் களவுகைவந்ததுமத்தனையன்றி, அவள் கோலிட்டுத் திருகி வைக்கும் யந்த்ரமறியான்; பல்கால் புக்க வழக்கத்தாலே அறியுமென்கை. (தன் வயிறார) திருமங்கையாழ்வாரைப் போலே பரார்த்த$_2$மாகக் களவு காண்கிறதன்று.

(கொழுங்கயல்) எட்டாதே திரிந்தவன் பிடியுண்ட ப்ரீதி. (வான்கயிறு) எட்டிற்றொரு கயிறு. பெற்றிமை-

---

யிட்டு வாசல்களை மரத்தையிட்டுத் திருகிவைப்பர்களாயிற்று; அவற்றைத் திறந்து கொடுபோய்ப்புக்கு. திறந்து வைத்தார்களாகில் அடைத்துக்கொடுபோய்ப்புக்கு களவு காண்பது துச்ச$_2$மான தயிரும் வெண்ணெயுமன்றோ? பௌ$_4$த்$_4$த$_4$ ப்ரதிமையோ? (தன்வயிறாரவிழுங்க) ஏதேனுமொரு திருமதில் செய்கைக்காகவோ? இவன் தீராமாற்றுச்செய்து அகப்படாதே திரிந்த இழவுதீர, அகப்பட்டபோதே "நல்ல தாம்பு" என்று நீளியதொரு கயிறு கொடுவந்து கொடுப்பாரில்லையிறே என்கிற அஹங்காரம் தோற்றப் பார்க்கிறபோதை கண்ணில் புகரையும் ஆச்சர்யமாயிருக்கிற வடிவையும். (மன்னு மடவோர்கள்

---

யன்றோ ப$_4$ங்க$_3$ம்செய்து புகுந்து களவுசெய்தான்! (படல் திறந்து புக்கு) ஸாதா$_4$ரணமாக ஆய்ச்சியர் படல்மேலே கோலிட்டுத் திருகி வைக்கும் யந்திரத்தைத் திறக்கக்கூட இவன் அறியான், படலின் கீழே புகுந்து களவுபுரியத்தான் தெரியும். ஆனால், இங்கு தன் விடாமையாலே பலகால் களவு செய்யப்புகுந்த பழக்கத்தால், படல் திறக்கையாகிற இவ்வரிய காரியத்தை ஸாதி$_4$த்தான்! (துன்னு படல் திறந்து புக்கு) நெருக்கமாக அடைத்து வைத்திருக்கையாலே திறந்து புகுந்தான், திறந்து வைத்திருந்தால் அடைத்துப்புகுவான். (தயிர் வெண்ணெய்) என்னைப்போலே ஸுவர்ணமயமான பு$_3$த்$_3$த$_4$ ப்ரதிமையையோ எடுத்தான்? எளிய தயிர்வெண்ணெயன்றோ திருடியது! (தன் வயிறார விழுங்க) என்னைப்போலே பரார்த்த$_2$மாகக் (1. பிறர் பொருட்டு; 2. பரன் பொருட்டு) களவு செய்தானல்லனே; ஸ்வார்த்த$_2$மாக (தன் பொருட்டு) அன்றோ களவு புரிந்தது.

(கொழுங்கயற் கண்) இப்படிக் களவுகண்டு அகப்படாமல் திரிந்தவன் அகப்பட்டதனாலுண்டான ஆநந்த$_3$ம் ஆய்ச்சியரின் கண்ணிலே தோற்றியிருக்கை. (மன்னு மடவோர்கள் பற்றி) இவன் அகப்பட்ட

**பின்னு முரலோடு கட்டுண்ட பெற்றிமையும் 139**
**அன்னதோர் பூதமா யாயர் விழவின்கண்**
**துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை 140**
**முன்னிருந்து முற்றத்தான் துற்றிய தெற்றெனவும்**

***உரலோடு***-உரலோடே (கட்டிவிட), ***கட்டுண்ட பெற்றிமையும்***—கட்டுண்டு கிடந்த பெருமையென்ன; ***ஆயர் விழவின்கண்***—இடையர்கள் (இந்திரனுக்குச்செய்த) ஆராதனையில், ***துன்னு சகடத்தால் புக்க பெருசோற்றை***-பலபல வண்டிகளால்கொண்டு சேர்த்த பெருஞ்சோற்றை, ***அன்னது ஓர் பூதம் ஆய்***—வாய் கொண்டு பேசத்தகாத ஒருபெரும் பூதவடிவுகொண்டு, ***முன் இருந்து***—கண்முன்னேயிருந்துகொண்டு, ***முற்ற*** — முழுவதும், ***தான்***—தானொருவனுகவே, ***துற்றிய***-உட்கொண்ட, ***தெற்றெனவும்***—வெட்கக்கேடென்ன;

---

பெருமை. அப்போதே உரலோடேயிருக்கச்செய்தே கண்டேனுகிலோ? என்று கருத்து.

---

பற்றி) இவன் அகப்பட்டபோதே ஒரு கைக்கு ஆயிரம் பெண்களாய் வந்து பிடித்து விடாதே நிற்பர்கள். (ஓர் வான்கயிற்றால்) அப்போது கைக்கு எட்டிற்றொரு கயிறு; நல்ல தாம்பன்றே. "கண்ணிக் குறுங்கயிறு" என்றும், "கண்ணியார் குறுங்கயிறு" என்றும், "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்றும் இதுதன்னை ஶ்லாகித்துவைத்தார்களிறே. (பின்னும் உரலோடு கட்டுண்ட பெற்றிமையும்) கையாலே பிடித்து விட்டார்களோ? (பெற்

---

வுடன், இவனுடைய ஒரு கையை ஆயிரம் பெண்கள் சூழ்ந்து பற்றிக் கொள்வார்கள். (ஓர் வான் கயிற்றால்) கைக்கு எட்டாத அவனைப் போலேயல்லாமல், நினைத்தவுடன் கைக்கெட்டியதொரு அழகிய கயிறு. "கண்ணிநுண் சிறுத்தாம்பு" [கண்ணி-1] "கண்ணிக் குறுங்கயிறு" [பெரியதிரு 11.5-4] "கண்ணியார் குறுங்கயிறு" [பெரியதிரு 5-9-7] என்கையாலே வான் கயிறென்றது பெரிய கயிறன்று; தீம்பனைக்கட்ட வல்ல நல்ல கயிறு. (பின்னும் உரலோடே கட்டுண்ட பெற்றிமையும்) பெண்கள் இவனைப் பற்றியது மாத்திரமல்ல; அதற்குமேலே அசேதனமான உரலோடே இவனைக் கட்டிவைத்தார்கள் அந்தப் பெருமையையும் ஊராறியச் சொல்லுகிறேன்! (கட்டுண்ட பெற்றிமை

(அன்னது) "அம்மே!" "அப்பூச்சி" என்று முகத்தைத் திரியவைக்கிருள். (முன்னிருந்து) ஒரு திரைவளைத்துக்

---

றிமையும்) தன்னுடைய பெருமை இதுவன்றே; அதுக்கு மேலே செய்ததொரு செயலன்றே இது.

(அன்னதோரித்யாதி.) நினைத்தவாறே துணுக்கென்னும் படியான வடிவையன்றே கொண்டது. (பூதமாய்) பூத வேஷத்தையும் பரிக்ரஹிப்பாருண்டோ? (ஆயர்விழவின்கண்) ஆரேனுமாக, நாழியரிசி ஜீவிப்பாரைத்தேடித்திரியுமாயிற்று, அங்கேபுக்கு ஜீவிக்கைக்கு; இடையருடைய உத்ஸவத்திலே. (துன்னு சகடத்தால் புக்க பெரும் சோற்றை) நால்வரிருவர் சுமந்துகொடுபோன சோற்றை ஜீவித்தானோ? நெருங்கின சகடங்களாலே கொடுபோய்ப்புக்கு மலைபோலே குவித்த சோற்றையன்றே ஜீவித்தது. * அட்டுக்குவிசோறிறே இது. (முன்னிருந்து) ஒரு திரையை வளைத்துத்தான் ஜீவிக்கப்

---

யும்) எவர்க்கும் கிடைக்காத இப்பெருமையைப் பாவியேன் அப்போதே யிருந்து காணப்பெற்றிலேனே! என்று கருத்து. பெற்றிமை-பெருமை; இங்கு விபரீத லக்ஷணையாலே சிறுமையைக் குறிக்கிறது

இதுக்குமேலும் ஒருசெயலையும் கூறுகிறேன். – (அன்னதோர்) வாய்கொண்டு பேசத்தகாததொரு வெறுக்கத்தக்க வேஷத்தை யன்றே போட்டுக்கொண்டான். (அன்னது) 'அம்மே' 'அப்பூச்சி' 'ஐயய்ய' என்று இக்கோரவடிவைக் காண வெறுத்து முகத்தைத் திருப்பிக்கொள்கிருன். (பூதமாய்) மிகத்தாழ்ந்த பூதவேஷத்தையும் எடுப்பாருண்டோ? (ஆயர்விழவின் கண்) பெரும்பசியனான பூதமாகை யாலே சோறு கண்ட விடமெல்லாம் திரியுமாயிற்று. தன்னைப் பற்றி நிற்கும் இடையர் சோற்றையும் விழுங்க முற்பட்டது. (துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை) நால்வரிருவர் சுமந்து சென்ற சோற்றையோ விழுங்கிற்று? வண்டி வண்டியாக வந்து குவித்த மலைபோன்ற சோறு முழுவதையுமன்றே விழுங்கிற்று. "அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறும்" [பெரியாழ் திரு 3-5-1] என்று சோற்று மலையையும், தயிர்க்குளத்தையும், நெய்க்குட்டையையும் ஒன்று சேர்த்தன்றே விழுங்கிற்று. (முன்னிருந்து) என்ன வெட்கங்கெட்ட செயல்! கணையுள்ளதாகில் ஒரு திரை யிட்டுக்கொண்டாவது விழுங்கியிருக்கக்கூடாதோ ? அதுவுமில்லை

**மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதனாய் 141**
**தன்னை யிகழ்ந்துரைப்பத் தான்முனநாள் சென்றதுவும்**
**மன்னு பறைகறங்க மங்கையர்தம் கண்களிப்ப 142**

*முனம் நாள்*—முன்னொரு காலத்தில், *வாழ் வேந்தர் தூதன் ஆய்*—பாண்டவர்களுக்குத் தூதனாய், *தன்னை இகழ்ந்து உரைப்ப*—(கண்டாரடங்கலும்) இழிவாகச் சொல்லும்படியாக, *மன்னர் பெரு சவையுள் சென்றதும்*—(துர்யோதநாதி) ராஜாக்களுடைய பெரிய ஸபையிலே சென்றதென்ன; *மங்கையர் தம் கண் களிப்ப*—(இடைப்) பெண்களின் கண் களிக்கும்படி, *மன்று பறை கறங்க*—(அரையிலே) கட்டிக்கொண்ட பறை ஒலிக்க,

---

கொண்டால் என்செய்யும்? (முற்றத்தான்) வயிறுதாரித்தனம். (தெற்றெனவும்) நிர்லஜ்ஜதையும்.

(வாழ்வேந்தர்) நாழியரிசியேற ஜீவித்தார்க்குத் தூது போம் வேண்டப்பாடு. (இகழ்ந்துரைப்ப) ஸ்ரீவிதுரரகத்தே உண்டது.

---

பெற்றதோ? (முற்றத் தான் துற்றிய) அதிலே சிறிது சோறு வைக்கத்தான் பெற்றதோ? (தான் துற்றிய) ஜீவிக்குமிடத்தில் சில பந்துக்களோடே தான் ஜீவிக்கப்பெற்றதோ? (தெற்றனவும்) இப்படி செய்தோமென்று லஜ்ஜிக்கத்தான் பெற்றதோ?

(மன்னர் பெருஞ்சவையுள்) ராஜாக்களுடையத் திரண்டு இடக்கிற பேரோலக்கத்தின் நடுவே, (வாழ்வேந்தர் தூதனாய்)

---

யாகையால் அனைவரும் காண முன்னிருந்து விழுங்கிற்று. (முற்றத் தான் துற்றிய) ஒரு கவளம் ஒருவருக்குக் கொடுக்கவில்லையே! என்ன வயிறுதாரித்தனம்! (தான் துற்றிய) உறவினர்களையுங் கூட்டிக்கொள்ளாமல் தானேயன்றோ ஏப்பம் விட்டது! (தெற்றெனவும்) இப்படிச் செய்ததில் ஒரு லஜ்ஜையுமில்லையே! தெற்றெனவு. தெளிவு; (இங்கு) வெட்கமின்மை.

இதற்குமேலும் ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள்: (மன்னர் பெருஞ்சவையுள்) ஒருவருமறியாத இடத்திலேயோ இவ்வெளிமை

(மன்னுபறை) பறைகொட்டுகைக்கு ஓராளில்லாமே அரையிலே கட்டிக்கொண்டது. (மங்கையர்) இது கொண்

---

தன்னை வாழ்வாகவும், துணையாகவும், தோழனாகவும், தூதனாகவும் உடையராயிருக்கிற பாண்டவர்களுடைய தூதனாய். (தன்னை இகழ்ந்துரைப்ப) தன்னைக் கண்டாரடைய அநாதரோக்தி பண்ணும்படியன்றோ செய்தது. (தான்) "இது செய்தோம் நாம் அன்று" என்றிருக்கிறானோ? (முனநாள் சென்றதுவும்) காலம் கடந்துபோயிற்று என்றிருக்கிறானோ? நேற்று செய்தாப்போலேயன்றோ இருக்கிறது

(மன்னு பறை கறங்க) இவ்வஸ்து ஸ்யப்ரவ்ருத்திக்கு ஸஹகரிப்பாரில்லாமையாலே தானே பறையை அரையிலே கோத்தன்றோ அடிக்கிறது. (மங்கையர்தம் கண் களிப்ப) இது செய்ததென்னென்றால், "கண்ட பெண்கள் கண்கள் களிக்கச்செய்தோம்" என்றிறே இவன் சொல்லுவது.

---

பட்டது? மன்னர்களனைவரும் திரண்டிருந்த பெரிய சபையிலே யன்றோ இது நடந்தது. (வாழ்வேந்தர் தூதனாய்) தூது சென்றது தான் சென்றான். உலகாளும் சக்ரவர்த்திகளுக்குத் தூது சென்றானோ? வாழ்க்கையோடு போராடிக்கொண்டிருந்த பாண்டவர்க்கன்றோ தூது நடந்தது! இப்பெருமை யாருக்குக்கிட்டும்! (தன்னை இகழ்ந்துரைப்ப) "பீஷ்மத்ரோணர்களையும், என்னையும் விட்டு ஏன் சூத்திரன் (விதுரன்) உணவை உண்டாய்?" என்று துரியோதனன் இகழ்ந்துரைக்கும்படியாக. (தான்) இது செய்தவனுக்குத் 'தான்' என்ற மதிப்பு எதுக்கு? (முனநாள் சென்றதுவும்) இது செய்து நாள் கடந்துவிட்டது என்று ஆறியிருக்கிறானோ? எனக்கு நேற்றுச் செய்தது போலேயன்றோ காட்சியளிக்கிறது.

இதற்கும் மேலே இந்தக் கூத்தைக்கூறுகிறேன் கேளுங்கள்:— (மன்னு பறை கறங்க) இவ்வெட்கங்கெட்ட செயலுக்குத் துணைக்கு ஒருவரும் வாராமையாலே, பறையைத் தன் இடையிலேயே கட்டிக்கொண்டபடி. (மங்கையர் தம் கண் களிப்ப) பெண்கள் கொண்டாடும் கூத்தாடிச் செயலன்றோ செய்தான்! மானமுள்ள பெரியவர்கள் நினைக்கவும் மாட்டாத செயலையன்றோ செய்தான்! (கொள்ளவிலும்

**கொன்னவிலும் கூத்தனாய்ப் பேர்த்தும் குடமாடி**
**என்னிவ னென்னப் படுகின்ற வீடறவும் 143**
**தென்னிலங்கை யாட்டி யரக்கர் குலப்பாவை**
**மன்ன னிராவணன்றன் நல்தங்கை வாளெயிற்றுத் 144**
**துன்னு சுடுசினத்துச் சூர்ப்பணகாச் சோர்வெய்திப்**

***கொல் நவிலும் கூத்தன் ஆய்*** —(பெண்களைக்) கொலை செய்கின்ற கூத்தை ஆடுபவனாய், ***பேர்த்தும்*** — மேலும், ***குடம் ஆடி***—குடங்களை யெடுத்து ஆடி, ***என் இவன் என்னப் படுகின்ற ஈடறவும்***—"இப்படியும் கூத்தாடுவானொருவனுண்டோ!" என்னும்படி பெற்ற சீர்கேடென்ன, ***தென் இலங்கையாட்டி***—தென்னிலங்கை அரசியும், ***அரக்கர் குலம் பாவை***—ராக்ஷஸ குலத்தில் தோன்றிய பதுமை போன்றவளும், ***மன்னன் இராவணன் தன் நல் தங்கை***—அரசனாகிய இராவணனுடைய அன்புக்குரிய தங்கையானவளும், ***வாள் எயிறு***—வாள்போன்ற (ஒளியுள்ள) பற்களையுடையவளும், ***துன்னு சுடு சினத்து***—சுடக்கடவதான கோபத்தையுடையவளுமான, ***சூர்ப்பணகா***—சூர்ப்பணகையென்பவள்,

---

டாட வல்லவர்களன்றே. (கொன்னவிலும) கண்டார் பிழையாதபடியிருக்கிற அழகு. (என்னிவனென்ன) என் செய்ய? இவனிப்போது போகானோ? என்னும்படி படுகிற பாடு.

---

(கொன்னவிலும் கூத்தனாய்) கண்டார்க்குப் பிழைக்கவரிதான கூத்தையுடையனாயிற்று. (பேர்த்தும் குடமாடி) அதுக்கு மேலே குடங்களையேந்திக் குடக்கூத்தாடி. என்னிவன் என்னப்படுகின்ற ஈடறவும்) இவன் படுகிற பாடு என்? நாழியரிசி ஜீவிப்பார்க்கு இப்பாடுபடவேணுமோ? என்று சொல்லுகிற எளிவரவையும்.

---

**கூத்தனாய்) கூத்தாடும்போது கண்ட கன்னியர்களைக் கொலைசெய்ய வல்ல அழகையுடையவனாய். (பேர்த்தும் குடமாடி) அதுக்கும் மேலே குடத்தையெடுத்தேறவிட்டுக் கூத்தாடி. (என்னிவன் என்னப்படுகின்ற ஈடறவும்) என்செய்வது? இப்படிக் கூத்தாடி நம்மைக் கொலை**

(தென்னிலங்கை) அவ்வைஶ்வர்யத்துக்கு இட்டுப் பிறந்தவள். (அரக்கர்) அவள் பிறந்தாற்போலே பிறந்தாரில்லை. (நற்றங்கை) ராவணனுக்கு நேரே உடன் பிறந்தவள். (சுடுசினத்துச் சூர்ப்பணகா) அவளை யொப்பாரில்லை. ஸௌந்தர்யத்தால் குறைவற்றவள். (சோர்

---

(தென்னிலங்கையாட்டி) சொல்லீர் அவளொருத்தியை. அவளைப்போலே பிறந்தாருமுண்டோ? "ராவணன்" என்று ஒரு பேர் மாத்ரமாய், அவளன்றோ அப்படைவீட்டுக்கு நிர்வாஹகையாய்ப் போந்தாள். (அரக்கர் குலப்பாவை) "𑌜𑌨𑌕𑌸𑍍𑌯 𑌕𑍁𑌲𑍇 𑌜𑌾𑌤𑌾" (*ஜநகஸ்ய குலே ஜாதா*) என்னுமாபோலே ராக்ஷஸ குலத்துக்கு நிதி போலேயுள்ளாள். (மன்னனிராவணன்) சொல்லாய் ராஜராஜனை. அவனைப்போலே வாழ்ந்தாருண்டோ? (தன் நல் தங்கை) அவனுக்கு நல்ல ஜீவன்போலே நேரே தங்கை. (வாளெயிறு) சொல்லீர் எயிற்றிளெளியை. ஸ்த்ரீயாகில் அங்ஙனேயிருக்கவேண்டாவோதான்! (துன்னு சுடுசினத்து) எயிற்றிளெளிபோலேயோ அகவாயில் த்வேஷ வெள்ளமிருக்கிறபடி, (சூர்ப்பணகா) சூர்ப்பம் போன்ற

---

**செய்யாமல் இவன் இப்போது இவ்விடத்தைவிட்டுப்போகமாட்டானே என்று மங்கையர் கருதும்படியிருக்கும் எளிமையும்.**

**கீழே சொன்னதெல்லாம் கிடக்கட்டும்; இந்தக் கொடுமையைக் கேளுங்கள்.–(தென்னிலங்கையாட்டி) இவளைப்போலே பிறந்தாருண்டோ? "ராவணன் இலங்கைக்கரசன்" என்று பெயரேயாய், உண்மையில் இலங்கையை நடத்திவந்தவள் இவளன்றோ. இலங்கைச் செல்வத்துக்கு இட்டுப்பிறந்தவளன்றோ. (அரக்கர் குலப்பாவை) அரக்கர்குலத்துக்கே ஒரு கண்மணியாகவன்றோ பிறந்திருந்தாள். (மன்னனிராவணன்) அடாடா! மன்னர்மன்னனை அவனைப்போலும் வாழ்ந்தாருண்டோ? (தன் நல்தங்கை) அவனுக்குமிருக்குமிராய் நேரே உடன்பிறந்தவளன்றோ. (வாளெயிற்று) அவளுடைய பல்லின் ஒளிதான் இருந்தபடியென்? பெண்ணென்றால் இப்படியன்றோ பல்லமுகிருக்கவேண்டும். (துன்னு சுடுசினத்து) வெளியழகு கிடக்கட்டும்; உள்ளழகு இருந்தபடியென்! காதலின் தன்மையறியாத இவனிடம் அவள் கொண்ட கோபம் அவளுடைய உள்ளத்தின் அழகையன்றோ காட்டுகிறது. (சோர்வெய்தி) என்னைப்போலே காதலால் உடல் சோர்**

**பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால் 145**
**தன்னை நயந்தானைத் தான்முனிந்து மூக்கரிந்து**
**மன்னிய திண்ணெனவும் வாய்ந்த மலைபோலும் 146**
**தன்னிகரொன் றில்லாத தாடகையை மாமுனிக்காத்**

***புலர்ந்து***—மேனி துவண்டு. ***எழுந்த காமத்தால்***—கிளர்ந்த காம நோயினால். ***பொன் நிறம்கொண்டு***—நிறம் வெளுத்து. ***சோர்வு எய்தி***—பரவசப்பட்டு [தளர்ந்து] ***தன்னை நயந்தானை***—தன்னை ஆசைப்பட்ட அந்த அரக்கியை, ***தான் முனிந்து***—தான் சீறி, ***மூக்கு அரிந்து***—மூக்கையறுத்து, ***மன்னிய திண்ணெனவும்***—நிலையான திண்மை கொண்டிருப்பதென்ன; ***வாய்த்த மலை போலும்***—பெரிய மலைபோன்ற உருவமுடையவளும், ***தன் நிகர் ஒன்று இல்லாத***—ஒப்பற்றவளுமான, ***தாடகையை***—தாடகையென்பவளை, ***மாமுனிக்கா***-விஶ்வாமித்திரமுனிவர்க்காக,

---

வெய்தி) அவஶையாய். (பொன்னிறங்கொண்டு) உடம்பு வெளுத்து. (புலர்ந்து) துவண்டு. (எழுந்த காமம்) மிக்க ஸ்நேஹத்தாலே தன்னை ஆசைப்பட்டவளை. (தான்)

---

நக,த்தையுடையவள். (சோர்வு எய்தி) பெருமாளோடு, தான் நினைத்து வந்தபடி பரிமாறப் பெருமையாலே சோர்ந்து பூ,மியிலே விழ. (பொன்னிறம் கொண்டு) அபி,மதம் பெறுமை யாலே விவர்ணமான உடம்பையுடைய ாய். (புலர்ந்தெழுந்த காமத்தால்) கிளர்ந்தெழுந்த ாமத்தையுடையளாய். (தன்னை நயந்தாளை) தன்னை ஆசைப்பட்ட இதன்றோ அவள் செய்த த்,ரோஹம். தன்னை ஆசைப்பட்டாரை முனியக் கடவதோ? (தான் முனிந்து) ஆசைப்பட்டாரை ஒக்க ஆசைப்

---

படுறவளன்றோ. (பொன்திறம் கொண்டு) காதல் ஈடேறுமையாலே என்னைப்போலே உடம்பு வெளுத்தானன்றோ. (புலர்ந்து) என்னைப் போலே மேனி துவண்டாளன்றோ. (எழுந்த காமத்தால்) கடலின் மிகப்பெரிதாகக் கிளர்ந்த காதலாலே. இவனிடம் கடுங் காதல் கொண்டதற்கு நல்ல பரிசு! (தன்னை நயந்தாளை) இவனை ஆசைப் பட்டதுதான் கிமர் இவள் செய்த குற்றம்! (தான் முனிந்து) ஆசைப் பட்டவர்களைத் தானும் ஆசைப்படவேண்டியிருக்க, அது செய்யாசு

வேண்டாவென்பதுமன்றிக்கே, மூக்கையறுப்பதே! என்ன வீரமோ!

---

படுமதொழிய, அது செய்யாவிட்டால் பின்னை முனியவும் வேணுமோ? (மூக்கரிந்து) முனிந்து விட்டுவிடப்பெற்றதோ? அவளுக்கு வைரூப்யத்தையும் விளைத்துவிடவேணுமோ? (மன்னிய திண்ணெனவும்) ஸ்த்ரீவத₄ம் பண்ணினுல் அநுதாபமு மின்றிக்கே. பெரிய ஆண் பிள்ளைத்தனம் செய்ததாக நினைத் திருக்கிற நிலைநின்ற த்₄ருட₄த்வமும்.

(வாய்த்த மலை போலும்) சொல்லீர் அவளுடைய வடிவின் பெருமையை. (தன்னிகரொன்றில்லாத தாடகையை) தனக்கு ஒப்பாரின்றிக்கே பெரிய மலைபோலேயிருக்கிற வடிவையுடைய தாடகையை; "நீ ஸ்த்ரீவத₄ம் பண்ணிற்று" என்று மடியைக் கோத்துப்பிடித்துக்கேட்டால், "ஒரு பார்ப்பான் சொல்லச் செய்தேன்" என்றுயிற்றுச் சொல்லுவது. "இது ப₄ட்டர் அருளிச்செய்யக்கேட்டேன்" என்று பிள்ளை அருளிச்செய்வர், (மாமுனி) அவனொருவன்படியிருந்தபடியென்! ஸ்ரீஜநகராஜன்

---

விடிலும் கோபப்படுவதோ தக்கது? (மூக்கரிந்து) கோபித்தாலும் தொலைகிறது: மூக்கையல்லவோ அறுத்துவிட்டான். (மன்னிய திண் ணெனவும்) இக்கொடிய செயலுக்கு அநுதாபமாவது பட்டாஞ? இல்லையே; பெரிய வீ ர ச் செ ய ல் செய்தவன்போலே நிலைநின்ற திண்மையோடன்றோ இருந்தான்! இதுவா வீரம்? திண்ணெனவு— திண்மை.

கடைசியாகக் கொடுமையின் ஶிக₂ரமொன்றைக் கூறுகிறேன் கேளுங்கள்: — (வாய்த்த மலைபோலும்) என்ன உடம்பு படைத்திருந் தான்? (தன்னிகர் ஒன்றில்லாத தாடகையை) அவளுக்கு ஒப்பு ஒரு வருண்டோ அவள் போனுலும் ஆறியிருப்பதற்கு? (மாமுனிக்கா) "நீ ஸ்த்ரீவத₄ம் பண்ணிஞய்" என்று மடிபிடித்துக் கேட்டால். "ஒரு பார்ப்பான் (சாஸ்திரஞான முடையவன்) சொல்லிச் செய் தேன்" என்று அவன்மேல் பழியேறும்படியன்றோ தந்திரமாகத் தான் இக்கொடுமை செய்தது! "இவ்வர்த்த₂த்தை பட்டர் அருளிச் செய்யக் கேட்டேன்" என்று நம்பிள்ளை அருளிச்செய்வர் என்று நாயனுர். (மாமுனிக்கா) இவனைப் பிராட்டியோடு கூட்ட நினைத்த

**தென்னுலகை மேற்றுவித்த திண்டிறலும்**
**மற்றிவைதான் 147**
**உன்னி யுலவா வுலகறிய வூர்வன்நான்**
**முன்னி முளைத்தெழுந் தோங்கி யொளிபரந்த 148**
**மன்னியபூம் பெண்ணை மடல்.**

பெரியதிருமடல் முற்றிற்று.

*திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.*

***தென் உலகம் ஏற்றுவித்த***—யமலோகமடைவித்த. ***திண் திறலும்***—மஹாபலமென்ன, ***மற்று இவை தான்***— இப்படியாகவுள்ள மற்றும் பல செய்கைகளும், ***உன்னி உலவா***—நினைத்து முடிய மாட்டா; ***உலகு அறிய***—அப்படிப்பட்ட சேஷ்டிதங்களையெல்லாம் உலகத்தாரறியும்படி வெளிப்படுத்திக்கொண்டு. ***நான்***—பரகாலநாயகியாகிய நான். ***முன்னி***—முன்னின்று. ***முளைத்து எழுந்து ஓங்கி ஒளி பரந்த மன்னிய பூ பெண்ணை மடல் ஊர்வன்***— முளைத்து எழுந்து வளர்ந்து ஒளிவீசும் நிலைநின்ற அழகிய பனைமடலைக்கொண்டு மடலூரக்கடவேன்.

பதவுரை முற்றிற்று.

---

(மாமுனிக்கா) ஒரு பார்ப்பான் சொன்னனிறே. (தென்னுலகம்) அவளிங்கிருக்கவும் பெற்றளோ?

---

திருமகளுடைய ஆற்றாமைக்கு உதவ, கடுகக் கொடுசென்றவன், கையும் மடலுமாயிருக்கிற என் ஆற்றாமைக்கு உதவக் கொடுவாராதொழிவதே!

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்த
பெரியதிருமடல் வ்யாக்யானம் முற்றிற்று.

அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் திருவடிகளே ஶரணம்.

---

மஹாதபஸ்வியான விஶ்வாமித்ரர்க்கன்றோ இவ்விழுக்கைத் தேடி வைத்தான். (தென்னுலகம் ஏற்றுவித்த) சூர்ப்பணகையையாவது இவ்வுலகில் விட்டுவைத்தான்; இவளை யமனுலகுக்கே ஏற்றிவைத்து விட்டான். என்ன கொடுமை! (திண்திறலும்) அபலைகளிடத்திலே [illegible] இவனுடைய ப[illegible] என்னென்று புகழ்வது?

(உலவா) ஆபத்துக்கு நான் தேடிவைத்ததுக்கு ஒரு முடிவில்லை. உலவு-முடிவு; உலவா-முடியா என்றபடி. (முன்னி) "மடலெடுக்கக் கடவேன்" என்று முற்கோலி. (முளைத்தெழுந்து ஓங்கி) உயர்ந்து ஒளிமிக்கு அழகியதாய் நிலைநின்றவை மடலாயிருக்கிறபடி. பிராட்டிக்கு விஶ்வாமித்ரபகவானைப்போலே இவளுக்கும் இம்மடல். பெண்ணை யாகிறது-பனை.

பெரியதிருமடல் வ்யாக்யாநம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

(மற்றிவைதான் உன்னி உலவா) ஆபத்தனம்போலே மற்றும் தான் தேடிவைத்திருக்கும் இவளைப்பற்றிய தாழ்வுரைகள் நினைத்து முடியமாட்டா. ஆநந்தத்தை நினைக்க முற்பட்டு "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்று வேதம் பட்டது படுமித்தனை. இவற்றைச் சொல்லத் தொடங்கிய மாத்திரத்தில் அவன் அலறிக்கொண்டு என் காலிலே விழுவானாகையாலே எனக்கு இவை ஆபத்தனம் போன்றவை. (உலகறிய ஊர்வன் நான்) சேதநர் என்று பெயர் படைத்தவர் அனைவரும் இவற்றை அறியும்படியாக நான் மடலூரக் கடவேன். (முன்னி) "மடலெடுக்கப்போகிறேன்" என்று முன்னின்று. இனி அவன் வரப்பார்த்திருக்கமுடியாது என்கை. எப்படிப்பட்ட மடல்? எனில்: (முளைத்து எழுந்து ஓங்கி ஒளிபரந்த மன்னிய பூம் பெண்ணை மடல்) மண்ணிலே முளைத்து உயர எழுந்து மிக உயர்ந்து விளங்கி ஒளிவீசும் நிலைநின்ற அழகிய பனைமடலை ஊரக்கடவேன். (ஊர்வன் நான்...மடல்) என் கையிலே சிறந்த ப்ரஹ்மாஸ்திரமிருக்கிறது. இனி எனக்கு என்ன குறை? என் காரியம் கடேறத் தட்டில்லை என்கை. பெருமானை சீதாபிராட்டியோடு கூட்டிவைத்த விஶ்வாமித்ரபகவானைப்போலே தன்னையும் அவனோடு இம்மடல் கூட்டிவைக்குமாகையாலே இதைக் கொண்டாடுகிருள். பெண்ணை—பனை.

ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய திவ்யப்ரபந்தஸாரத்தில் பெரியதிருமடல் வ்யாக்யானம் முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

பெரியதிருமடல் முடிவில் அநுஸந்திக்கும் தனிப்பாடல்

**கம்பர் பாடியது**

**என்னிலைமை யெல்லா மறிவித்தா லெம்பெருமான்**
**தன்னருளு மாகமும் தாரானேல்—பின்னைப்போய்**
**ஒண்டுறைநீர் வேலையுலகறிய வூர்வன்நான்**
**வண்டறை பூம் பெண்ணைமடல்.**

**பதவுரை:—என் நிலைமை எல்லாம்**—என் அவஸ்தைகள் முழுவதும். **அறிவித்தால்**-தெரிவித்தபின்பும். **எம்பெருமான்**-என் ஸ்வாமியான ஸர்வேஶ்வரன், **தன் அருளும்**—தன் கிருபையையும். **ஆகமும்**—தன் திருமார்வையும். **தாரான் ஏல்**—தரவில்லையாகில், **பின்னை போய்**—அதன்பின் சென்று, **ஒண்துறை நீர் வேலை உலகு அறிய**—ஒளிபொருந்திய துறைகளையுடைய நீர்நிரம்பிய கடல்சூழ்ந்த உலகினர் அறியும்படியாக, **நான்**—நான், **வண்டு அறை பூம் பெண்ணை மடல் ஊர்வன்**—வண்டுகள் ஒலிக்கும் அழகிய பனைமடலை ஊரக்கடவேன்.

**அவ:**—சிறியதிருமடலின் கடைசியிலுள்ளதைப்போல், இத்திருமடலிலும். பரகாலநாயகியின் பாசுரமாகவே கம்பர் பாடிய இப்பாடல் கடைசியில் அநுஸந்திக்கப்படுகிறது. கம்பருக்குத் திருமங்கையாழ்வாரிடமுள்ள பக்தியைக் காட்டுகின்றன திருமடல்களிலுள்ள இப்பாடல்கள்.

**வ்யா:**— (என்னிலைமை...தாரானேல்) இவ்விரண்டடிகளும் பெரியதிருமடலில் (134, 135) இரண்டடிகளாக அமைந்துள்ளன. அங்கு வியாக்கியானம் காண்க. கம்பராமாயணத்திலும் பல பாடல்கள் திருமங்கைமன்னனின் பாடல்களைச் சொல்லிலும் பொருளிலும் ஒத்திருப்பதைக் காணலாம். (பின்னைப்போய்) அவன் செய்யவேண்டியதைச் செய்யாவிடில், நான் செய்யத்தகாததைச் செய்கிறேன். நானிருக்குமிடம் அவன் வரவேண்டியிருக்க, அவனிருக்குமிடம் நான் செல்கிறேன். (ஒண்டுறை நீர் வேலை உலகறிய) ஒளிபொருந்திய துறைகளையுடையதும், நீர் நிரம்பியதுமான கடல் சூழ்ந்த உலகினர் அறியும்படியாக. (ஒண்டுறை) முத்தும் பவழமும் சிதறிக்கிடக்கையாலே ஒளிபெற்றிருக்கை. (உலகு) உலகினர்; உயர்ந்தோர் என்றுமாம். (ஊர்வன் நான்...மடல்) வண்டு ஒலிக்கும் அழகிய பனைமடலை ஊரக்கடவேன்.

மறம்ருஂ பாடல்

(இதை அனுஸந்திக்கும் ஸம்ப்ரதாயமில்லை என்பர்.)

**மண்ணில் பொடிப்பூசி வண்டிரைக்கும் பூச்சூடி**
**பெண்ணை மடல்பிடித்துப் பின்னே—அண்ணல்**
**திருநறையூர் நின்றபிரான் தேர்போகும் வீதி**
**பொருமறையாய்ச் செல்வம் பொலிந்து.**

பதவுரை:—**மண்ணில் பொடி பூசி**—பூமியிலுள்ள துகள்களைப் பூசிக்கொண்டு, **வண்டு இரைக்கும் பூ சூடி**—வண்டுகள் ஒலிக்கும் பூக்களைச்சூடி, **பெண்ணை மடல் பிடித்து**—பனை மடலைக் கைக்கொண்டு, **பின்னே**—அதற்குமேல், **அண்ணல்**—ஸ்வாமியாய், **திருநறையூர் நின்ற பிரான்**—திருநறையூரில் நின்ற உபகாரகனுடைய, **தேர் போகும் வீதி**—தேர் ஓடுகிற தெருவிலே, **செல்வம் பொலிந்து**—செல்வம் நிறைந்து, **பொரும்**—நிறையும்படி, **அறையாய்**—கூப்பிடாய்.

**அவ:**—இப்பாசுரத்தில் மடலூரும்போது தன் வேஷமிருக்கும்படியையும், மடலெடுத்தால் வரும் பலனையும் காட்டுகிறார்.

**வ்யா**—(மண்ணில் பொடிப்பூசி) அவன் ஆதரிக்காத இவ்வுடம்பில் அநாதரவுதோற்ற மண்பொடியைப் பூசிக்கொண்டு. (வண்டிரைக்கும் பூச்சூடி) "மலரிட்டு நாம் முடியோம்" என்னும் நிலைபோய் பூச்சூடி வருகிறாள், தன் முயற்சியில் கைவைக்கையாலே. (பெண்ணை மடல் பிடித்து) பனைமடலைக் கைக்கொண்டு. (பின்னே) அதுக்கும் மேலே. (அறையாய்) அவனுடைய சேஷ்டிதங்களை எல்லோருமறியும்படி கோஷிப்பாயாக. எங்கே கோஷிப்பது? எனில்: (அண்ணல்...வீதி) ஸ்வாமியாய், திருநறையூரில் நின்ற உபகாரகனுடைய தேர்போகும் ராஜவீதியிலே கோஷிப்பாய். (பொரும் அறையாய்) வீதிநிறையும்படி கோஷிப்பாய். இதனால் பலன் என்ன? எனில்: (செல்வம் பொலிந்து) நீ கோஷித்த மறுகணமே கைங்கர்யச் செல்வம் நிறைந்து விளங்கப்பெறுவாய். உன் கூக்குரல் செவிப்பட்டவுடன் அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து கைங்கர்யச்செல்வத்தைக் கொடுப்பான். (தேர் போகும் வீதி அறையாய்) இன்றும் திருத்தேரன்று திருமடல் ஸேவிப்பது இப்பாசுரத்தை அடியொற்றியிருப்பதாகத் தோன்றுகிறது.